# அரசமாதவன்






ஆக்கியவர்

ம. க. ஜயராம் நாயுடு அவர்கள்

தமிழாசிரியர்

If you want my name
See Page 33
See Page 45

பாரதி கழகம்

பெரியமெட், சென்னை

 [விலை, அணு ௰௨

# உள்ளுறை



G. Narayanan IVth Form

# நூன்முகம்

படிப்பவர் மனத்திற்கு மிக்க இன்பத்துடன் ஊக்கத்தையும் அளிக்கக் கூடியதும், சுவை பல நிறைந்ததும், புதுமையான நிகழ்ச்சிகள் பலவற்றைத் தன்பா லுடையதும், அளவற்ற நன்னெறிகளை மக்களுக்குப் புகட்டுவது மாய விசுவாமித்திர முனிவனுடைய வரலாற்றினைத் தொகுத்து ஒரு நூலாக்கி வெளியிட யான் பன்னாளாய் விழைந்திருந்தேன். என் விருப்பத்திற் கேற்றவாறு செய்யப் போதிய நேரம் கிடைத் திலது; ஆயினும், கிடைத்த பொழுதில் என்னால் இயன்றவரை முயன்று கௌசிகனைப் பற்றி ஆங்காங்குக் குறிப்பாய் உணர்த்தும் வடமொழி தென் மொழிகளா லியன்ற பாரதம் இராமாயணம் முதலிய நூற்களை நன்கு ஆய்ந்து, கிடைத்த செய்திகளை முறையே தொகுத்துச் சுருங்கச் சொல்லி, அரசமாதவன் என்னும் பெயருடன் திகழ இந்நூலை யாக்கினேன்.

இடங்களுக் கேற்றவாறு கதைப் போக்கை யொட்டி ஒழுங்குடன் வரையப்பட்ட இந்நூல், மாணவர்க்கும் மற்றை யோர்க்கும் நன்கு பயன்படக் கூடிய தாகு மென்று யான் நம்புகின்றேன். இச்சிறிய நூலிற் குற்றங் குறைக ளிருப்பின் உலகம் பொறுத் தருள்வதாக.


பெரியமெட், சென்னை
4—12—28 } ம. க. ஜயராம் நாயுடு

ஸ்ரீ

# அரசமாதவன்

## பிரிவு - க

## கௌசிகன் பிறப்பு

திருவுடைப் பாரத நாட்டை யாண்ட மாண்புடை மன்னர் பலருட் குசன் என்பானும் ஒருவ னுவான். அவன், படைப்புத் தொழில் கடவுளாகிய நான்முகத்தோன் வழித் தோன்றிய தோன்றல்களுட் சிறந்தவன். முன்னொரு காலத்தில் இந்நாட்டின் வடக்கி லிருந்து அவ்வேந்தன், பல்வேறு நாடுகளையும் தன் ஆளுகைக் குட்படுத்திப் பண்புடன் செங்கோ லோச்சித் திகழ்ந்தான். குற்றமற்ற அம் மன்னனுக்குக் குசன், குசநாபன், அதூர்த்தன், வசு என்னும் ஆண்மக்கள் நால்வர் இருந்தனர். எல்லாப் பேறுகளையும் ஒருங்கே வாய்க்கப் பெற்றிருந்த அவ்வரசன், உரிய பருவத்தில் தன் மைந்தரைக் கல்வி கற்கச் செய்து, நல்லினத்தினராய் நடக்கப் பணித்தான். 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்னும் மூதுரைக் கிணங்க அவ்வரசிளங் குமரர், தம் தந்தையாருடைய சொற்களைத் தலைமேற் கொண்டு நன்றாய்க் கல்வி கற்றதுடன் அரசர்க் குரிய கலைகளையும் பயின்று, வீரத்திற் சிறந்தவராய் விளங்கினர். நன்னாட்களில் அம்மைந்தருக்கு அழகில் மிக்க பெண்மணிகளை மன்றல் புரிவித்து மன மிக மகிழ்ந்தான் மா மன்னனாய குசன்.

தன் மைந்தர் மன மொத்த மனைவியருடன் இனிதாக வாழ்ந்திருந்த காலத்தில் அவ்வேந்தன், குசனுக்கு மலைபடு பொருள்கள் மிகப் படைத்த கௌசாம்பி என்னும் நாட்டை

யும், குசநாபனுக்கு அருமையான மகோதயம் என்னும் நாட்டையும், வசுவுக்குப் பல வளங்களும் நிறைந்த கிரிவிரசம் என்னும் நாட்டையும், அதூர்த்தனுக்கு தன்மவனம் என்னும் வளம் பல படைத்த புனித மாய நாட்டையும் அளித்து முடிசூட்டி, அந்நால்வரையும் மன்ன ராக்கினுன். அவ்விள மன்னர், தம்முடைய நாடுகளைக் கைப்பற்றித் தந்தையினுடைய கட்டளைக் குட்பட்டுச் செவ்வனே அரசாண்டு வந்தனர்.

எல்லா வளப்பங்களையும் மிகுதியாகப் பெற்றிருந்த குளிர் மகோதய நாட்டைச் சிறப்புடன் அரசாண்ட குசநாபனுக்குப் பல பெண் பிள்ளைகள் பிறந்தனர். அப்பெண்கள் நாளடைவில் நன்ருய் வளர்ந்து கல்வி கற்று, அறிவிலும் அழகிலும் மிக்கவராய் விளங்கினர். நாடோறும் மாலைப் பொழுதில் அவர், அரண்மனைக் கருகி லிருந்த தொரு பெரிய பூஞ்சோலையில் வண்ட லிழைத்தல் வழக்கம். ஒருநாள் அக் கன்னிகள் பூஞ்சோலையிற் களிப்புடன் விளையாடிக் கொண்டிருந்த பொழுது வாயுதேவன் அங்கெய்தி, அம்மகளிருடைய களியாட்டைக் கண்டான்; உவகை மிகக் கொண்டான்; கட்டழகை யுற்று நோக்கி அவரை மணக்க எண்ணங் கொண்டான்; அழகுடன் நடந்து சென்று அவர் எதிரிற் புன்சிரிப்புடன் நின்ருன்; மிக்க மகிழ்ச்சியுடன் அவரை நோக்கி, “நறுமணம் மிக்க அழகிய பூக்களைக் கூந்தல்களிலும் கைகளிலும் கொண்டு செந்தாமரைச் செல்வியை யொப்ப விளங்கும் நல்லியல் நங்கைமீர்! மாந்தளிரினும் மென்மைத்தாய உடம்பை யுடைய நீவிர் யார்?” என்று பரிவுடன் வினவினுன்.

தற்செயலாய் அங்ஙனம் தம் முன்னர் தோன்றிப் பேசிய ஆண்மகனைப் பார்த்து அவ்வரசிளம் பெண்கள் நாணினர்;

தலை குனிந்து ஒதுங்கினர் ; மன்னன் மகளிர் அவ ராதலாலே ஒருவாறு நாணத்தை யொழித்து மனத் துணிவுடன் தம் முன்னர் போந்த ஆடவனை நோக்கி, "யாம் இந்நாட்டை யாளும் மாட்சிமை பொருந்திய மன்னருடைய செல்வப் புதல்விக ளாவோம். நீர் யாவிர்? மணவினை முடிக்காத கன்னியராய யாம் விளையாடும் இவ்விடத்தை நீர் அடைவா னேன்? மதி மயக்கத்தால் இங்ஙனம் வரலானீர் போலும். எம்முடைய தந்தையார் காணின், உம்மை நன்றாய்த் தண்டிப் பார்; விரைவில் இச்சோலையை விட்டு அப்புறம் செல்வீர்," என்று சொல்லினர்.

மங்கையர் உரையைக் கேட்டு வாயுதேவன், புன்முறு வல் பூத்து. அவரை அன்புடன் பார்த்து, "தேன் மொழிக் குயில்காள்! புத்தமு தன்ன உம்முடைய மொழிகளைக் கேட்டு என் மனம் நெக் குருகுகின்றது. இளந் திங்களைப் போன்ற நுதலைப் படைத்த உம்முடைய வடிவழகையும், அறி வின் திறத்தையும், ஒழுக்கத்தின் உயர்வையும், வண்டலாடும் அழகையும் கண்டு களிகூர்ந்து, உம்மிடம் பேரன்பு கொண் டேன்; உம்மை மணந்து இல்லறமாய நல்லறத்தை இனிதாக நடத்த மனங் கொண்டுளேன் ; மயிலைப் போன்ற சாயலை யுடைய மங்கையரே! என்னிலும் உயர்ந்த தோர் ஆண்மகனை மணாளனாக நீவிர் யாண்டும் பெறமாட்டீர். கடவுளால் படைக்கப்பட்டு எல்லா உலகங்களிலும் நிறைந்துள்ள அனைத் துயிர்களுள் யான் ஒருவனே மிக்க வல்லவ னாவேன் ; எல்லா உயிர்களுக்கும் உயிராய வாயுதேவன் யான் ; பொற்பூம் பாவையரே! புகழ் மிகப் படைத்த என்னை மணந்து நலம் பெற உமக்குத் தடையிராது என்று எண்ணுகிறேன். தற் செயலாய் இப்பொழுது யான் ஈண் டடைந்ததும், முற்பிறப் பில் நீவிர் நோற்ற நோன்பின் பலனே யாகும் என்று நினைக்

கின்றேன். என்னை மணந்து இனிதாக வாழ்வதில் உமக்கிருக்கும் விருப்பத்தை யறிய விரும்புகிறேன்," என்று இன்பம் பயப்பக் கேட்டான்.

வாயுதேவனுடைய மொழிகளைக் கேட்டு அக்கன்னியர், "ஐயா! நீர் அனைவரினும் மிக வல்லவர் என்பதையும், ஐம்பெரும் பூதங்களுள் ஒருவ ராவீர் என்பதையும் யாம் அறிவோம்; ஆயினும், உம்முடைய அறிவின் திறத்தை யாம் இதுவரை யறிந்திலோம்; இப்பொழுதே தெரிய லானோம். உடம்பின் வல்லமைக் கேற்ற அறிவின் வன்மை உமக்கில்லாமற் போன தென்னே? யாம் கன்னியர் என்பதை முன்னரே உம்மிடம் தெரிவித்தோம். ஒழுக்கத்திற்கு மாறாக எம் எதிரில் நீர் தோன்றியது மன்றி அடாத சொற்களையும் பேசத் தொடங்கினீர். இங்ஙனம் பேச வந்தது உமக்குத் தகுமா? எம்மை யீன்று வளர்த்த தந்தையாருடைய விருப்ப மின்றி யாம் எப்படி ஒருவரை மணக்கக் கூடும்? ஈண்டு நிற்றலை யொழித்து எம்முடைய தந்தையாரிடம் சென்று கேளும். அவருக்கு விருப்ப மிருக்குமாயின், உம்மை மணக்க யாம் இணங்குவோம்; இன்றேல், உம்முடைய கருத்திற் கிசையோம்," என்று அத்தேவனை நோக்கிப் பகர்ந்தனர்.

மிக்க மகிழ்ச்சியுட னிருந்த வாயுதேவனுடைய மனம் சிறிது வேறுபட்டது. தன் கருத்திற்கு மாறாக உரையாடிய பெண்களைப் பார்த்து அவன், "மதி மயக்கங் கொண்டுள்ள மாதரே! உம்முடைய நல் வாழ்க்கையைக் கருதி நீர் அன்றோ தக்க கணவரைத் தேர்ந்து அடைதல் வேண்டும்? உம்முடைய தந்தையை இதைப் பற்றிக் கேட்பானேன்? உம்முடைய கருத்திற் கிணங்க அவர் நடக்க வேண்டியவரே யாவர். உலகியலை யறியாச் சிறிய பிள்ளைகளா நீர்? என்னை மணக்க இச்சிப்பதாய் உம்முடைய தந்தையினிடம் நீரே

சென்று தெரிவித்து, என்னை யடைந்து நல்வாழ்வைப் பெறுவீர். தானே வந்தடைந்த ஸ்ரீதேவியை வேண்டா மென்று தள்ளுவார் உளரோ? என்னை மணந்து பெறுதற் கரிய இன்பத்தை யடைந்து வீற்றிருக்க உம்மைப் போன்ற மன்னர் குலமகளிர் மறுப்பரோ?" என்று சொல்ல, அதற்கு அப்பெண்கள், "எம்மைப் பெற்று அருமையாக வளர்த்த தந்தை யாருக்கு எம்மை நல்லவருக்குக் கொடுத்து மணஞ் செய்விக்கத் தெரியும். அவருடைய கட்டளையின்றி யாம் உம்மை மணக்க இசையோம். உம்முடைய எண்ணம் ஈண்டுப் பயன் படாது. எம்முடைய தந்தையினிடம் போய் நீர் கொண்ட கருத்தைத் தெரிவியும். அங்ஙனம் செய்ய விருப்ப மிலதாயின், வந்த வழியே திரும்பிச் செல்லும்," என்று கூறினர்.

தன்னை மணக்குமாறு பன்முறைக் கேட்டும் அப்பெண்கள் மறுத்து மறுத் துரைத்தமையால் வாயுதேவன் மிக்க சினங் கொண்டான்; உடனே கொடிய தொரு புயல் காற்றை யுண்டாக்கி வல்லிக் கொடியைப் போன்ற அப்பெண்களின் மீது மோதி, அவருடைய கை கால் முதலிய உறுப்புக்கள் முறியும்படி யடித்து, அவரை நிலத்தில் வீழ்த்திச் சென்றான். நீண்ட கூந்தலையுடைய அம்மங்கையர் மிக வருந்தி, மண்ணினின்று எழுந்து, வெட்கமும் துக்கமும் நிறைந்தவராய், மெல்ல நடந்து அரண்மனையை நாடிப் போயினர்.

அழுகையுடன் தள்ளாடிச் சென்ற அவ் அரிவையர் அரமனையினுடைய வாயிலை யடைந்ததும், அவரைக் கண்டு குசநாபன் திடுக்கிட்டு, அவர் எதிரில் ஓடிச் சென்றான்; அவருடைய நிலைமையை யுற்றுப் பார்த்துப் பதைபதைத்தான்; அவரை நோக்கி, "என் ஆருயி ரனைய மக்காள்! உமக்கு இவ் இடுக்கண் எப்படி நேர்ந்தது? விரைவிற்

சொல்லும்,'' என்று வினவ, அவர் தேம்பித் தேம்பி யழுது கொண்டே பூம்பொழிலில் விளைந்தவற்றை யெல்லாம் விளம்பினர். அவற்றைக் கேட்டு அரசன், வாயுதேவனிடம் மிக்க சினங் கொண்டான். அவ்வேளை, அவனுடைய அமைச்சர் முனிவர் முதலிய அறிஞர் பலர் ஆண் டடைந்து அவனைத் தேற்றினர்; அம்மாதருடைய நோயைத் துடைக்க மருத்துவத் தொழிலில் வல்லவரை யழைத்துத், தக்க மருந்துகளைக் கொடுப்பித்தனர்.

வாயுதேவனுடைய கொடுமையால் விளைந்த துன்பம் விரைவில் நீங்கக் குசநாபனுடைய புதல்விகள் முன்போலவே செவ்விதின் விளங்கினர். உடனே குசநாபன், அம்மகளிரைச் சூளியினுடைய மைந்தனாய பிரமதத்தன் என்பானுக்கு நல்லோரையிற் கடி மணஞ் செய்து கொடுத்தான். பிரமதத்தனை யடைந்து அந்நல்லியலார், இன்புற்றுப் பெருவாழ்வு ஓங்கத் திகழ்ந்தனர்.

வீரத்தில் மிக்க குசநாபனுக்கு ஆண்பிள்ளை யில்லாக் குறை யொன் றிருந்தது. அதைப் போக்க அவன், பலவாறு ஆராய்ந்து, முடிவிற் பெரிய தொரு வேள்வியை யியற்றினன். அதன் பயனாக அம்மன்னன் ஓர் ஆண்மகனை யடைந்தான். அம்மைந்தன் காதி என்னும் பெயரைப் பெற்று வளர்பிறைத் திங்களைப் போலச் செவ்வனே வளர்ந்து வந்தான்; தக்க வயதில் நன்றாய்க் கல்வி கற்றான்; மன்னர் குலத்தினர்க் குரிய பல கலைகளையும் பயின்று கைதேர்ந்தவனானான். வீரத்தில் தன்னினும் பதின்மடங்கு மிக்கு விளங்கிய அந்தப் புதல்வனுக்குக் குசநாபன் அழகிற் சிறந்த தோர் அரிவையைத் தேடி நன்னாளில் மிக்க சிறப்புடன் மன்றல் புரிவித்து மகிழ்ந்தான்; யாளி திகழ் தவிசேற்றி முடி சூட்டி அக்கோமகனை மன்னர்கோ னாக்கிக் களித்தான்.

அறநெறியி னின்று பிறழாமல் செங்கோல் செலுத்திக் காதி மன்னன், தன் குடிகளுக்கு யாதொரு குறையும் நேரா வண்ணம் வீரத்துடன் நாட்டைப் பாதுகாத்து வந்தான். நற்குண நற் செயல்களிலும், வீரத்திலும் ஒப்பற்றவனாய் விளங்கிய அவ்வரசனுடைய புகழ், எத்திக்கினும் பரவி நிறைந்தது. அந்நாளில், அவனுடைய மனைவி, பெண் மகவு ஒன்றைப் பயந்தாள். காளியைப்போ லிருந்த அப்பெண்ணுக் குக் கௌசிகை என்னும் பெயரை யிட்டுப் பெற்றோர் பெரு மகிழ்ச்சி யடைந் திருந்தனர். ஆண்டுகள் சிலவே கழிந்தன. காதியினுடைய இல்லக் கிழத்தி, மங்கல நாளில் ஓர் ஆண் குழந்தையைப் பெற் றெடுத்தாள். சாலப் பொலிவும் துணி வும் நிறைந்து தோன்றிய அவ் ஆண்மகனுக்கு இருமுது குரவர், கௌசிகன் என்னும் பெயரை யிட்டுக் களித்தனர்; அக்குழந்தையை அன்புடன் பாராட்டிச் சீராட்டிச் சிறக்க வளர்த்து வந்தனர்.

---

பிரிவு - உ

# கௌசிகன் அரசியல்

கௌசிகையும் கௌசிகனும் நாளுக்கு நாள் உடல் வனப்பு, வல்லமை முதலியவற்றில் மிக்கு வளர்ந்து, கல்வி கற்றற் குரிய பருவத்தின ராயதும் அவரைக் காதி, தக்க ஆசிரியரிடம் விட்டான். கௌசிகை சில நாட்கள்வரைக் கல்வி பயின்ற பிறகு மகளிர்க் குரிய கலைகளைக் கற்று, அறிவு ஒழுக்கம் அழகு முதலியவற்றுள் உயர்ந்தவளாய்த் தோன்றி னாள். கடிமணத்திற் குரிய வயதை யடைந்தவுடன் அவளை அரசன், பிருகுவினுடைய மதலையாய இருசிகன் என்பா னுக்கு வதுவை முடித்துத் தந்தான்.

மணத்தின் பின்னர் தன் மணுளனேடு கௌசிகை இன்புற்று வாழ்ந்திருந்தாள். இருசிகன் அருமறை யனைத்தும் நன்கு ஓதி யுணர்ந்தவ னுதலாலே, சின்னுள் தன் பன்னியுடன் இல்லறத்தை இனிதாக நடத்தி இருவர் மக்களை யளித்து, அறம் பொருள் இன்பம் என்பவற்றை நுகர்ந்த பின்னர் பெறுதற் கரிய வீட்டின்பத்தைப் பெறக் கருதி விரி மலர்த் தவிசோன்றனைக் குறித்து விழுத்தவம் செய்ய மேற்கொண்டான்; பூமகனுடைய உலகம் செல்லத் தொடங்கினுன். காதலன் அங்ஙனம் செல்லச் தொடங்கியதை யறிந்த கௌசிகை, அவன் பிரிவை யாற்ருளாகி, மிக்க துயரங் கொண்டு பெருங் குர லெடுத் தழுது, தண்ணீராகிக் கொழுநனைத் தொடர்ந்து சேணகத்துத் தாவிப் பாய்ந்தாள்.

அம்மங்கையின் அரிய செயலைக் கண்ட இருசிகன், மிகச் சினந்து அவளை நோக்கி, "ஆற் ருருக் கொண்டு என்னைப் பற்றத் தாவுகின்ற மதியற்ற மாதே! கொண்டவனுடைய கருத்தை யறிந்து ஒழுகுவா ளன்ருே கற்புடையாளாவாள்? தகுதியற்ற இவ்வேலையைத் தலைமேற் கொண்டு நீ, பேரின்ப வீட்டை நாடிச் செல்லும் என்னைத் தடுக்கலாமா? 'அடாததைச் செய்வார் படாததைப் படுவர்' என்பதை மறந்தனையே! ஏ மூடி! என்றும் இப்புனல் வடிவத்துடன் ஆருகி நீ மண்ணுலகத்துப் பாய்ந் திருக்கக் கடவாய்," என்று கொதித் தோதித் தன் வழி நாடிச் சென்ருன்.

கயிலைமலைக் கருகில் மானசமடு என்னும் பெரிய தொரு பொய்கை யுளது. ஒரு காலத்தில் மலரவனுடைய மனத்தினுல் அஃது உண்டானமையின், மானசம் என்னும் பெயரைக் கொண்டது. அவ்வாவியி னின்றும் செல்லலாற் கோசலை நாட்டிலுள்ள நதி சரயு என்னும் பெயரை யடைந்தது. தன் நாயகனுடைய வெவ்வுரைக் காளாகிய கௌசிகை,

நீ ருருவத்துடன் மானச மடுவில் வீழ்ந்து, சரயுவுடனே கூடிப் பிரிவதாகிய கோமதி யாருகினுள்.

இயற்கையிலேயே அறிவு, வீரம், மனவுறுதி, துணிவு முதலிய தன்மைகள் ஒருங்கே யமையப் பெற்றிருந்த கௌசிகன், இளமையிலேயே ஆசிரியரிடம் இலக்கிய இலக்கண நூற்களையும், மக்களாகப் பிறந்தார் அடைதற் குரிய உறுதிப் பொருள்க ளாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றைக் குறித்துக் கூறும் ஏனைய நூற்களையும் நன்ருய்ப் படித்து இணையற்ற புலமை வாய்ந்து விளங்கினுன். அரசர் கற்றற் குரிய கலைக ளெல்லாவற்றையும் ஓதித், தேரேறிச் சண்டை செய்தல், யானை யூர்ந்து அம ராற்றல், குதிரை யிவர்ந்து கொடுஞ் சம ராடல், பூமியில் நின்று மற்போர் புரிதல் முதலியவற்றிலும் நன்கு பழகிக் கைதேர்ந்த வீரனுன். அவனுடைய ஒப்பற்ற வீரத் தன்மையைக் கண்டு பெற்ரோர், பெருங் களிப் படைந்தனர்; அழகிய பெண்ணொருத்தியைத் தேடி நல்லோரையில் அவனுக்கு வதுவை முடித்து உவந்தனர்.

கௌசிகன் அரசியலை யேற்றற் குரிய வயதை யடைந்ததும் காதி, அவனுக்கு முடிசூட்டி, காட்டை யடைந்து தவமியற்றித் திருமால் திருமல ரடிகளுக்கு ஆளாக எண்ணங் கொண்டான்; தன் எண்ணத்தை அமைச்சர், அறிஞர் முதலியோர்க்கு அறிவித்தான். அவரும் அரசனுடைய கருத்திற் கிசைந்தனர். நன்னுளில் அமைச்சர், சிற்றரசர், சேனைத் தலைவர், பண்டிதர், அறிஞர், குடிகள் முதலிய பல திறத்து மக்களும் அரசவைக்கண் நெருங்கிச் சூழ்ந்திருக்கக் காதி, தன் மைந்தனை அரியணையின்மீது வீற்றிருக்கச் செய்து, மணிமுடி கவிழ்த்துச் செங்கோலைக் கையிற் கொடுத்துச் சிறக்க வாழ்த்தினுன்.

யாதினும் உயர்ந்ததாய அரச செல்வத்தைப் பெற்ற கௌசிகன், சிறந்த இளமை, நிறைந்த கல்வி, அளவற்ற தோள்வன்மை, எதற்கும் அஞ்சா வீரம், காண்பவருடைய கண்களைக் கவரக் கூடிய உடல் வனப்பு முதலியவற்றுடன் பொலிந்து, மன்னுயிரைத் தன்னுயிராக மதித்து, நாட்டை நன்று யோம்பி வந்தான். அரசியலை நடாத்தற்கு வேண்டிய அரிய தன்மைக ளனைத்தும் அவனிடம் அமைந்திருந்தன. அங்ஙனம் நாட்டைப் பாதுகாத்துத் தன்னுடைய பெருமை உலகங்கள் தோறும் பரவ அநீதி, அறிவின்மை, பஞ்ச மாகிய கொடிய நிகழ்ச்சிகள் தன் நாட்டில் யாண்டும் தலை காட்டா வண்ணம் செய்து அரசாண் டிருந்த காலத்தில், அவ்வா சனுக்கு ஒருவர் பின் ஒருவராய் நாளடைவில் நூற்றுக் கணக்கான ஆண்மக்கள் உண்டாயினர். அரச செல்வத் துடன் மக்கட் பேற்றையும் நிரம்பப் பெற்ற கௌசிகன், உள மிக உவந்து தன் வாளுளைச் செவ்வனே செலுத்தி வந்தான்.

உரிய பருவங்கள் தோறும் தன் புதல்வருக்குச் செய்ய வேண்டிய கடமைக ளனைத்தும் முறையே செய்து களித்த கௌசிக மன்னன், அவரை ஊக்கத்துடன் பல கலைகளிலும் பழக்கி, 'இவ்வுலகத்தில் இவரை நிகர்த்த வல்லார் எவரும் இலர்,' என்று உலகத்தினர் பலரும் உரைக்குமாறு வீரத்திற் சிறந்தவராய் விளங்கச் செய்தான். அரசியலை நடத்தும் முறையில் தந்தைக்குப் பேருதவியா யிருந்து, அவரை மகிழ் வித்து அம்மைந்தர், களிப்புடன் வாழ்ந்திருந்தனர். இந்தி ரனைப்போல் எல்லா இன்பங்களையும் படைத்தவனுய்க் கருதி இணையற்ற இறுமாப்புடன் கௌசிகன் அரசாண் டிருந்தான். ஒப்பற்ற வீரத்துடன் கூடிய அவனுடைய அரசியலைப் பார்த் துப் பலரும் மெச்சிக் கொண்டாடினர்.

---

பிரிவு - ௩

# மன்னன் மாதவ ஞுதல்

எல்லாச் செல்வங்களையும் படைத்துச் செருக்குடன் கௌசிகன் செங்கோ லோச்சி வந்த காலத்தில் ஒரு நாள், அவனுடைய அரசவைக்கண் குடிகள் பலர் வந்து பணிந்து, அவனை நோக்கி, "மாண்புடை மன்னரே! யாம் வருந்தி யுழைத்து ஆக்கிய பசிய பயிர்க ளெல்லாவற்றையும் காட்டில் வாழும் விலங்கினங்கள் பாழாக்குகின்றன. நாடோறும் இராப் பொழுதில் அவை பண்ணை நிலங்களை யடைந்து, பயிர் களை மேய்ந்தும், சாய்த்து மிதித்தும் பாழ்படுத்திச் செல்கின் றன. மகோதயத்திற் கருகிலுள்ள காடுகளில் இப்பொழுது கொடிய விலங்குகள் மிக்கிருக்கின்றன. அவற்றை யொழித்து எம்மைக் காத்தருளல் வேண்டும்," என்று தம் குறையைக் கூறி முறையிட்டனர். அம்மொழிகளைச் செவியேற்ற கௌசிகன், மிக்க வியப் படைந்து, விலங்குகளைக் கொன்று குறையை விரைவிற் போக்குவதாய்ச் சொல்லிக் குடிகளைத் தேற்றி யனுப்பினான்.

குடிகள் அரசவையி னின்று நீங்கியதும் கௌசிகன், தன்னுடைய அமைச்சரையும் சேனைத் தலைவரையும் அழைத்து, அவருடன் கலந்து குடிகளுடைய துன்பத்தைத் துடைக்க ஆராய்ந்தான்; காட்டிற் சென்று வேட்டை யாடி விலங்குகளைக் கொல்லத் தீர்மானித்தான்; தண்டத் தலைவர் கள், நால்வகைச் சேனைகள், வேடர்கள், முதலியோர் மறு நாட்காலை ஓர் இடத்தில் வந்து குழுமி யிருக்கக் கட்டளை யிட்டான். அரசன் வேட்டை யாடச் செல்லும் செய்தி நகர முழுவதிலும் விரைவிற் பரவிற்று. அந்நாள் அரசவை

இனிதாகக் கலந்தது. ஆண் டிருந்தவர் அனைவரும் எழுந்து தம்முடைய இருப்பிடங்களை நாடிக் களிப்புடன் போயினர்.

மறுநாட் காலைப் பொழுது புலர்ந்ததும் அரசன், காலக் கடன்களை விரைவில் முடித்து வேட்டை யாடுதற் குரிய கோலத்துடன் தன் மைந்தரோடு பலவகை மங்கள வாத்தி யங்களுக் கிடையே அரமனையை விட்டு வெளியே புறப் பட்டான்; அமைச்சர், தண்டத் தலைவர், நால்வகைச் சேனை கள், வேடர்கள், நாய்கள் சூழ்ந்து பேரொலியுடன் வர, நகரத்தினின்று நீங்கிக் காட்டை நாடித் தேரேறிச் சென்றான். விரைந்து சென்று இரண்டொரு நாளிற் காட்டை யடைந்து தானும் தன்னுடைய சேனைகளும் தங்கி யிருப்பதற் குரிய ஓர் இடத்தை நாடித் தங்கினான்.

அந்நாள் ஒழிய அடுத்த நாள் முதல் வேட்டை யாடத் தொடங்கி அம்மன்னன், தன் சேனைகளுடன் புறப்பட்டு அக்காட்டகத்திற் பல்வேறு இடங்கள்தோறும் திரிந்து, யானைக் கூட்டங்களையும், சிங்கம், புலி, கரடி முதலிய கொடிய விலங்குகளையும், கலைமான், கடம்பைமான், புள்ளிமான் முதலிய மானினங்களையும் துரத்தி, அவற்றை அம்புகளாலும் ஈட்டிகளாலும் உடைவாட்களாலும் வாட்டி, வலைகளைக் கட்டி நரிகள், குறுமுயல்கள் முதலியனவும் தவறி யோடாமல் மடக்கிக் குறுந்தடிகளாலும் கொம்புகளாலும் அடித்து, நாய் களை விட்டுக் கடிக்கச் செய்து கொன்றான். அங்ஙனம் சின் னாள்வரை அக்காடு முழுவதிலும் திரிந்து, ஆண்டுக் குகை களிலும், மலை யடிவாரங்களிலும், புதர்களிலும், வளைகளிலும் வாழ்ந்திருந்த பலவகை விலங்குகளையும் ஆராய்ந்து பார்த்து, வேட்டஞ் செய்து பாழாக்கினான் அவ்வேந்தன். அரசன் வேட்டை யாடிய கொடுமையைக் கண்டு சிறிய பறவைகள், ஈக்கள், கொசுக்கள் முதலிய சிற்றுயி ரினங்களும் அஞ்சி

வானகத் தெழுந்து பறந்து, வேட்டை யாடுதலால் உண்டாய பேரொலியைக் கேட்டு நடுங்கி மண்ணில் வீழ்ந்து மாய்ந்தன. மருந்துக் கேனும் அக்காட்டகத்து விலங் கொன்று அகப்படுவது அரிதாயிற்று. கௌசிகன் அங்ஙனம் ஆடிய வேட்டையால் உண்டான பேராவம், ஐம்பொறிகளையும் அடக்கி மலைச் சாரல்களிலும், மரங்கள் அடர்ந்த சோலைகளிலும் கடவுளை நோக்கித் தவஞ் செய்து கொண்டிருந்த முனிவர்க்கும் துன்பத்தை யுண்டாக்கியது.

காட்டில் தங்கி அங்ஙனம் மிகக் கொடுமையாய் வேட்டை யாடிக் கொண்டிருந்த காலத்தில் ஒருநாள் காதி மைந்தன், விடியற் காலத்தி லெழுந்து தன் தானையுடன் சென்று, உயர வளர்ந்த மலைகளி னிடத்தும், மரங்கள் நெருங்கி வளர்ந்த சோலைக ளிடத்தும் விலங்குகளை நெடு நேரம்வரைத் தேடித் திரிந்தான். யாதொரு விலங்கும் அவனுடைய கண்ணிற் பட்டிலது. அவனுடைய உடம்பு களைத்தது; மனமும் தளர்ந்தது. அதனால் அவன், தள்ளாடி நடந்து சிறியதொரு புதருக் கணித் தானான். பொள்ளெனப் புள்ளிமான் ஒன்று துள்ளி அப்புதரினின்று கிளம்பி ஓடிற்று. அதைக் கண்டு அரசன் மிக்க மகிழ்ச்சி கொண்டான்; அதைப் பின்பற்றி யோடினான். சேனைகளும் அவனைத் தொடர்ந்தன. அரசன் அம்மானைக் கொல்ல நெடுந்தூரம் துரத்திச் சென்றான். அம்மான் புதருகள் மரங்கள் குன்றுகள் முதலியவற்றை ஓரே தாண்டாகத் தாவிப் பாய்ந்து முடிவிற் கௌசிகனுடைய கண்ணிற் கெட்டாமல் மறைந் தோடியது.

தன்னை யேமாற்றி யோடிய மானைப் பிடிக்க மன்னன் நெடும்பொழுது அலைந்து திரிந்தான். அஃது அவனுக்குக் கிடைத் திலது. அதனால், அவ்வரசன் மிக்க வெட்கத்தை யடைந்தான். நெடுநேரம் அந்த மானைத் தேடித் திரிந்ததால்

அவனுடைய வாய் புலர்ந்தது ; நாவும் உலர்ந்தது ; கால்களும் ஓய்ந்தன. நீர் வேட்கையும் பசிப் பிணியும் பிடர் பிடித்துந்த அவன் தள்ளாடித் தள்ளாடி மெல்ல நடந்து, முனிவர்கள் தவஞ் செய்து கொண்டிருந்த மலைச் சாரலை யடைந்து, ஆண்டு, ஒப்பற்ற மாதவனாய வசிட்டருடைய ஆச்சிரமத்திற்கருகிற் சென்றான்.

பெருந்தகையினராய வசிட்ட முனிவர், தம் ஆச்சிரமத்தை யடைந்த கௌசிகனை யுற்று நோக்கி, ' ஓ இவன் யாரோ ஓர் அரசனாய் இருக்க வேண்டும்,' என்று தம் மனத்திற் கொண்டு, வீற்றிருந்த இடத்தினின்று எழுந்து வந்தவனெதிரிற் சென்று பணிந்து, அவனை அன்புடனும் மரியாதையுடனும் வரவேற்று, ஒரு மணையின்மீது உட்காருவித்து, அவனைப் பார்த்துப் பரிவுடன், "செல்வரே! நீவிர் யாவிர்? அடிகள் அறிய விரும்புகின்றேன் ; திருவுள மிரங்கிச் சொல்லி யருளல் வேண்டும்," என்று கேட்டார்.

அருந்ததிக் கணவரைப் பார்த்து அரசன், "புனித மாதவரே! யான் கௌசிகன் என்னும் மன்னனாவேன். என்னுடைய மகோதய நாட்டிலுள்ள வளப்பம் பொருந்திய பயிர்களெல்லாவற்றையும் காட்டில் வாழும் விலங்குகள் பாழாக்கத் தொடங்கின. அம்மாக்களைக் கொன்று குடிகளைக் காக்க இக்கானகத்தை யடைந்து வேட்டை யாடினேன். கொடிய விலங்குகள் எல்லாமும் மாண்டன. இன்று காலையிலெழுந்து பல இடங்கள்தோறும் விலங்குகளைத் தேடித் திரிந்து இளைத்தேன். முடிவில் ஒரு மானைக் கண்டேன். அதை நெடுந்தூரம் துரத்திச் சென்றேன். என்னுடைய கணைக்குத் தப்பி அஃது எங்கேயோ ஓடிப் போயிற்று. யானும் என்னுடைய தானையும் மிக்க தளர்ச்சி யடைந்து, பசிப் பிணியினாலும் நீர் வேட்கையினாலும் மிக வருந்தி

உம்முடைய ஆச்சிரமத்தை யடைந்தோம்," என்று மெல்லச் சொன்னான்.

மன்னனுடைய நிலைமையை மாதவர் கண்டு, கழிபேரிரக்கங் கொண்டு, அவ்வரசனையும் அவனுடைய அனிகத்தையும் சிறிது நேரம் பொறுத் திருக்கச் சொல்லிக் காமதேனுவைத் தம்மிடம் வருமாறு திருவுளம் பற்றினார். உடனே அப்பசுவும் முனிவருடைய திருமுன்னர் தோன்றிற்று. கௌசிகனையும் அவனுடைய தானையையும் சுட்டிக் காட்டித் தேனுவை நோக்கி வசிட்டர், "இம்மன்னற்கும் படைகளுக்கும் விரைவில் அறுசுவை யுண்டி சுரந் தருள்க," என்று கூறி யருளினர். அப்பொழுதே அமுத மன்ன அறுசுவை யுண்டியை அச்சுரபி சுரந் தளித்தது. இனிதாக விருந்திட்ட பின்னர் அந்த நந்தினி, வசிட்டருடைய கட்டளைக் கிணங்கக் கௌசிகனுக்கும் அவனுடைய குழுவிற்கும் நறுமணம் வீசுகின்ற மலர் மாலைகளையும், கலவைக் குழம்பையும் சிறப்புடன் வழங்கியது.

என்றும் புசித் தறியாத அரிய உணவை யருந்திப் பசி நோயைத் தணித்து அக மிக மகிழ்ந்து உட்கார்ந்த மன்னன், தன்னுடைய அமைச்சர் புதல்வர் முதலியோரிடம் காமதேனுவைப் பற்றி வியந்து பேசினான்; அதைத் தான் பெற்றுச் செல்லக் கருத்திற் கொண்டான்; சரே லென எழுந்து வசிட்டரிடம் சென்று, பணிவுடன் அவரைப் பார்த்து, "அருளுடைப் பெரியீர்! நீர் இப்பொழுது எனக்குச் செய்த உதவி மிக அருமையான தாகும். எனக்கும் என்னுடைய படைகளுக்கும் உம்மிட மிருக்கும் பசு உணவை யளித்து எங்களை மகிழ்வித்ததை மிகப் பாராட்டுகின்றேன். கடவுளால் படைக்கப் பட்டுள்ள எல்லா உயிர்களுள்ளும் இப்பசு சாலச் சிறந்ததும் கடவுள் தன்மை பொருந்தியது மாகும்

என்று நம்புகின்றேன். மறைகளை யோதி மாசிலா மனம் படைத்த முனிவரே! அறிஞரா யுள்ளார் யாதாயினும் அரிய தொரு பொருளைக் காணின், அதைக் கொண்டு போய் மன்னற்குக் கொடுத்து மகிழ்வித்தல் வழக்கமாம் என்பதை நீர் அறிவீர் அன்றோ? உம்மிட முள்ள அரிதினும் அரிதாய பசுவை நீர் என் எனக்குக் கொடுக்கக் கூடாது? அதைப் பெற்றுச் செல்ல யான் மிக விரும்புகின்றேன்,'' என்று கேட்டான்.

உண்ட வீட்டிற்கு இரண்டகஞ் செய்ய நினைத்தலைப் போன்ற கருத்தை யுடைய கௌசிகன் சொற்களைக் காதேற்ற வற்கலை யுடுத்த வசிட்டர், சிறிது நேரம் பேசாம லிருந்தார்; பிறகு ஆவைக் கேட்ட அரசனை நோக்கி, "வேல் வேந்தரே? நீர் நவின்றவை யாவும் நல்லனவே யாம். ஆயினும், இப் பொழுது என்னிட மடைந்துள்ள பசு எனக்கு உரிய தன்று; கடவுளர்க்கும் மாதவர்க்கும் உதவியா யிருக்க அதை நம்மை யாளுடைய திருநாரணர் அருளினர். ஆதலால், அதை உமக்கு வழங்க யான் உரிய னல்லேன். உம்முடன் வர அதற்கு விருப்ப மிருக்குமாயின், நீரே அதைக் கொண்டு செல்லலாம்,'' என்று தெரிவித்தனர்.

'ஐந்து வந்தாலும் அவசர மாகாது, பத்து வந்தாலும் பதட்ட மாகாது' என்னும் மூதுரையைக் கௌசிகன் அறி யானோ? முனிவ ரிடத்தினின்று சரேலெனப் புறப்பட்டு அவன் விரைந்து சென்று மிக்க செருக்குடனும் பதைபதைப் புடனும் சுரபியை யணுகி, அதை வலிய தொரு 'கயிற்றால் பிணித்துத், தன்னுடன் வருமாறு இழுத்தான். அஃது இருந்த விடத்தை விட்டுச் சிறிதும் அப்புறம் பெயர்ந் திலது. உடனே மன்னன், தன்னுடைய யானை குதிரை தேர் முதலிய படைகளைக் கொண்டு அப்பசுவைப் பல கயிறுகளால் கட்டிப்

பலவாறு வருத்தி யிழுத்தான். அப்பொழுதும் அஃது இருந்த விடத்தை விட்டுச் சிறிதும் அசைந்திலது; ஆயினும், சாலச் சினங் கொண்டது. தன்னைக் கௌசிகன் கவர்ந்து செல்ல அங்ஙனம் வருத்துகின்றான் என்பதை அறிவிற் சிறந்த அப்பசு உணர்ந்தது. அவனுடைய அடாத செயலை யடக்கக் கருதி அஃது, ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து, தன்னைக் கட்டி யிருந்த கயிறுகளை யறுத்துக்கொண்டு வசிட்டரிடம் விரைந் தோடிற்று.

சினம் மிகக் கொண்ட அச்சுரபி, வசிட்டரைப் பார்த்து, "மறையவர்க் கொழுந்தே! மாதவ ரேறே!! கௌசிகன் என்னும் அரசன் மிகக் கொடியவனா யிருக்கின்றானே. அவனுக்கு உண வளித்ததே குற்ற மாயிற்று. தன்னுடன் கொண்டு செல்ல என்னைக் கயிறுகளால் பிணித்து வருத்தி அவன் இழுக்கின்றானே. என்னை அவனுக்கு நீர் கொடுத்தீரா? இஃதென்ன கொடுமையா யிருக்கின்றதே," என்று சொல்லிற்று. மாமுனிவர் காமதேனுவை நோக்கி, "அரிய நந்தினியே! நான் எப்படி உன்னை அந்தக் கௌசிகனுக்குக் கொடுக்கக் கூடும்? அவன் சிறிதும் அறிவின்றித் தகாத செயலைச் செய்யத் தொடங்கினான். செல்வத்திலும் வல்லமையிலும் தன்னைவிட மிக்கார் எவரும் இலர் என்று எண்ணி அவன், மிக்க இறுமாப்புடன் இருக்கின்றான். அதற்காக யான் என்ன செய்யலாம்," என்று பகர்ந்தனர்.

அம்மொழிகளைக் கேட்டு நந்தினி நனிச் சினந்தது; "ஓகோ, அப்படியா? அந்தக் கௌசிகனுடைய செல்வச் செருக்கையும், தோள் வன்மையையும் இதோ ஒரு நொடிப் பொழுதிற் காண்கின்றேன்," என்று சொல்லித், துள்ளிக் குதித்து வாலைத் தூக்கி அவ்விடத்தை விட்டு விரைந்தோடிக் கௌசிகனுடைய படைகளை யணுகிற்று; கண்களை யகலத்

திறந்து நெருப்புப் பொறி பறக்கச் சுழற்றி அப்படைகளைப் பார்த்தது; நஞ்சு கொதித் தெழுந்தாற்போல் முனிவு கொண்டு, பேரிடி யிடித்த தென்ன எக்காள மிட்டது; மெய் சிலிர்த்து நாலாப் பக்கங்களையும் பார்த்தது. உடனே அத னுடைய தலை, கழுத்து, மார்பு, வயிறு, கால், வால், முதுகு முதலிய இடங்களினின்று பல படைக்கலங்களைக் கைகளிற் கொண்டவராய்ப் பப்பரர், யவனர், சீனர், அவந்திகர் முதலிய குழுவினத்து வீரர் பல்லோர் வெளிப் போந்தனர். படைக் கலங்களைச் சுழற்றிக் கொண்டே யோடி அவர், கௌசிக னுடைய சேனைகளை வளைத்துக் கொண்டனர்; முனிவுடன் எதிர்த்துத் தாக்கினர்; எல்லா உலகத்தினரும் நடுங்க ஆர வாரித்துப் பெரும்போர் புரிந்தனர்; கௌசிகனுடைய சேனைகளைச் சிறிது நேரத்திற்குள் வெட்டிக் குவித்தனர்.

அடங்காச் சீற்றங்கொண்டு துள்ளித் துடித்த கபிலையும், தானைக்குட் புகுந்து தன் கழுத்தைச் சாய்த்துக் கொம்புகளை நீட்டிப் பலரை முட்டிக் கீழே தள்ளிற்று; பலரைக் குத்தி வானகத்தில் வீசி யெறிந்தது; தன்னுடைய கால்களால் பலரை யுதைத்துக் கொன்றது; பலரைக் கீழே தள்ளி மிதித்துப் பாழாக்கியது; வாலால் பலரைச் சாடி வீழ்த்தியது. தன் கண்களி லிருந்து உண்டான நெருப்பினால் பலரை யெரித்துக் கொன்றது. என்னே வியப்பு! இமைப் பொழு திற் கௌசிகனுடைய படைக ளெல்லாம் மாய்ந்து மண்ணிற் சாய்ந்தன. பசுவினிடத் திருந்து தோன்றிய வீரர் எல்லா ரும் திரும்பிச் சென்று பசுவினிடமே மறைந்தனர். சுரபியும், தன்னுடைய சினத்தைத் தணித்து வசிட்டரிடம் சென்றது; அவருடைய கட்டளையைப் பெற்று மேலுலகம் போயது.

கௌசிகனும், அவனுடைய மைந்தரும் படைகளுக்குச் சிறிது தூரத்தில் இருந்தனர்; ஆதலின், உயிர் பிழைத்தனர்.

பசுவினுடைய செயலைக் கண்டு அவர், பெருவியப்பும், ஆருத் துயரமும், அளவு கடந்த சீற்றமும் கொண்டனர். நூற்றுக் கணக்கான அரசிளங் குமரர் அனைவரும், ஒருங்கு சேர்ந்து, "நம்முடைய படைகளை வாட்டியது பசுவினுடைய வலியன்று; மறை யுணர்ந்த முனிவனுடைய வஞ்சகமே யாகும். அம்முனிவனை வெறிதே விட்டுச் செல்லப்படாது. இன்னே அவனுடைய சிரத்தை யரிகுதும்," என்று தமக்குட் பேசிப் பொங்கி யெழுந்தனர்; படைக்கலங்களுடன் ஆர்த்துச் சென்று வசிட்டருடைய முன்னிலையை யடைந்தனர்; இடி போல் முழக்க மெழக் குமுறிக் கனன்று, விடாமழைபோல் அம்புகளை யெய்து அடர்க்கத் தொடங்கினர். அவருடைய அடாத செயலைக் கண்ட வசிட்டர், மிகச் சினந்து எரி யெழக் கண்களைத் திறந்து பார்த்தார். அவ்விழிக் கனலால் அரசனுடைய மைந்தர் எல்லாரும் வெந்து, சாம்பராய்த் தரையில் விழுந்தனர்.

தன் மைந்தர் ஐயிரு பதின்மருள் நால்வர் நீங்க ஏனையோர் அவிந்தமையைக் குறித்துக் கௌசிகன், சொல்லொணுத் துயருற்று, அழுது வருந்தினுன்; வசிட்டரிடம் அளவு கடந்த முனிவு கொண்டான். நெய் சொரியப் பெற்ற நெருப்பைப்போல் அவனுடைய மனத்தில் வஞ்சினம் மூண் டெழுந்தது. கையில் வில்லம்புகளைக் கொண்டு அவன், வசிட்டமுனிவர் எதிரிற் சென்று, அவரை யெதிர்த்துச் சண்டை செய்யத் தொடங்கித், துரோண மேகம் போலச் சரமாரி பொழிந்தான். அக்கொடிய செயலைப் பார்த்து முனிவர், தம்முடைய கைத்தண்டினை அவ்வரசனுக் கெதிரில் நாட்டி, அவன் விடும் படைக்கலங்களை யெதிர்க்குமாறு செய்தார். கௌசிகன், தன்னுடைய கை வன்மை முழுவதையும் காட்டிக் கடவுளர் படைகள் ஈருகத் தான் கற்ற படைக

ளெல்லாவற்றையும் கையாண்டு நெடும்பொழுது போர் புரிந் தான். அவன் விட்ட கணைகளுள் ஒன்றும் வசிட்டர் மீது பட்டிலது. அப்பகழிக ளெல்லாவற்றையும் அவருடைய கைத் தண்டு விழுங்கி மிக்க வலிவுடன் விளங்கிற்று. அதைக் கண்ட கௌசிகன், மிக்க வியப் பெய்தினன்; பெருமூச்சு விட்டான்; நாணித் தலை குனிந்து நின்றான்; செய்வ தின்ன தென உள்ளத்தில் தோன்றாமையால் திகைத்தான்.

கை தளர்ந்து, உயிரும் உடலும் சோர நின்ற அரசனு டைய மனத்தில் ஓர் எண்ணம் உதித்தது. உடனே அவன், வட வரை வில்லியைப் பலபடத் துதித்து வணங்கி னன். அக்கடவுள் திருவுள மிரங்கி, அவனுக் கெதிரில் தோன்றி, அடலுறு படை யொன்றை அன்புடன் அவனுக் களித்து, மறைந் தருளினர். அப்பகழியைப் பெற்று மிக மகிழ்ந்த மன்னன், கடவுளரும் அஞ்சத் தக்க தூயவராய வசிட்டரை வாட்டத் தன்னால் முடியுமா என்பதைக் கரு தானாய், அம் மாமுனிவரை இலேசாக மதித்து, மிக்க வீரத் துடன் ஆர்த்து, அப்படையை அவர் மீது எய்தான். உல கங்க ளெல்லாம் வெந்து நீராய்ப் போம் என்று விண்ணவர் முதல் யாவரும் அஞ்சி நடுங்க, வடவைக் கனலைப் போலச் சீறி யெழுந்து, பேராவத்துடன் ஊடுருவிச் சென்ற அப் படை இணையற்ற அழகுடைத்தாய வசிட்ட முனிவருடைய உடம்பை முட்டித் துகளாய் முறிந்து படியிற் சிந்தியது. அதைக் கண்டு வானவர், மாமுனிவர் மீது பூமாரி பொழிந்து களித்தனர். ஏனையோர், கௌசிகனுடைய வீரத்தை யிகழ்ந்து, கைகொட்டி நகைத்தனர்.

என்ன செய்வான் மன்னன்? மிக நாணி யகங் குலைந் தான். அவனுடைய உடம்பு துடி துடித்தது; முகங் கறுத்தது; கண்கள் சிவந்தன. வசிட்ட முனிவரைக் கொல்லு

தல் எளிதல்ல வென்பதை அவன் நன்ருய் யுணர்ந்தான்: மறையோதித் தவ மியற்றிய முனிவர்க் கல்லால் மற்றையோர்க்குத் திண்டிறல் வலிவும் வனப்பும் இல்லை என்று உட்கொண்டான். "இறையோரினும் துறவோரே வலியோரும் பெருமை யுடையோரு மாவர். யான் இறைவனுயிருப்பதனுல் யாது பெருமையை யடையப் போகிறேன்? ஒரு நாளும் துறவோரினும் உயர்ந்தவனுகேன் அன்ருே? எல்லாப் பற்றுக்களையும் துறந்து தவ மியற்றி யான் உயர்ந் தவனுதலே சாலச் சிறந்த தாகும்," என்று கூறி, மண்டல முழுதும் காத்த அம்மன்னன், ஒண்டவம் புரிய எண்ணங் கொண்டான்: தன் கையி லிருந்த வில்லம்புகளைக் கீழே விட்டெறிந்தான்; உடைவாளைப் பையுடன் கழற்றிப் போட்டான்; தான் அணிந் திருந்த முடியையும் விலையுயர்ந்த மாலைகளையும், பட்டாடைகளையும் அவிழ்த் தெறிந்தான்; தன்னிடத் திருந்த சில பஞ்சாடைகளை வற்கலை யாடைகளாகச் செய்து அணிந்தான்; உலக இன்பங்க ளெல்லாவற்றையும் துறந்தான்; விரைவாக நடந்து உம்பர்கோன் திசையை யுற்ருன்; தக்கதோர் இடத்தை நாடி யடைந்து கடுந் தவம் செய்யத் தொடங்கினுன்; மாதவத்தினருள் ஒருவனுனுன்.

---

பிரிவு - ௬

# திலோத்தமையின் தாழ்வு

கிழக்குத் திக்கை யடைந்து கௌசிகன், மறையோதி அருந்தவ மியற்றி அந்தணனுன செய்தி மிக அருமையான தாகும். பலவகை மரங்கள் நெருங்கி வளர்ந்ததால் இருள் நிறைந்ததும், கொடிய விலங்குகளுக்கு இருப்பிடமானது

மாய ஒரு மலை யடிவாரத்தில் தங்கிக் கௌசிகன், அச்ச மொழித்துச், சலிப்பற்ற மன வுறுதியுடன் இருந்து உண வை விட்டு, ஐம்பொறிகளை யடக்கி, ஒற்றைக்கால் பெரு விரலை மண்ணில் ஊன்றி, மற்றொரு காலை மடக்கி நின்று, மூக்கின் நுனியைக் கையால் பிடித்து, மழை வெயில் காற்று முதலியவற்றைப் பொருட் படுத்தாமல், இரவு பகல் என் னும் வேறுபாட்டை யொழித்து, ஒரே நிலையாகப் பன்னாள் வரை நின்று, மனத்தைக் கடவுளுடைய திருவடிகளை யுறுதி யாகப் பற்றச் செய்து, கடுந்தவ மியற்றினான். முதலில் அவன், சின்னாட்களுக் கொருமுறைப் பழங்களைத் தின்றும், பிறகு சில வாரங்களுக் கொருமுறைச் சருகுகளைப் புசித்தும், பின்னர் மாதத்திற் கொருநாள் வெறுந் தண்ணீரைக் குடித் தும், அப்பால் பல நாட்களுக் கொரு முறைக் காற்றை யுண்டும், இறுதியில் யாதொன்றையும் புசித்த 'லின்றிக் கடவுளுடைய திருவடிகளையே உணவாகக் கொண்டும் அரிய தவத் தொழிலிலேயே கண்ணுங் கருத்துமாய் நிலைத் திருந்தும், தவ வன்மையில் மிக்கு விளங்கினான்.

அங்ஙனம் அரசமாதவன் செய்த தவ வன்மையால் உண்டான வெப்பத்தினால் எல்லா உலகங்களும் வெதுப்புற் றன. மண் மகளும் அவனைத் தாங்க முடியாமல் வருந்தி னாள். தன்னுடைய தவ வன்மையினால் அவன், ஒருகால், மேலுலகத்திற்கு இறைவனானால் என் செய்வது என்று அமரர் கோன் எண்ணி யஞ்சினான். உடனே அவன், ஓர் அந்தணனாக வடிவுகொண்டு அம் முனிவனுக் கெதிரிற் சென்று, அவனுடைய தவத்தைக் கெடுக்கப் பலவாறு முயன்றான். அம்முயற்சிகளுள் ஒன்றேனும் பயன் பட் டிலது. புரந்தரனுடைய சூழ்ச்சிகளைப் பொருட் படுத்தாமல் அக்கௌசிக முனிவன், தன்னுடைய நிலைமையில் உறுதி

யாக நிலைத் திருந்தான். விண்ணவர் அரசன் வெறிதே வானுலகத்தை நாடித் திரும்பினான்.

அமராவதியை யடைந்ததும் அவன், கோமுனிவனுடைய தவத்தைக் கெடுக்கப் பலவாறு ஆராய்ந்து பார்த்தான்; தன் அரசவைக் குரிய அரம்பைமாருள் சிறந்த அழகியாய திலோத்தமையையழைத்துத், "தேனினும் இனிய சொற்களையுடைய அணங்கே! நீ விரைந்து போய் மண்ணுலகத்தை யடைந்து, குணபாலிற் கடுந்தவ மியற்றும் கௌசிக முனிவனை மயக்கி, அவனுடைய தவத்தைக் கலைத்து வருவாய்," என்று அவளை நோக்கி யுரைத்தான்.

கடவுளர் இறைவன் கூறியதற் கிணங்கத் திலோத்தமை கௌசிகன் தவஞ் செய்து கொண்டிருந்த இடத்தை யணுகி, அவனுடைய முன்னிலையில் ஆடல் பாடல் உலாவுதலாய இனிய செயல்களைச் செய்து வந்தாள். ஒரு நாள் அம்முனிவன், அவளைக் கண்டான்; அவளுடைய அழகில் ஈடு பட்டான். உடனே அவனுடைய உணர்வு கெட்டது; மனம் வேறுபட்டது. தான் மேற்கொண் டிருந்த தொழிலை யொழித்து அவன், அவ்வரம்பையினிடம் சென்று வேண்டி, அவளை மணந்தான்; சில நாட்கள்வரை அவளுடன் இனிதாக வாழ்ந்திருந்து பொழுது போக்கினான்.

அவ்வாறு இன்பத்துள் ஆழ்ந்திருந்த காலத்தில் ஒரு நாள் அவனுக்கு நல்லுணர்ச்சி யுண்டாயிற்று. தான் செய்திருந்த யாதினும் உயர்ந்த செயலைக் குறித்து அவன் நினைத்தான்; தன் அறிவு தாழ்ந்தமையைப் பற்றி மிக வருந்தினான்; தன்னுடைய நிலைமையைக் கெடுக்க முயன்றவர் யாவர் என்பதை யறிய அகக் கண்ணால் நோக்கினான்; இந்திரனுடைய தூண்டுதலால் திலோத்தமை தன்னை வஞ்சித்தாள் என்பதை உணர்ந்தான்; அப்பொழுதே அவளைப் பார்த்து,

"என்னை வஞ்சித்து, என்னுடைய உயர்ந்த நிலைமைக்குக் கேடு சூழ்விக்க வந்த மதியற்ற மாதே! எனக்குத் தாழ்வை யுண்டாக்கத் தொடங்கினையே! உன்னுடைய வஞ்சகத்தை யான் அறியாமல் கெட்டேன். என்னுடைய நிலைமையைத் தாழ்த்த நீ முயன்றதால், உன்னுடைய நிலைமையே தாழ் வடையக் கடவது. கடவுளர் இனத்தினின்று நீ தாழ்ந்து மண்ணுலகத்து மகளாய்ப் பிறக்கக் கடவாய்," என்று கண் மலர் சிவப்ப உளங் கொதித் தோதினன்; அவளிடத்தி னின்று நீங்கினன்.

முனிவனுடைய வெவ்வுரைக்கு ஆளான திலோத்தமை, மிக்க துயரத்தை யடைந்தாள்; தனக்கு நேர்ந்த தாழ்வை யெண்ணிக் கலங்கினள்; மன வருத்தத்துடன் அவ்விடத்தை விட்டகன்றாள். திலோத்தமையை விட்டுச்சென்ற முனி வன், சிறிது நேரம் ஆழ்ந்த கருத்துடன் ஓர் இடத்தில் உட் கார்ந்திருந்தான்; சரேலென வெழுந்து நின்றான்; திக்குப் பாலர் எண்மருள் வலியனான யமன் திசையை நோக்கிக் காற் றினும் கடிது நடந்து சென்றான்; அத்திக்கை யடைந்து தக்கதோர் இடத்தி லிருந்து முன்போலக் கடுந்தவ மியற்றத் தொடங்கினன்; கலக்க மற்ற மனத்துட னிருந்து தவத் துறையில் வன்மை யுறலானன்.

---

## பிரிவு - ரு

# திரிசங்குவைத் துறக்க மேற்றல்

கோமுனிவன் வளப்பத்தில் மிக்க தென் திசையைச் சேர்ந்து தவ மியற்றிக் கொண்டிருந்த காலத்திற், காய்கதிர்ச் செல்வன் குலத் துதித்த திரிசங்கு என்னும் மன்னன், அயோத்திமா நகரத் திருந்து கோசல நாட்டை யாண்டு

வந்தான். வயது முதிர்ந்தவனானமையின் அம்மன்னன், கல்வி யறிவு ஒழுக்கம் வீரம் முதலியவற்றுட் சிறந்தவனான அரிச்சந்திரன் என்னும் தன் மைந்தனுக்கு முடி சூட்டி நாட்டை யளித்தான். அரசியற் பொறுப்புத் தன்னை விட்டு நீங்கியதும் அவன், பேரின்ப வீட்டை யடைந்து இனிதாக வாழ்ந்திருக்க இச்சித்தான்.

மறுமை இன்பத்தை நாடிய அந்தத் திரிசங்கு, அரியதோர் எண்ணத்தை மனத்திற் கொண்டான்; தன்னுடைய குல குருவாய வசிட்ட முனிவரை யணுகிப் பணிந்து, அவரை நோக்கி, "பெருந்தகையீர்! தங்கள் அருளால் அடியேன் அரசுரிமையை யேற்றுப் பல்லாண்டுகள்வரை நாட்டைப் பாதுகாத்து இளைத்தேன். இனி மேலுலகத்தை யடைந்து இன்புற்றிருக்க விரும்புகின்றேன். இவ்வுடம்புடன் அடியேன் துறக்க மெய்தத் தாங்கள் அருள் புரிதல் வேண்டும்," என்று இறைஞ்சி நின்றான்.

அச்சொற்களைக் கேட்டு மாமுனிவர், சிரிப்புடன் திரிசங்குவைப் பார்த்து, "மன்னரேறே! இவ்வுலகத்தில் எத்தகைய அறிஞராலும் செய்ய முடியாத வேலையைச் செய்ய நினைத்தீரே. இவ்வெண்ணம் உமக்கு உண்டானது மிகப் புதுமையாகவே இருக்கின்றது. உடலோடு துறக்க மெய்தியவர் எவரேனும் உளரோ? நீர் உடம்புடன் துறக்க மடைய நினைத்தல் மிகத் தகாததாகும். இறந்து இவ்வுடலை யொழித்து உம்முடைய விருப்பத்தை முடித்துக் கொள்வீராக," என்று கூறி யருளினார்.

முனிவர் மொழியைக் கேட்டுத் திரிசங்கு அருவருப்படைந்து, அவரை நோக்கி, "என்னைத் துறக்க மனுப்பத் தங்களால் முடியாதாயின், தங்களைப் போன்ற வேறொரு குருவை யான் அடைந்து வேள்வியை முற்றி, என்னுடைய

விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்கின்றேன்,'' என்று மொழிந்தான். அச்சொல்லைக் கேட்ட வசிட்டருக்குச் சினம் மூண்டெழுந்தது. திரிசங்குவை நோக்கி அவர், ' உம் முடைய குல குருவாகிய என்னைப் பிழைத்து வேறோர் ஆசிரியரை நாடி உம்முடைய விருப்பத்தை முடிப்பதாய்த் தெரிவித்த தன்மை எனக்கு வியப்பை யுண்டாக்குகின்றது. உயர்ந்த மரபில் உதித்த உமக்கு இத்தகைய தாழ்ந்த எண் ணம் எதனால் உண்டாயிற்றோ? உம்முடைய மனம் நீசத் தன்மையை யடைந்ததால், நீர் நீசனாய்ப் போகக் கடவீர்,'' என்று உளங் கொதித் தோதினர்.

மலருளோன் மைந்தர் சீறி வழங்கிய வெவ்வுரையினால் அப்பொழுதே திரிசங்கு நீச னானன். அவனுடைய உடல் வனப்பும், உயர்ந்த குணமும், சிறந்த வீரமும் அழிந்தன. அவன் அணிந்திருந்த பசும் பொன்னாலும் இரத்தினங்க ளாலுமாகிய முடியும், மற்றை யணி கலன்களும் கரிந்து போயின. அவன் அணிந் திருந்த முப்புரிநூல் தோல் வாரை யாயிற்று. அவனுடைய முகப்பொலிவு முற்றிலும் கெட் டது. கண்டவர் பலரும் சிச்சீ என்று இகழ்தற் கொத்த வடிவத்தை அவன் அடைந்தான். முனிவருடைய முனி வால் தனக்கு நேர்ந்த கேட்டை யெண்ணி யெண்ணி அவன், தேம்பித் தேம்பிப் புலம்பினான். அவனுடைய மனம் புண் ணாயிற்று. இழிகுலத்தவனாய் அவன், அயோத்தியை யணு கினான். ஆங்குப் பலரும் அவனைப் பலவாறு இகழ்ந் துரைத் தனர். அதனால், மிக்க வெட்கமும் துக்கமும் நிறைந்தவ னாய் அவன், அயோத்தியை நீத்துக் காட்டை யடைந்தான்.

காய் கனிகளை யுண்டு கானகத்திடைப் பல விடங்களி லும் திரிந்து அலைந்து திரிசங்கு, துயரத்துடன் சில நாட் களைக் கழித்தான். ஒரு நாள் அவன், கௌசிக முனிவன்

தவஞ் செய்து கொண்டிருந்த இடத்தைக் குறுகினான் அவனைக் கண்டு முனிவன், "ஈனனே! நீ யாவன்? இங்கு, வந்ததேன்?" என்று கேட்டான். திரிசங்கு பணிவுடன். தான் இன்னான் என்பதையும், தனக்கு வசிட்ட முனிவரால் நேர்ந்த துன்பம் ஈதாகு மென்பதையும் கௌசிக முனிவ னிடம் உரைத்தான். அதைக் கேட்டதும் கௌசிகன், வசிட்டரிடம் தனக்கு முன்னரே உண்டாயிருக்கிற பகையை முன்னிட்டுத் துணிவுடன் திரிசங்குவை நோக்கி, "ஆ! அப் படியா செய்தான் வசிட்டன்? அயோத்தி மன்ன! நீ வரு ந்த வேண்டாம். கொடியனாகிய வசிட்டனால் உனக்கு நேர்ந்த துன்பத்தை யான் நீக்குவேன். பெரிய வேள்வி யொன்றை உனக்காகச் செய்து முடித்து, உடம்போடு உன் னைத் 'துறக்க மேக யான் செய்ய வல்லேன்," என்று கூறினான்.

அப்பொழுதே தொடங்கி அரிய தொரு வேள்வியைச் செய்து சின்னாளில் முடித்தான் கௌசிகன். அந்த யாகத் தை முடித்த பொழுது அவன், அதன் பயனைத் திரிசங்குக் குத் தருவதாய்ச் சொல்லி அவி யேற்க விண்ணவரையும், விண்ணவர் கோனையும், முனிவர்களையும் கூவி யழைத்தான். ஆண்டுச் சுற்றிலு மிருந்த முனிவர் பலர், கௌசிகனிடம் சேர்ந்து குழுமினர். ஆயினும் வசிட்டர் மைந்தர், அக்கௌ சிகனிடம் சென்றிலர். அவர், "இஃது என்ன கொடுமை! கௌசிக முனிவன் அரிய வேள்வியை யாற்றி, அதன் பயனைப் புலையனுக்கு அளிக்கப் போகின்றானே! யாம் இது வரை இவ்வாறு செய்தவரை எங்கும் கண்டிலேம். வேள்வி முடிவைக் கருதிக் கௌசிகனிடம் செல்ல யாம் உடன் படேம்," என்று சொல்லினர். அவர் கருத்தை யறிந்த கௌசிகன், 'உள்ளடங்காச் சீற்றங் கொண்டான்; வசிட்

டருடைய மைந்தரை வேடராய்ப் போகச் சூளுரை யுரைத்தான்.

அன்றே கோமுனிவருடைய கொடு மொழியால் வசிட்ட முனிவருடைய புதல்வர் எயினராகி, அடவிகடோ றும் சென்று திரிய லாயினர். கௌசிகன் வேள்வியை முடித்து வானவரை வருக வெனக் கூவினான். அவர், "அரசனா யிருந்து முனிவனான இவன் அறிவிழந்து வேள்வி யையும் அக்கினி காரியத்தையும் புலையனுக்குச் செய்து கொடுக்க இசைந்தானே. இவன் செயல் மிக நன்றா யிருக் கிறது. எம்மையும் இழிந்தவராக்க அழைக்கின்றானே. இவ னுடைய தகாத வேலைக்கு யாம் உடன் படுவோமா," என்று இழித் துரைத்துச் சிரித்தனர். அவருடைய எண்ணத்தை யுணர்ந்த அரசமாதவன், சினத்துடன் அந்நேரமே தன்னு டைய தவ வன்மையால் ஓர் அருமையான தேரை யமைத்து, அதனிடம் திரிசங்குவை யுட்காருவித்து, அவனை நோக்கி, "என்னுடைய தவ வன்மையால் யானே உரைத்தேன், நீ துறக்கம் போவாயாக," என்று சொல்லி, வானக மேறிச் செல்லத் தேரைத் தூக்கி விட்டான்.

கோமுனிவனுடைய தவ வன்மையால் தேரில் அமர்ந்த திரிசங்கு, மேலுலகத்தைக் குறுகினான். வானவர் அனைவரும் வெகுண்டு அவனை நோக்கி, "அடே புலையா! எம்முடைய உலகத்திற் புகாதே. ஆசிரியரைப் பிழைத்து நீசனான நீ இங்கு வரத் தகுமா? மண்ணுலகம் செல்," என்று சொல்லி, அவன் ஏறிப் போந்த தேரைக் கீழுலகத்தில் விழுமாறு பணித்தனர். உடனே அத்தேர், தலை கீழாக விழச் சாய்ந்தது. அவ்வேளைத் திரிசங்கு அஞ்சி, "கௌசிக முனிவரே! உம் மையே புகலிடமாகக் கொண்டேன்; உம்முடைய திருவடி களையே துணையாக நம்பி யுள்ளேன்; என்னைக் காப்பாற்றல்

வேண்டும்,'' என்று கூறி யரற்றினன். அம்மொழிகளைக் கேட்ட கௌசிகன், சொல்லொணுச் சினங் கொண்டான்; தலை கீழாகச் சாயத் தொடங்கிய தேரைப் பார்த்து, "அவ் விடத்திலேயே நில், நில்! யானே பணித்தேன்,'' என்று உலகங் ளெல்லாம் அதிர ஊத்த குரலோடு உரு மொக்க உரைத்தான்.

தேர் கீழே விழாமல் அவ்விடத்திலேயே நின்றது. உடம்பு பதைக்க, உதடுகள் துடிக்கக், கண்கள் சிவக்கக், கண்களினின்று நெருப்புப் பொறிகள் கிளம்பிப் பறக்க வானகத்தை அண்ணுந்து பார்த்து முனிவன், "திரிசங்குவே! உனக்கு மேலுகத்தில் இடம் தந்து காக்க மறுத்து இகழ்ந்த விண்ணவரையும், அவருடைய பெரும் பதம் முதலிய சேண் முழுவதையும் யானே இதோ புதிதாக அமைக்கின்றேன்,'' என்று சொல்லி, செழுங்கதிர் கோள் நாள் திங்கள் முதலிய வெல்லாம் மாளுெளி கெடாது தெற்கு வடக்கதாய் வருக வென்ருன்; மற்றும் அளவு கடந்த முனிவுடன், "தானு வோடு ஊர்வன எல்லாமும் இதோ உண்டாக்குகின்றேன்,;' என்று சொல்லித் துள்ளிக் குதித்தான்; கை கால்களை யுதறி நிமிர்ந்து நின்ருன்; கண்களை யுருட்டி எல்லாப் பக்கங்களை யும் பார்த்துக் கைகளை இடுப்பின் மீது வைத்து வானகத்தை நோக்கினன்.

அவனுடைய வெகுளியையும், துணிவான செயலையும் கண்டு உலகங்களெல்லாமும் அஞ்சி நடுங்கின. புருகூதன் அயன் அரன் முதலிய கடவுளர் பலரும் அம்முனிவ னெதி ரில் தோன்றி, இன்ப முண்டாகப் பேசி அவனுடைய சினத்தைத் தணித்து, முடிவில் அவனை நோக்கி, "முனிவர் பெரும! உன்னைப் புகலிடமாகக் கொண்டவனைப் போற்று தல் அறநெறியே யாகும். நீயோ அரசமாதவ னுவாய்;

ஆதலால், ஐந்து நட்சத்திரங்கள் வானகத்தின் தென்பாலில் தோன்றி, உன்னுடைய பெருமையை எப்பொழுதும் விளக்குக. அந் நட்சத்திரங்களுக் கிடையில் திரிசங்கும், தேரில் தலை கீழாக நட்சத்திர வடிவத்துடன் தாரா கணத் தொடு அமைந்து என்றும் விளங்கி யிருக்கக் கடவன்,'' என்று சொல்லினர். மறுத்துப் பேசாமல் கடவுளர் மொழிக் குக் கௌசிகனும் இசைந்தான். அவனுக்கு ஆசி கூறிக் கடவுளர் கூட்டம் மறைந்தது.

நிறைந்த தவ வன்மையை யுடைய கோமுனிவனும் தென் திசையை யொழித்து நெடுங்கடற் கிறைவனன வரு ணன் வைகும் திக்கை நோக்கிப் போனன்; அத்திசையை யண்மி, ஏற்ற இடம் ஒன்றை நாடித் தங்கி, மனத்தை யடக்கித் தூய தன்மையனாய்த் தவத் தொழிலில் ஈடு பட்டிருந்தான். அவனுடைய மன வுறுதியையும் விடா முயற்சியையும் கண்டு விண்ணவரும் மண்ணவரும் மிகப் புகழ்ந்து கொண் டாடினர்.

---

பிரிவு - ௬

# மருமகனைக் காத்தல்

மேற்றிசைக்கண் கௌசிகன் கடுந்தவஞ் செய்திருந்த காலத்தில் அம்பரீடன் என்னும் கோமகன் ஒருவன், நரமேத யாகம் செய்ய எண்ணினன். தன் ஆளுகைக் குட்பட்ட மக்களை உயிரினும் அரிதாய்ப் பாது காத் திருந்த அவ்வேந் தன், தான் செய்ய நினைத்த வேள்விக்கு வேண்டிய எல்லா அழகுகளும் நிறைந்த மைந்தன் ஒருவனை விலை கொடுத்து வாங்கக் கருதிக், கணக் கற்ற பொருளை யுடன்கொண்டு தேரேறிச் சென்றான்; தனக்கு வேண்டிய சிறந்த வாலிப

னொருவனைத் தேடிப் பல இடங்களிலும் திரிந்து கௌசிகன் இருந்த காட்டிற் புகுந்தான்; அக்கானகத்தில் நாலாப் பக்கங்களிலும் சென்று தேடிக் கொண்டே முனிவர் பலர் தவஞ் செய்துகொண்டிருந்த ஒரு சாலையை யடைந்தான்.

அச்சாலையினிடம் உருசிகன் என்னும் அறிஞன் ஒருவன், தவ மியற்றிக் கொண்டிருந்தான். அவன், கௌசிகனுடைய உடன் பிறந்தாளாகிய ஒருத்தியை மணந்தவனாவான். அவனுக்கு எல்லா அழகுகளும் கல்வி யறிவும் சாலப் படைத்த மைந்தர் மூவர் இருந்தனர். அவனுடைய மனைவியும் மைந்தரும் காட்டகத்து அவனோ டிருந்து, அவன் மேற்கொண்ட தவத் தொழிலுக்கு உதவி புரிந்து வாழ்ந்திருந்தனர். அம்பரீடன் அப்புதல்வரைப் பார்த்து, அவருள் ஒருவனைப் பெற்றுச் செல்ல இச்சித்தான்; அவருடைய வரலாற்றைக் கேட்டறிந்து தன் விருப்பத்தை அவரிடம் வெளியிட்டான். வறுமை நோய்க் குட்பட்டு மிக வருந்தி யிருந்த அம்மைந்தர், மன்னனுடைய விருப்பத்திற் கிசைந்தனர்; ஆயினும், தம்முடைய தாய் தந்தையரிடம் சொல்லி, அவருடைய கட்டளையைப் பெற்று தம்முள் ஒருவனைத் தருவதாய் அவ்வரசனிடம் தெரிவித்தனர்; அவனை யழைத்துக் சென்று தம்முடைய பெற்றோரை யணுகிப் பணிந்து நின்றனர்.

உருசிகனுடைய அடிகளைப் பணிந்து வணக்கத்துடன் அம்பரீடன் நின்றான். அவனை யழைத் தேகிய மைந்தர், அவனுடைய இச்சையைத் தம் இருமுதுகுரவரிடம் தெரிவித்தனர். அதைக்கேட்டு உருசிகன், மூத்த மைந்தன் தமக் குரியன் என்றும், அவனைத் தர முடியா தென்றும் அம்பரீடனிடம் சொன்னான். உருசிகனுடைய மனைவியும், தன் மைந்தருள் இளையவன் தனக் குரியன் என்றும், அவனைக் கொடுக்க முடியா தென்றும் மன்னனிடம் தெரிவித்தாள்.

பெற்ரேருடைய மொழிகளைக் காதேற்ற இடைப் பட்ட மற்றை மைந்தன், உடல் குலுங்கநகைத்து அம்பரீடனை நோக்கி, "மன்னர் மன்ன! மூத்தவனைத் தாதை தனக் கென்ருன் ; இளவல் எற்கே என்ருள் பெற்றவள் ; ஆதலால், இடைப் பிறந்த யான் உமக்கே உரியவனுனேன். என்னுடைய, தாய் தந்தையர் வறுமையால் எல்லையற்ற துன்பத்திற்குள் ஆழ்ந்து கிடக்கின்றனர். அவர்க்குப் பொருள் வேண்டியதே யாகும். நீர் கொணர்ந்துள்ள பணம் முழுவதையும் அவர்க் குக் கொடுத்து என்னைக் கொண்டு சென்று உம்முடைய வேள்வியை முடிப்பீராக. என் உயிரையும் உடம்பையும் உமக்கே இதோ அளித்தேன் ; அதனுல் எனக்கும் நற்கதி யுண்டாகும்; நீரும் வேள்வியை முடித்துப் பெரும் பேற்றைப் பெற்றுப் புனித ராவீர் ; என்னுடைய அன்னை அப்பனும் உடன் பிறந்தவரும் வறுமையை யொழித்து இனிதாக வாழ்ந்திருக்கக் கடவர்," என்று முக மலர்ச்சியுடன் மொழிந் தான். உடனே அம்பரீடன், தன்னிடத் திருந்த பொருள் முழுவதையும் அம்மைந்தனிடம் ஈந்தான். அவன் அதைத் தன் தாய் தந்தையரிடம் வழங்கி, அவரை வணங்கி விடை கொண்டு, அம்பரீடனுடைய தேரிற் குதித் தேறினுன்.

தான் நாடிச் சென்ற வேலை இனிது முடிந்தமைக்கு மிக்க மகிழ்ச்சி யடைந்த அம்பரீடன், தன் தேரி லேறி யுட்கார்ந்து குதிரைகளை விரைந்து செல்லத் தூண்டினுன். அவை காற்றினும் கடிது தாவிப் பாய்ந்தன. அத்தேர் நெடுந் தூரம் அவ் அடவியிற் சென்று, அரசமாதவன் தவஞ் செய்துகொண்டிருந்த சூழலுக் கணித்தானதும், சுடர்க் கதிர்க் கடவுள் வானகத்தின் உச்சியை யடைந்தான். அப் பொழுது மன்னன், தேரை ஓர் இடத்தில் நிறுத்திக் குதிரை களை மர நிழலில் இருத்தி, தேரினின்று இழிந்து, அவ்

வேளைக் குரிய அருங்கடனை முறையே செய்து முடிக்க, ஆங்கிருந்த தோர் இடமகன்ற குளத்தைக் குறுகினான். உருசிகனுடைய மைந்தனும் தேரை விட் டிறங்கி முகவாட்டத்துடன் ஒரு மரத்தடியில் தங்கி யிருந்தான்.

சிறிது நேரத்திற்குள் அச்சிறுவன் நின்றிருந்த இடத்திற் கருகிற் கௌசிகன் சென்றான். அம்முனிவனைக் கண்டதும் சிறுவன், விரைந்து போய்க் கீழே விழுந்து, அவனுடைய இணை யடிகளை வணங்கி, எழுந்து கைகட்டி நின்றான். அங்ஙனம் சிறப் பொடு வணக்கஞ் செய்த அவ்விடலை தன்னுடைய மருமகன் என்பதை யுணர்ந்த முனிவன், அவனைப் பரிவுடன் பார்த்துச், "செல்வக் குழந்தாய்! பெற்றோரைப் பிரிந்து நீ ஈண்டு வருவானேன்? உன் முகம் வாடியிருப்பதேன்? இக்கொடிய கானகத்தில் அறியாச் சிறுவனாகிய நீ தனித்துத் திரியலாமா?" என்று சொல்லி, அம்பரீடனுடைய தேரும் குதிரைகளும் இருந்த திக்கை நோக்கினான்; அவற்றைக் கண்டான்; அவை யாருடையன வென்று தன் மருமானைக் கேட்டான். அம்மகன். அவை அம்பரீடனுக்கு உரியன என்பதையும், தான் அவ்வேந்தனுக்கு விலைப் பட்டமையும் விளங்கக் கூறினான்.

மருமகனுடைய சொல்லைக் கேட்டதும் கௌசிகன், " ஆ ஆ! உன்னுடைய தாய் தந்தையர் அங்ஙனம் செய்தனரா? அருமருந் தன்ன பிள்ளாய்! நீ அஞ்ச வேண்டாம். உன்னுடைய உயிரை யான் காக்கின்றேன்," என்று சொல்லி, வசிட்ட முனிவருடைய பார்வைக் கிலக் காகாமல் தவறிப் பிழைத்து, அம்பொழுது தன்னிட மடைந் திருந்த தன் மைந்தர் நால்வரையும் விளித்து, அவருள் யாவனாயினும் ஒருவன் தன் மருமானுக்குப் பதிலாக அம்பரீடனுடன் செல்லுமாறு அறிவித்தான். ஆருயிர் வழங்க எவர்தாம்

இசைவர்? அம்மைந்தர் நால்வரும் தந்தையினுடைய சொல்லுக்கு உடன் படாமல் அவ்விடத்தை விட்டு அப்புறம் செல்லத் தொடங்கினர். தன் புதல்வருடைய செயலைக் கண்டு கௌசிகன், மிக வெகுண்டான். குணபால் தோன்றும் கதிரவனும் நாணும்படி அவனுடைய இரண்டு கண்களும் சிவந்தன; நெஞ்சம் புழுங்கிற்று; வடவைத் தீயை யொப்ப உடம்பின் மீது நெருப்புப் பொறிகள் பறந்தன. பெருமூச் செறிந்து தன் மக்களை நோக்கி அவன், "உயர்ந்த மரபிற் பிறந்து கல்வி கேள்விகளிற் சிறந்தவ ராயிருந்தும், பெற்றுவளர்த்த தந்தையினுடைய சொல்லை மறுத்தமையால் நீவிர் ஒழுங் கற்ற புளிஞராகி அடவிக டோறும் சென்று அலைந்து மிக்க துயரத்தை யடையக் கடவீர்," என்று சூளுரை யிட்டான். தந்தையினுடைய கொடு மொழிக்கு இலக்காகிய அப்புதல்வர் அப்பொழுதே வேடராகி யகன்றனர்.

தன் மருமகனை அருகழைத்து மார்புற அணைத்துத் தழுவி, அவனைப் பார்த்து அன்புடன் கோமுனிவன், "ஒப்பிலா அப்பா! உன் துயரத்தை யகற்றுவாய். இதோ நான் சொல்லித் தரும் இந்த மந்திரங்கள் இரண்டையும் நன்றாய்க் கற்றுக்கொள்; அரசனோ வேட்கி மக மியற்றும் இடத்தை யணுகி, யாகத் தூண் கட்டும் போது இம்மறையை யாய்ந்தி; உன்னுடைய உயிருக்கு இறுதி யுண்டாகாது. வேந்தனுடைய வேள்வியும் இனிது முடியும். விண்ணவர் முனிவர் முதலியோர் உன்னைத் தொழுவர்," என்று கூறி, இரண்டு மந்திரங்களைக் கற்பித்தான். அம்மறையைச் சிறுவனும் ஒழி யுறுதியாக மனத்திற் கொண்டான். கௌசிகன், மருமானுக்கு ஆசி கூறி அப்புறம் சென்றான்.

நடுப்பகல் காலக் கடன்களை முறையே முடித்துக் குளத்தினின்று திரும்பி அம்பரீடன், தன் தேர்மேலானன். உருசிகனுடைய புதல்வனும் அத்தேரி லேறி யமர்ந்தான். வேந்தன் தேரை விரைவாகச் செலுத்தித் தன் நகரத்தை யடைந்தான்; அற்றைக்கு மறுநாளே தான் எண்ணிய யாகத்தைச் செய்யத் தொடங்கினன். அம்மான் அருளிய வண்ணம் உருசிகனுடைய மைந்தன், யாகத்தூணை யமைத்த போது அதனிடம் சென்று, தான் கற்ற மந்திரங்களைச் செப்பினன். வேள்வி சிறப்புடன் நடந்தேறியது. முனிவர் கடவுளர் முதலிய பல்லோர் அவ்விடத்தை யடைந்து, யாகத்தையும், மறை யாய்ந்த மக னுயிரையும் காத்தனர். அச் செயலை யறிந்து உலகத்தினர் பலரும் மகிழ்ந்தனர். தன் மருமானுடைய உயிர் மகத்திடைத் தப்பியதைக் கேட்டுக் கௌசிகன், உவகை மிகக் கொண்டான்; குடபாலை யொழித்து வட திசையை நாடிச் சென்றான்.

---

## பிரிவு - எ

# சகுந்தலையின் பிறப்பு

குலமலைகள் எட்டனுட் சிறந்ததாய பனிமால் வரையினுடைய சாரலை யடைந்து அரசமுனிவன், ஈடும் எடுப்பு மற்ற அருந் தவம் செய்யத் தொடங்கினன். உயர் வற்ற அவனுடைய தவ நிலையைக் கண்டு எல்லா உலகத்தினரும் வியப்பும் விறப்பு மெய்தினர். அந்நாளில், மழை யின்மையால் பஞ்சம் பெருகி நாடுகளெல்லாமும் வறுமை நோய்க்குட்பட்டு மிக மெலிந்தன. எல்லா உயிர்களும் உணவு

முதலியன இன்றி இறக்குந் திறத்தினவா யிருந்தன. அக் கொடுமையைத் தெரிந்து கௌசிக முனிவன், மன்னுயிர்க ளிடம் மிக்க இரக்கங் கொண்டு, அவ்வுயிர்களுக்குத் தண் ணீர் அளிக்கவும், தனக்குக் குளிக்கவுமாக உதவ ஓர் ஆழ்ந்த ஆற்றைத் தன்னுடைய தவ வன்மையால் படைத்தான். எவராலும் இறங்கிக் கடந்து செல்ல முடியாத அவ்வளவு ஆழ முடைய அந்த ஆறு, கௌசிகி என்னும் பெயரைப் படைத்தது. அந்நதியினுடைய நீரால் பல்லுயிரும் காக்கப் பட்டன. மற்றும் அம்முனிவன், அவ் வற்கட நாளில் மக்க ளுக்கு உயிரோம்ப வேண்டிய பொருள்கள் பலவற்றையு மளித்துப் பேருதவி புரிந்தான்; பஞ்சத்தை விரைவில் ஒழிக் கத் தன்னால் இயன்றவரைப் பாடு பட்டு உயிர்களைப் பாது காத்தான். உற்ற காலத்தில் அங்ஙனம் உலகத்திற்குத் துணை புரிந்தமையால் அப் பெருந்தகைக்கு விசுவாமித்திரன் என்னும் அரியதொரு பெயரும் உண்டாயிற்று.

உலகத் துயிர்களைக் காத்துத் தன் தவத் தொழிலி லேயே மனத்தை யுறுதியாக நாட்டி யிருந்தான் கௌசிகன். அவனுடைய தவ நிலைமையைக் கண்டு விண்ணவர் வேந்தன், மிக்க மனக் கலக்க மடைந்தான். தான் அடைந்திருந்த உயர்ந்த நிலைமையினின்று தன்னைத் தள்ளி விட்டு அம்முனி வன் வானவர் கோனாக வரின் என் செய்வதென்று எண்ணி ஐயங் கொண்டான்; அஞ்சி மனம் நொந்தான்: அம்முனி வனுடைய தவத்தைக் கலைக்கப் பலவாறு ஆராய்ந்தான்; ஏங்கித் திகைத்தான்; தன்னிட மிருந்த அரம்பையருள் அழகிலும் அறிவிலும் உயர்ந்தவளாய மேனகையை யழைத்து, அவளை நோக்கி, "மின்னலைச் சிரிக்கும் நுண்ணி டையாய்! எனக் கோர் உதவியை நீ இப்பொழுது செய்ய உடன் படல் வேண்டும். கௌசிகனுடைய தவத் தொழிலைக்

கண்டு என் மனம் கலங்குகின்றது. தன்னுடைய தவ வன்மையால் அவன், இவ்வுலகத்திற்கு அரசனாக வந்தால் நம்முடைய நிலைமை யென்னாகும்? பின்னர் துன்பத்தை யடைந்து திகைப்பதினும் இப்பொழுதே அவனுடைய தவ வலிவைக் கெடுப்பது நன் றல்லவா? மனத்திற் கினிய மங்கையே! ஆதலால், நீ விரைவில் அம்முனிவனிடம் சென்று, உன்னுடைய கட்டழகாலும், அன்ன மன்ன மென் னடையாலும், குயிலை யொத்த குரலாலும், தேனின் கசிவந்த சொற்களாலும், எத்தகைய மன வுறுதியை யுடை யோரும் மயங்கக் கூடிய ஆடல் பாடல்களாலும் அம் முனிவனை மயக்கி உன் வயத்தனாகச் செய்து, அவனுடைய தவத்திற்கு விரைவிற் கெடுதி சூழ்விப்பா யாக," என்று மொழிந்தான்.

அமரேசனுடைய சொற்களைக் கேட்ட மேனகை, வியப் புடன் அவனைப் பார்த்து, "ஆண்டவரே! கௌசிக முனி வனுடைய தன்மையை நீர் அறிந்திருந்தும் என்னை அவனி டம் போகச் சொன்னீரே. அம் முனிவன் செய்த அரிய செயல்களை யெல்லாம் நீர் அறிவீர் அன்றோ? முன் னொரு கால் நம்மவரிடம் சினங் கொண்டு எல்லா உலகங்களையும் கடவுளரையும் புதிதாகப் படைப்பேன் என்று துணிந்து சொல்லித் துடித்தவன் அவ னுவானே. கடுந் தவ மியற்றி நொடிப் பொழுதில் உலகங்களை யெல்லாம் எரிக்கக் கூடிய வல்லமையையும், கால் விரலால் பூமியை நடுங்கச் செய்யக் கூடிய திறமையையும், எல்லா உலகங்களையும் கிறு கிறு வென்று சுழற்றத் தக்க கைவன்மையையும், மேருமலையைத் துரும்பைப் போல் எடுத் தெறியக் கூடிய மூச்சினுடைய வலிவையும் பெற்று விளங்கும் அக் கோமுனிவனுடைய நிலைமையை யான் எங்ஙனம் அசைக்கக் கூடும்? அவனை

நினைக்கும் போதே என் உள்ளம் நடுக்க முறுகின்றதே. அண்ணலே! ஐம் பொறிகளையு மடக்கிச் சுடர் விட்டெரியும் நெருப்பைப் போன்றுள்ள அம்முனிவனை நான் எப்படி மயக்கு வேன்? நெற்றியை நெருப்பாகவும், கண்களைக் கதிரவனும் திங்களுமாகவும், நாக்கை யமனாகவும் கொண்டுள்ள அக் கௌசிக னெதிரில் யான் செல்லத் துணிதல் நன்றாமோ? முனிவர்களும் திக்குப் பாலரும் கடவுளரும் அவனுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தானே நடுங்குகின்றார்களே. அத்தன்மைத்தாயவ னிடம் என்னைப் போகச் சொல்லுகின்றீரே! யான் என்ன செய்வேன்? உம்முடைய கட்டளையை எவ்வாறு மறுப்பேன்? அமரர் கோவே! என் நிலைமை எவ்வாறாயினும் ஆகுக. மண்ணுலகம் சென்று கௌசிகனுடைய தவத்தைக் கெடுக்க என்னால் இயன்ற வரை யான் முயல்கின்றேன். ஆயினும், யான் விரும்பும் வண்ணம் எனக்கு உதவி புரிய வாயுதேவனையும் மன்மதனையும் என்னுடன் நீர் அனுப்புதல் வேண்டும்,'' என்று பகர்ந்தாள்.

கொண்டல் வாகனன் அவ்வணங்கை நோக்கி, "மங்கையர் மாணிக்கமே! நின் விருப்பத்திற் கிணங்க நடப்பேன். நீ சென்று தக்கதொரு வகையால் கௌசிகனுடைய தவத்திற்குக் கேடு சூழ்விப்பாய்,'' என்று சொல்லி, வாயுதேவனையும் மன்மதனையும் தன் முன்னர் வர எண்ணினான். அந்நேரமே அவ்விருவரும் அவ் விறைவனுடைய எதிரிற் போந்தனர். அவரிடம் இந்திரன், தன் கருத்தைத் தெரிவித்து, மேனகையுடன் போய் அவளுக்கு வேண்டிய உதவியைச் செய்யுமாறு அவரைக் கேட்டான். புருகூதனுடைய கருத்துக்கு அவ்விருவரும் இசைந்தனர். உடனே அவ்விருவருடன் மேனகை, இறைவனிடம் விடைபெற்று விண்ணாட்டி

னின்று கீழ் இறங்கிக் கோமுனிவ னிருந்த திக்கை நோக்கிச் சென்றாள்.

கண்டவர் கலங்க, மண்ணவர் மயங்க, விண்ணவர் வியக்க, முனிவார் வெருள, ஓண்டவம் ஓங்க மன மெனுங் குரங்கை மாதவக் கயிற்றால் மாண்புடன் பிணித்து மாபெருந் தூய நிலைமையை யடைந்து, மாதவன் மகிழ்க்க, ஓதலிற் சிறக்க, ஓங்கார மெனும் ஓர் எழுத்துக் களிக்க, ஒருமனப் பட்டு மாண்ட மாதவத்தனுகி நின்ற முனி கௌசிகன் இருந்த சூழலை நெருங்கி மேனகை, அம் முனிவனுடைய ஒப்பற்ற தன்மையைக் கண்டு, உள்ளத் தாசை யெலாம் விண்டு, ஏங்கி நின்றாள். சிறிது நேரம் கழிய ஒருவாறு மனத் தெளி வடைந்து அம்மாதரசி, விசுவாமித்திரன் இருந்த இடத்திற் கருகில் தங்கி யேற்ற காலத்தை யெதிர்பார்த்துச் சின்னாள் வரை இருந்தாள். அப்பொழுது அவள், நாடோறும் மாலை வேளையிற் கௌசிக னெதிரில் மின்னலைப் போலத் தோன்றி வல்லிக் கொடியைப் போல் அசைந்து, உடனே மறைந்து போதலை வழக்க மாகக் கொண் டிருந்தாள். வாயுதேவன் அக்காட்டி லிருந்த நறுமணம் மிக்க பூக்களை யெல்லாம் வாரி அம் முனிவனிடம் சொரிந்து, அவனுடைய மனத்திற் கின் பத்தை யுண்டாக்கி வந்தான். மன்மதன், அம்மாதவனுடைய மனத்தை மெல்ல அசைத்து, மேனகையினிடம் செல்லத் தூண்டி வந்தான்.

அவ்வாறிருந்த காலத்தில் ஒரு நாள், மாலைப் பொழு திற் கௌசிகன், கடுந் தவத்தினின்று நீங்கி ஒரு வாறு மகிழ்ச்சியுட னிருந்தான். அவன் அங்ஙன மிருந்ததைக் குறிப்பால் எளிதல் அறிந்த மேனகை, வாயு தேவனைத் தூண்டினாள். அத்தேவன் விரைந் தேகிக் கோமுனிவனுக்குச் சுற்றிலும் மலர்மாரி சொரிந்து நறுமணம் கமழச் செய்தான்.

அப்பொழுதே மேனகையின் ஏவலால் மன்மதன், பையச் சென்று முனிவனுடைய மனம் மேனகையின்மீது நாட மலர்க்கணை மெல்ல எய்தான். விரைவில் மேனகை, பொன்னுற் செய்த உயர்ந்த ஆடை அணிகலன்களைப் புனைந்து, தலை மயிர்ப் பின்னலைத் தொங்க விட்டுப் பூ முடித்துக், கண்களுக்கு மைதீட்டி, நுதலிற் பொட்டிட்டு, நறுமணத் தூளைத் தூவிக் கொண்டு பொன்னியை நிகர்த்த பொலிவுடன் செஞ்சடை முடித்த முனிவ னெதிரிற் போய்க் காற்சிலம்புகள் கலீர் கலீர் என அடி பெயர்த்து, வைரம் முதலிய சிறந்த மணிகளாலாய வளையல்கள் மின்னலையொப்ப ஒளிவீசக் கைகளைத் தூக்கி மனக் குறிப்பை வெளிக் காட்டி யாடினுள்; அவ்வாடலுக் கேற்பப் பட்ட மரங்களும் தளிர்க்கக் கற்களும் கரைந் துருக இன்னிசைப் பாடல்களை யிசைத்தாள். வல்லிக் கொடியைப்போல் அசைந்தாடிய அவளுடைய ஆடை அணிகலன்களை வாயுதேவன், அப்போதைக் கப்போது அழகுடன் திகழ அசைத்து வந்தான்.

அங்ஙனம் நிகழ்ந்த ஆடல் பாடல்களைப் பார்த்து எவர்தாம் மன முருகா திருப்பர்? கடவுளரும் அச்செயலைக் கண்டு மதிமயக்கங் கொள்வர் என்ருல், மற்று யார்தாம் மயங்காம லிருப்பர்? அப்புதுமையான நிகழ்ச்சியைக் கண்ட கோமுனிவன், வியப் பென்னுங் கடலுக்குள் ஆழ்ந்தவனுனன்; மேனகையை யுற்றுப் பார்த்தான்; அழகெலாம் திரண்டு ஓர் உருக்கொண்டாற் போன்ற அவளுடைய வடிவத்தைக் கண்டு மதி மயக்கங் கொண்டான். அவனுடைய உள்ளம் உருகிற்று. அந்த அணங்கை மணக்க எல்லையற்ற இச்சை அவன் மனத்தில் மூண்டெழுந்தது. அடங்கா ஆசைக்குட்பட்டு அவன், தான் இருந்த விடத்தை விட்டு மகிழ்ச்சியுடன் மேனகையினிடம் சென்ருன்; புன் சிரிப்

பாலும் முக மலர்ச்சியாலும் தன் குறிப்பை அம்மங்கைக்கு உணர்த்தி நின்றான்.

தன்னெதிரில் வந்துநின்ற முனிவனுடைய தன்மையை யறிந்த மேனகை, நாண மடைந்தவளைப் போல் நடித்துச் சிறிது விலகிச் சென்றாள். முனிவனும் அவளைத் தொடர்ந்து சிறிது அடி பெயர்த்து நின்றான்; தன்னுடைய கைகளால் அவளுடம்பைத் தொட்டு மகிழ நினைத்தான்; மெல்ல அவளைப் பிடித்துத் தன் மடியின் மீது உட்கார வைத்து, அவளுடன் அள வளாவிப் பேசிக் களிக்க எண்ணங் கொண்டான்; அச் செயலால் அவள் வெருண்டு வானகத்தை நோக்கித் தாவிப் பாய்ந்தால் என்ன செய்வ தென்று நினைத்து அவ்வெண்ணத்தை விட் டொழித்தான்; அவளை யடையச் செய்வ தின்னதெனத் தோன்றாமையின் திகைத்து நின்றான்.

மேனகை, தான் மேற்கொண்ட ஆடல் பாடல்களை விட் டொழித்துத் தூரத்தி லிருந்த யாதோ ஒரு பொருளை யுற்றுப் பார்ப்பவளைப் போலப் போலித் தன்மையை மேற் கொண்டு நின்றாள். அவ்வேளை முனிவன், பரிவுடன் அவ ளெதிரிற் போய் நின்று, அவளுடைய அழகையும், ஆடலை யும் பாடலையும் பற்றிப் புகழ்ந் துரைத்து, அவளுக்கு இன்ப முண்டாகுமாறு பலவற்றைப் பேசி, முடிவில், தான் அள வற்ற தவப் பெருமையை யுடையவன் என்றும்; தன்னை மணந்து இனிதாக வாழ்ந்து புனிதவதி யாகலாம் என்றும் அவளிடம் கூறி இறைஞ்சினான். அவனுடைய விருப்பத்திற் குத் தடையின்றி இசைவதாய் மேனகையும் தெரிவித்தாள்.

அருமறை மன்றல் எட்டனுள் சிறந்ததாய கந்தருவ மணத்தில் மேனகையை யடைந்து விசுவாமித்திரன், இணை யற்ற உவகையுடன் கையைப் பற்றி அவளை மெல்ல அழைத் தேகித் தன் ஆச்சிரமத்தைச் சேர்ந்தான்; தவத்தொழிலை

யறவே மறந்து அன்று முதல் அந்த அரம்பையையே ஆண்டவனாக மதித்து, அவளுக்கு வேண்டியவற்றை அப்போதைக் கப்போது தடையின்றி யளித்து, இன்பத்துடன் வாழ்ந்து வந்தான்; தவத்தைக் கனவிலும் கருதாதவனாய் மேனகையின் மனத்திற்கு இனியவற்றைச் செய்தலையே பெருநோன்பாகக் கொண்டிருந்தான்; நாடோறும் மாலைப் பொழுதில் அவளை யழைத்துச் சென்று, மலைகளினிடமும் சோலைகளினிடமும் அருவிகளினிடமும் இனிதாக உலாவி, அளவளாவிப் பேசி மகிழ்ந்திருந்தான். அதனால், அவனுடைய தவவன்மை, நாளுக்கு நாள் குறைந்து போகத் தொடங்கியது. மதி யிழந்த அம்மாதவனுடைய செயல்தான் என்னே! மிக நன்று, நன்று.

தான் நாடிவந்த வேலை இனிதாக நடந் தேறுதலைக் குறித்து மேனகை, உள்ளக் கனிவுடன் காலத்தைக் கழித்து வந்தாள்; கள்ள உள்ளத்துடன் உரையாடி முனிவனை மயக்கித் தனக்கு ஏவலனாகச் செய்தாள். 'சேலை கட்டிய மாதரை நம்பினால் தெருவில் நின்று தியங்கித் திகைப்பரே' என்னும் அறிஞர் சொல்லை அறியாதவனைப்போல் அறிவற்றுக் கௌசிகன், பொய்யை மெய்யாகக் கொண்டு நடித்த மேனகையின் இன்பத்தைப் பெரிதும் மதித்து, அவள் விரும்பிய வண்ணம் நடந்து, தான் அடைந்திருந்த உயர்ந்த நிலைமைக்குக் கேட்டைத் தேடிக் கொண்டான்; பன்னாட்காறும் மேனகையுடன் வாழ்ந்திருந்து காலத்தைக் கழித்தான்.

அங்ஙனம் வாழ்ந்திருந்த காலத்தில் அம்முனிவனுக்கு மேனகையினிடம் பெண்மகவு ஒன்று உண்டாயது. பனிமால் வரையினுடைய அடிவாரத்திற் கருகி லிருந்த பள்ளத்தாக்கினுடைய இடையிற் பாய்ந்திருந்த மாலினி யாற்றங் கரைக்குச் சென்றிருந்த காலத்தில் மேனகை, அப்பெண்

குழந்தையைப் பெற்று மகிழ்ந்தாள்; தான் பயந்த அந்தக் குழந்தையைத் தன் இரு கைகளாலும் பரிவுடன் ஏந்திச் சென்று கௌசிகனிடம் காட்டினாள். திருமகளைப்போல் ஒப்பற்ற அழகுடன் விளங்கிய அந்தக் குழந்தையைக் கண்டு முனிவன், களிப் படைந்தான்; ஆயினும், அப்பொழுதே அவனுடைய குணம் மாறு பட்டது. அக்குழந்தையைப் பார்க்கப் பார்க்க அவனுடைய மனம், நெருப்பை யொத்த நோயால் பற்றி எரிக்கப்பட்டது. குழந்தையினிடம் மிக்க அருவருப் படைந்த அம்முனிவன், தன் கைகளால் கண்களை மூடிக்கொண்டான், நல்லுணர்ச்சி அவனுடைய மனத்திற் கெட்டியது. தான் முன்பு மேற்கொண்டிருந்த உயர்ந்த நிலைமையைப் பற்றி நினைத்து அவன், வருந்தினான்; துக்கித்துச் சோர்ந்தான்.

சிறிது நேரம் கண்களை மூடித் துயருற் றிருந்த பின்னர் கௌசிகன், "ஐயோ, இஃதென்ன மானக் கேடு? குழந்தையும் ஒன்று பிறந்ததே! குடும்பி யானேனே! அருமையான தவ மியற்றி யாவராலும் அடைதற் கரிய தவ வன்மையைப் பெற் றிருந்தும் மதிமோசம் போனேனே! யான் அரிதில் முயன்று பெற்ற தவப்பெருமை முழுவதையும் பாழாக்கினேனே. அந்தமில் இன்பத்தை நாடி அரச செல்வத்தையும் மற்றை உலக இன்பங்களையும் துறந்து நிகரற்ற மன வுறுதியுடன் தவத் தொழிலில் தலை சிறந்திருந்த யான், இம்மேனகையைக் கண்டு மதியற்றுப், பயனற்ற இன்பத்தை நாடி வீணாக நாட்களைக் கழித்தேனே. குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்டதைப் போல் நல்லதை நாடி இக் காட்டை யடைந்து பொல்லாத வாழ்க்கையை யான் விரும்பினேனே. அந்தோ, என் செய்வேன்? ஏமாந்தேனே," என்று சொல்லி மேனகையையும், அவள் பெற்ற குழந்தை

யையும் வெறுத்துக், கானவர் வலையிற் பட்டுத் தப்பி யோடிய மானைப்போல் அவ் விடத்தை விட் டோடினான்.

விசுவாமித்திரனுடைய செயலைப் பார்த்து நகைத்து மேனகை, "இம்முனிவனுக்கு இன்றுதான் நல்லறிவு உதித்தது போலும். பன்னாட்காறும் முயன்று வருந்தித் தேடிய இவனுடைய தவப் பெருமை முற்றிலும் கெட்டது. இனி, இவனால் விண்ணாட்டு அரசனுக்கு யாதோர் இடையூறும் நேரா தன்றோ ? யான் நாடிவந்த வேலை நன்றாய் முடிந்தது. இனிமேல் யான் இங்கிருப்ப தேன் ? இந்திர னுலகம் செல்வேன்," என்று கூறித் தன் குழந்தையைக் கீழே வைத்து, அதை நோக்கி, "அருமைக் குழந்தாய் ! உன்னை இவ்விடத்திலேயே விட்டு யான் மேலுலகஞ் செல்கின்றேன். நீ அரசமாதவனுடைய மக ளானமையின், உனக்கு யாதொரு தீங்கும் நேராது. இவ்விடத்திற் படுத்துக் கிடக்கும் உன்னை விரைவில் நல்லார் எடுத்துச் செல்வர் ; நன்றாய் வளர்ப்பர் ; தக்க வயதை யடைந்ததும் நல்ல குலத்திற் பிறந்து செல்வத்திற் சிறந்த அரச னொருவனுக்கு உன்னை மணஞ் செய்து கொடுப்பர். எல்லாச் செல்வங்களையும் பெற்று நீ எல்லையற்ற இன்பத்துடன் வாழ்ந்திருப்பாய். உன்னைப் புகழ்ந்து இவ்வுலகத்தினர் எல்லாரும் கொண்டாடுவர்," என்று சொல்லி, வானுலகத்தை நோக்கி மேற் கிளம்பிச் சென்றாள். பின்னர் அக்குழந்தையே சகுந்தலை என்னும் பெயரைப் பெற்றுச் சிறந்தது. மேனகை அவ்வுலகத்தை யடைந்ததும் அமரர்கோன் முதலிய கடவுளர் பலர், அன்புடன் முகமன் கூறி அவளை வரவேற்றுக் களித்தனர் ; அவள் செய்த உதவியை மெச்சி மகிழ்ந்தனர் ; அவளுடை திறமையை வியந்து பலவாறு புகழ்ந்து உரையாடினர்.

———

பிரிவு - அ

# பிரம இருடி யாதல்

மாலினி யாற்றங் கரையில் மேனகையினால் கிடத்தப் பட்ட பச்சிளங் குழந்தை, கை கால்களை யசைத்துத் தன்னைப் பயந்த தாய் தந்தையருடைய செயலை யிழித்து ஏளனம் செய்வதே போலச் சிரிப்புடன் வானகத்தை நோக்கி மழலை யாடி இருந்தது. மக்கள் போக்கு வர வற்றதும், கொடிய விலங்குகள் நிறைந்ததுமாய அக் காட்டில், அந்தக் குழந்தை கிடந்திருந்ததைக் கண்டு ஆண்டிருந்த கழுகுகள் பல, இரக்கங் கொண்டு கும்பலாய்க் கூடி, அக்குழந்தையினிடம் நெருங்கி, அதைத் தம்முடைய குழந்தையைப் போல் மதித்துச் சுற்றிலும் உட்கார்ந்து தம்முடைய சிறகுகளை யகல விரித்து, அக் குழந்தயின் மீது வெயில் காற்றுத் தூசு முதலியன படாமலும், கொடிய விலங்குகளுடைய கண்களுக்குத் தெரியாமலு மிருக்க அந்தக் குழந்தையை மூடிக் காத்திருந்தன.

அற்றைப் பொழுது போக மறுநாள் வைகறையில், அவ்விடத்திற் கருகில் தவஞ் செய்து கொண்டிருந்த கண்வர் என்னும் மாமுனிவர் ஒருவர், நீராட மாலினி யாற்றை நோக்கி நடந்தார்; சிறிது தூரம் சென்றதும் தம் வழிக் கருகிற் கழுகுகளால் காக்கப் பட்டு இளங் குழந்தை ஒன்று கிடந்ததைப் பார்த்தார்; கழுகுகளை அப்புறம் போக ஓட்டித் தம்முடைய கைகளால் அக்குழந்தையை அன்புடன் வாரி யெடுத்தார்; செந்தாமரைச் செல்வியைப் போன்ற முகப் பொலிவுடன் விளங்கிய கௌசிகனுடைய மகளை யுற்று நோக்கி உவகை கொண்டார்; உடனே அகக் கண்ணால் அக் குழந்தையினுடைய வரலாற்றை யறிந்து மகிழ்ந்தார்; அதை

அன்புடன் தம்முடைய ஆச்சிரமத்திற் கெடுத் தேகினர்; சகுந்த மென்னும் பறவைகளால் காக்கப்பட்டிருந்தமையின் அக்குழந்தைக்குச் சகுந்தலை என்னும் பெயரை யிட்டுக் களித்தார்.

அந்நாள்முதல் அந்தப் பெண்ணைத் தம்முடைய குழந்தை யாகவே கொண்டு கண்வர், செவ்வனே வளர்த்து வந்தார்; உரிய காலத்திற் கல்வி கற்பித்து நல்லறிவு புகட்டினர்; மகளிர் கற்றற் குரிய கலைக ளெல்லாவற்றையும் குறைவற ஓதினர். மாதவரிடம் வளர்ந்த அப்பெண்மணி, அறிவிலும் அழகிலும் இணையற்றவளாய் விளங்கிச் சில ஆண்டுகள் கழிய மணத்திற் குரிய பருவத்தின ளானள். அக்காலத்தில் ஒரு நாள், திங்கள்மா மரபி லுதித்து அத்தினபுரியி லிருந்து அரசாண்டுவந்த துஷ்யந்தன் என்னும் மன்னன், அக்காட்டிற் குட் புகுந்து வேட்டை யாடிக் கண்வருடைய ஆச்சிரமத்திற் கணித்தானன்; அணங்கென ஆண்டுப் பூஞ்செடிகளுக் கிடையில் நின்றிருந்த சகுந்தலையைக் கண்ணுற்று வியப் படைந்தான்; அருகிற்சென்று அவளுடன் இன்சொல் லாடித் தான் இன்னனென்பதைத் தெரிவித்துத், தன்னை மணந்து இன்புறுமாறு அவளை வற்புறுத்தி வேண்டினன். அவனுடைய விருப்பத்திற்குச் சகுந்தலையும் இசைந்தாள். அப்பொழுதே துஷ்யந்தன், கந்தருவ மன்றலிற் சகுந்தலையை வேட்டான்.

சில மாதங்களுக்குப் பின்னர் அவர்க்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவன், பரதன் என்னும் பெயரைப் பெற்று நன்கு வளர்ந்து, எல்லாக் கலைகளையும் ஐயம் திரிபு அறியாமை என்னும் முக்குற்றங்களு மகலக் கற்று, ஒப்பற்ற தோள் வன்மையையும் வீரத்தையும் அடைந்து முடி சூடி, இந்நாவலந் தீவு முழுவதையும் ஒரு குடைக்குக் கீழாக்கி, மன்னுயிரைத் தன் னுயிரைப் போலக் காத்துச், சிறப்புடன் செங்

கோலோச்சி என்றும் அழியாப் புகழைப் படைத்தான். அவ்வரசன், தன் ஒரு தனி ஆளுகைக்குக் கீழ்ப்படுத்தி அறநெறியினின்று சிறிதும் பிறழாமல் நாம் வாழும் இந்நாடு முழுவதையும் ஆண்டதனுல், இன்னும் இந்நாட்டைப் பாரத நாடு என்னும் பெயரால் நாம் அனைவரும் அழைக்கின்றோம்.

மேனகையை விட்டுப் பிரிந்து சென்ற கௌசிகன், பனிமால்வரைச் சாரலில் ஓர் இடத்தில் நின்று, வசிட்டர் செய்த வலனையே மனத்தில் எண்ணித் தான் முன்பு செய்ததை விடக் கடுமையாய்த் தவ மியற்றத் தொடங்கினுன். ஓரே நிலையாக ஒற்றைக் காலால் நின்று மூக்கைக் கையால் பற்றி அம்முனிவன், இடது பக்கத்து நாடியையும் வலது பக்கத்து நாடியையும் வளி கெட அடக்கினுன்; இதயத் தூடு எழுத்தொன்றெண்ணிப் பல பருவங்கள் வரை நின்றுன்; மூலமா முகடு விண்டு தடுக்கப்படாத இருட்படலை உலகங்கள் தோறும் தாவிப் பரந்து மூடிற்று. அதனுல் எல்லா உலகங்களும் சலித்தன. எயிலை யெரித்தவன் யானையை யுரித்த நாள், உடம்போடு செறியச் செய்து அவ்வுரியைப் போர்த்திட்ட பண்பைப் போலக் கொழும் புகைப்புயல்கள் அம்முனிவனிடமிருந்து விரிந்தெழுந்து எங்கும் பறந்து நிறைந்தன; இவ்வுலகத்துடன் மற்றை உலகங்களையும் நெருங்கி வருத்தின.

முனிவனுடைய தவத்தால் எழுந்த இருளானது அங்ஙனம் யாண்டும் சென்று நிறைந்ததால், கதிரவனுடைய ஒளி மறைந்தது; திக்குப் பாலகர் கண்களை மூடிக் கதறினர்; இப் பூமியைச் சுமக்கும் நாகமும் கூச்ச மடைந்து வெருவிப் பிளிற்றியது; இயங்கியல் நிலையியற் பொருள்களெல்லாமும் திகைத்து வீழ்ந்தன. மின்னல் முழக்கம் முதலியன நிறைந்த ககன மெல்லாமும் புகை யூடுருவிச் சென்றதால் உம்பர் ஏங்கினர். உலகங்களினுடைய நிலைமையைக் கண்டு அரி

அயன் அரன் ஆகிய மூவரும், அரசமாதவனுக் கெதிரில் தோன்றிக் காட்சி தந்து, அவனை நோக்கி, "அன்பனே! உன்னுடைய தவத்தை மெச்சினோம். உன்னைப் போன்ற வேத பாரகர் வேறு எவரும் இலர். தவ முனிவருள் நீ ஒரு வனே முதன்மையானவ னாவாய். இனி உன் தவத் தொழிலை நிறுத்தி உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்பா யாக. யாம் அன்புடன் அளிக்கின்றோம்," என்று திருவாய் மலர்ந்தருளினர். G. Narayanan

விசுவாமித்திரன், தன் எதிரில் தோன்றிய கடவுளரைப் பார்த்து எல்லையற்ற மகிழ்ச்சி யடைந்தான்; மண்ணில் வீழ்ந்து கடவுளருடைய திருவடிகளை வணங்கித் துதித்தான். எழுந்து நின்று தலைமேற் கைகளைக் கூப்பி மன முருகிப் போற்றி வழுத்தினான்; பணிவுடன் கடவுளரை நோக்கி, "அடியேன் தவத்திற் குகந்து காட்சி தந்து ஆட்கொள்ள எழுந்தருளிய தங்களை என்னென்று சொல்லித் துதிப்பேன்? நாயினும் கடைப்பட்ட அடியேனிடம் தாங்கள் காட்டிய அருளினுடைய பெருமையை எவ்வாறு புகழ்ந்து கொண் டாடுவேன்? செய்வ தின்ன தென்பதை யறியே னாய்த் தங்கள் அருட் கடலில் மூழ்கித் திளைத் திருக்கின்றேன்; மன்னித்து என்னை யாட் கொண்டருளல் வேண்டும். பிறப் பிறப் பென்னும் பெருங் கடலைக் கடந்து என்றும் அழியாப் பேரின்பத்தை யளிக்க வல்லத் தங்கள் திருமலரடிகளைக் கண் குளிரக் கண்டு புனிதனான அடியேனுக்கு வேறு யாது வரம் வேண்டும்? என் உள்ளம் தூய தாயது; என்னுடைய தவம் மிக்க பெருமையை யடைந்தது; இப்பிறவியை யெடுத்து அடைய வேண்டிய பயனை யடைந்து யான் இன்றே புனித னானேன். ஆயினும், அடியேன் தங்கள் திருவுள்ளத்திற் கிணங்க வரம் ஒன்றைக் கேட்க விரும்புகின்றேன்; கடவுள்

தன்மை பொருந்தியவனும், உயர்ந்த அந்தணனு மாய வசிட்ட மாமுனிவனுடைய வாயினல் பிரம இருடி என்று என்னைச் சொல்லுமாறு தாங்கள் செய்தருளல் வேண்டும். இஃது ஒன்றே அடியேன் பெற விரும்புவதாகும்,'' என்று சொல்லி இறைஞ்சினன்.

கடுந்தவத்தினனுய கௌசிகன் எண்ணத்தை நிறைவேற்றக் கடவுளர் திருவுளங் கொண்டு, அவனை நோக்கித் "தவத்திற் சிறந்த கோமுனிவனே! உன் இச்சையை முடிக்க யாம் இதோ அருளிச் செய்கின்ருேம்,'' என்று மொழிந்து, வசிட்ட முனிவர் தங்களிடம் வருமாறு மனங் கொண்டனர். அப்பொழுதே வசிட்டர், அவ்விடத்தை யணுகிக் கடவுளரை வலம் வந்து பணிந்து, கை கட்டி வாய் புதைத்து வணக்கத்துடன் நின்று, அவரைப் பார்த்துத் தாழ்ந்த குரலுடன், "அடியேன் யாது பணி செய்தல் வேண்டும்? கட்டளையானல் உடனே செய்யக் காத்திருக்கின் றேன்,'' என்று விண்ணப்பித்தார். அம்முனிவருடைய பெருந்தன்மையைத் திருவுள்ளத்திற் கொண்டு உவகை பூத்து, முகமலர்ச்சியுடன் ஆசிகூறி, அவரை நோக்கிக் கடவுளர், "அந்தணர் பெரும! அரிய தவத்தைச் செய்து எம்முடைய அருளைப் பெற்று இதோ நிற்கும் அரசமாதவனைப் பிரம இருடி என்று நீர் சொல்லத் தடை யாதேனும் உளதோ?'' என்று கேட்க, அதற்கு அம்முனிவர், "அங்ஙனம் சொல்ல அடியேனுக் கென்ன தடையிருக்கின்றது? தங்கள் திருவுள்ளத்திற்கு மாறின்றிக் கௌசிகன் அப்படியே இருக்கக் கடவன்,'' என்று பணிவுடன் விடை இறுத்தார்.

செழுமறை யனைத்தும் உணர்ந்த அம்மாதவன் மொழிந்த கவர்படு பொருள் பொதிந்த நல்லுரையைக்

கேட்டுக் கடவுளர் புன்னகை புரிந்தனர். வசிட்டர் மொழியினுடைய உட்கருத்தை யுணராத கோமுனிவன், உளங் கனிந்து துள்ளிக் குதித்துப் "போதும், போதும்; யான் அதைத்தான் நாடினேன்," என்று சொல்லி மகிழ்ந்தான்; சென்னி தாழ்த்தி இரு செங்கமலக் கைகளைக் குவித்துக் கடவுளரை மும்முறை வலம் வந்து வணங்கி, "நல்வினை என்னை நாடி வந்துற்றது. தங்கள் அருளால் யான் பிரம இருடியா யிருக்க வசிட்ட முனிவன் கூறியதே போதும். இவ்வுலகத்தில் இதைவிட வேறு பெருமை யாது எனக்கு வேண்டும்?" என்று கூறிக் களிப்புடன் நின்றான். அம் முனிவனுக்கும் வசிட்டருக்கும் ஆசி வழங்கிக் கடவுளர் மறைந்தருளினர். வசிட்ட முனிவர், தம்முடைய ஆச்சிரமத்தை நாடி நடந்தார். அரசமாதவன், அம்மலைச் சாரலினிடமே ஓர் ஆச்சிரமத்தை யேற்படுத்தி, மன மகிழ்ச்சியுடன் அதனிடம் தங்கி யிருந்தான்.

---

பிரிவு - கூ

## வசிட்டருடைய மரபை யழிக்க முயலல்

பிரம இருடியான பின்னரும் விசுவாமித்திரன், தான் வசிட்டரிடம் கொண்டிருந்த பகையை விட்டிலன். பனிமலையினிடம் தங்கியிருந்த அந்த முனிவன், கடவுளுக் கொப்பாகிய வசிட்டரைக் கெடுக்கப் பலவாறு ஆராய்தலையே தனக்குத் தொழிலாகக் கொண்டிருந்தான். யாதொரு வழியிலும் அவனுடைய முயற்சி பயன் பட்டிலது. உயர்ந்ததாய இக்ஷ்வாகு மரபில் உதித்தவனான கன்மாடபாதன்

என்னும் மன்னன் ஒருவன் இருந்தான். அவன், தான் பிறந்த குலத்திற் கேற்ப அறிவிலும் ஆண்மையிலும் சிறந்து நாட்டை யாண்டு வந்தான். வசிட்டமா முனிவர், இக்ஷ்வாகு மரபினர்க்குக் குலகுரு வாவர். கௌசிகன், அந்தக் கன்மாடபாதனிடம் சென்று இன்ப முண்டாகப் பேசி, அவ்வரசனுடைய குலகுருவாகிய வசிட்டரைத் தள்ளி விட்டு, அவருக்கு மாருகத் தன்னை ஆசானுய்க் கொள்ளு மாறு தெரிவித்தான்; அரிய வேள்வி ஒன்றை யியற்றி அம்மன்னனைச் சிறந்தவனுகச் செய்யத் தான் விரும்பி யிருப்பதாயும் அறிவித்தான். கோமுனிவனுடைய கொள் கைக்குக் கன்மாடபாதன் உடன் பட்டிலன்; இனிதாகச் சிறிது நேரம் பேசிக்கொண் டிருந்த பின்னர் அம்முனிவனைக் காடேக வழி விட்டு அனுப்பினுன். தன் முயற்சி வீணுன மைக்குச் சற்று மனம் வருந்தி விசுவாமித்திரன், இமயமலைச் சாரலை நாடிப் போனுன்.

சில மாதங்களுக்குப் பின்னர் ஒருநாள் கன்மாட பாதன், வேட்டையாடப் பனிமலைக் கடிவாரத்தி லிருந்த காட்டை யடைந்தான்; அங்குப் பல இடங்களிலும் திரிந்து கணக்கற்ற விலங்குகளைக் கொன்று இளைத்துப், பசியினுலும் நீர் வேட்கையினுலும் வருந்தி, ஒரு சோலையினுள் நுழைந்து ஒற்றையடிப் பாதையான வழியே சென்றுன். அப்பொ ழுது, அவனுக்கு நேராக வசிட்ட முனிவருடைய மூத்த மைந்தனுன சத்தி என்பான் வந்தான். அம்முனி மைந்தனை இன்னு னென்று அறியாமல் அரசன், அவனை நோக்கி, "என்னுடைய வழியை விட்டு அப்புறம் விலகிச் செல்," என்று சொன்னுன்.

அரசனுடைய மொழியைக் கேட்டுச் சத்தி முனிவன் வியப்படைந்து, "இஃது என்ன புதுமையா யிருக்கின்றதே;

அரசன் எதனால் இவ்வாறு துணிந்து பேசினான்?" என்று எண்ணி, அவ் வேந்தனைப் பார்த்து இன்சொற் கூறி, "மன்னர் பெரும! இஃது என்னுடைய வழியே யாகும். யானே இவ்வழியிற் சொல்லத் தக்கவனாவேன். எனக்கு நீர் வழி விட்டு விலக வேண்டியதுதான் அறநெறி யாகும். நற்குலத் தோன்றலே! கிழவன், அச்சங் கொண்டவன், அரசன், பிரமசாரி, பெண், நோயாளி, மணமகன், வண்டிக் காரன் ஆகிய இவர்களுக்கு வழி விட்டு விலக வேண்டு மென்றும், இவர்களுள் சிலருக்கு அரசன் வழி விட வேண்டு மென்றும், சிலர் அரசனுக்கு வழி விட வேண்டு மென்றும், அரசன் அந்தணனுக்கு வழி விட்டு விலக வேண்டு மென்றும் அறநூல்க ளெல்லாமும் கூறுகின்றன. அறநெறி அவ்வாறிருக்க நீர் என்னை விலகிப் போகச் சொன்ன தேன்," என்று கேட்க, மன்னன், அம்முனி மகனை மறுத்துப் பேசத் தொடங்கினான்.

வழி விடுதலைக் குறித்து அவ்விருவரும், ஒருவரை ஒருவர் எதிர்த்துப் பேசி நெடுநேரம் வாதிட்டனரே ஒழிய ஒருவரும் வழியை விட்டு விலகினர் அல்லர். "விலகு, விலகு," என்று மன்னன் மிக்க சினத்துடன் சக்தியைப் பார்த்துச் சொன்னான். அறநெறிக் கிணங்க நடக்குமாறு சக்தி முனிவன், வற்புறுத்திக் கூறினான். சீற்றம் மூண் டெழுந்தமையின் அறிவிழந்த கன்மாடபாதன், தன் கையி லிருந்த கசையால் தவ வன்மையையே சக்தியாகவுடைய சக்தி முனிவனை யடித்து, "அப்புறம் விலகிச் செல்லடா," என்று சிங்கத்தைப் போல் முழக்கினான். அரசனுடைய கொடுஞ் செயலுக்கு மனம் பொறாதவனாய் முனி மைந்தன், சால முனிவு கொண்டு, "அடே அறிவற்ற அரசனே! இராக்கதனைப் போல் அந்தணனாகிய என்னை யடித்ததால் நீ

கொடிய இராக்கதனுகக் கடவாய்; மக்களுடைய இறைச்சி யைத் தின்பதிலேயே விருப்ப முற்று அடவிகடோறும் நீ அலைந்து திரியக் கடவாய்,'' என்று அவ்வரசனை நோக்கிச் சூளுரை யிட்டான்.

அவ்விருவரும் அவ்வாறு வாதிட்டுக் கொண்டிருந்த பொழுது கோமுனிவன், அவர்க் கருகிற் சென்ருன்; அவரு டைய செயலைக் கண்டு களிப்புடன் ஓர் இடத்தில் மறைந் திருந்தான்; சக்தி முனிவன் வழங்கிய கொடு மொழியை யுணர்ந்து ஓர் இராக்கதனுடைய உயிரைக் கன்மாடபாதனைப் பற்றிச் சக்தி முனிவனை யழிக்க ஏவினுன். அந்த இராக்கத னும் விசுவாமித்திரனுடைய கட்டளைக் கிணங்க விரைந்து போய்க் கன்மாடபாதனைப் பற்றினுன். அவ்வரசன், தான் கொண்ட சினத்தினின்று தணிந்து, தன் னெதிரில் நின்று வழிக்காக வாதிட்ட அந்தணன் தன் குல குருவாய வசிட்ட மாதவருடைய மைந்தன் என்பதை யறிந்து மன மிக வருந் தினுன்; அம் முனிவனை வணங்கி வழிபட்டான்: தான் செய்த குற்றத்தைப் பொருட் படுத்தாமல் தன்னை மன்னித் துச் சூளுரைக்கு இலக்காகா வண்ணம் அருள் செய்யுமாறு இறைஞ்சினுன். அம்முனிமகன் யாதொன்றையும் பேசா மல் அவ்விடத்தினின்று அகன்ருன்.

கன்மாடபாதன், தனக்கு நேர்ந்த துன்பத்தை யுன்னி வருந்தித் துக்கித்தான்; தன்மீது ஆவேசித்த இராக்கதனு டைய கொடிய தன்மையைத் தன் அறிவால் அடக்கி அர மனையை நோக்கிப் போனுன். சக்தி முனிவனைக் கொல்லா மல் அவன் சென்றதைப் பற்றிக் கௌசிகன், அம்மன்ன னிடம் மிக்க வெறுப்பைக் கொண்டான்; ஆயினும், அவ் வேந்தனைக் கொண்டே வசிட்ட முனிவருடைய மைந்தரான சக்தி முதலியோரை வாட்ட எண்ணங் கொண்டான்; அவ்

வெண்ணத்தை நிறைவேற்றற் குரிய வேளையை மிக்க ஆவ லுடன் எதிர்பார்த் திருந்தான்.

முன்னர், வேட்டை யாடக் கானகத்தை நாடிக் கன் மாடபாதன் சென்ற போது வழியிடையில் ஓர் அந்தணன், அவ்வரசனை யணுகித் தான் தவ மியற்றி யிளைத்துப் பசி நோயினால் வருந்துவதாகத் தெரிவித்து, இறைச்சியுடன் கலந்த உணவைத் தனக்கு அளிக்குமாறு அவ்வேந்தனிடம் வேண்டினான். அப்போது, அவனை நோக்கி மன்னன், "அந்தணனே! நீ இங்கேயே சற்று நேரம் காத்திருப்பின் யான் அரண்மனைக்குத் திரும்பிச் சென்றதும் நீ விரும்பிய உண்டியை உனக்குத் தருவேன்," என்று கூறிக் காட்டை யடைந்தான். அரசனுடைய பேச்சில் நம்பிக்கை வைத்து அந்தணனும் அவ்விடத்திலேயே காத்திருந்தான்.

காட்டினின்று திரும்பி அரண்மனையைச் சேர்ந்த கன் மாடபாதன், தான் முன்பு அந்தணனுக்கு வாக்களித்த வண் ணம் உணவை யனுப்ப மறந்தான்; அன்று இரவு பட்டதும் உண்டு உறங்கினான்; நள்ளிரவில் விழித் தெழுந்து அந்தண னிடம் உரைத்ததை நினைந்தான்; உடனே தன்னுடைய சமையற்காரனை யழைத்துக் "காட்டிற்குச் சென்ற காலத் தில் வழியில் அந்தணன் ஒருவன் என்னிடம் உணவை யாசித்தான். விரும்பிய வண்ணம் சோற்றை யளிப்பதாய் அவனிடம் சொல்லி வந்தேன்; மறந்து தூங்கி விட்டேன். அந்தோ! அவ்வேழை மறையவன் உணவை யெதிர்பார்த்து அவ்விடத்திலேயே காத்திருப்பான். விரைவில் இறைச்சி யுடன் சோற்றை யாக்கி அவ்வந்தணனுக்குக் கொண்டுபோய் நீ இடுவாயாக," என்று அவனை நோக்கிப் பகர்ந்தான்.

சமையற்காரன், அரசனுடைய ஆணையை யேற்று உண்ணற் குரிய இறைச்சியை அந்நள்ளிரவிற் பல இடங்களி

லும் திரிந்து தேடினன். அஃது யாண்டும் அவனுக்குக் கிடைத் திலது. அதனல் அவன், மன்னனிடம் சென்று இறைச்சி கிடைக்க வில்லை என்பதைத் தெரிவித்தான். மக்களுடைய இறைச்சியையேனும் சமைத்துக் கொண்டு போய் அந்தணனுக்கு இட்டு வருமாறு அரசன் கட்டளை யிட்டான்.

மன்னனுடைய கட்டளைக் கிணங்கச் சமையற்காரன், விரைவிற் சில அறிஞரிடம் சென்று, கொல்லத் தக்கவரை அவரிடம் கேட்டறிந்து, ஓர் ஆடவனைத் தேர்ந்து பிடித்துக் கொன்று, அவனுடைய இறைச்சியைத் தக்கவாறு சமைத்துச் சோற்றுடன் கலந்தான்; அவ்வுணவைத் தூக்கி விரைந்து சென்றுன்; சோற்றை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருந்த அந்தணனை யண்மி, அவனுக்கு அவ்வுணவைத் தந்தான். பேரவாவுடன் அதைப் பெற்று அந்தணன், அதனின்று ஒரு பிடி சோற்றை யள்ளி வாயி லிட்டான்; அஃது உண்ணத் தகாத மக்கள் இறைச்சியுடன் கலந்திருந்ததை யுணர்ந்து, நனிச் சினந்து, வாயி லிருந்த கவளத்தைக் கீழே உமிழ்ந்தான்; நெருப்புப் பொறி பறக்கக் கண்களைச் சுழற்றிச் சமையற்காரனை நோக்கினன். அந்தணனுடைய வெகுளியை யறிந்து அவன், அஞ்சி விதிர் விதிர்த்து, அரண்மனையை நோக்கி யோடிப் போனன்.

சாலச் சினந்த அந்தணன், "விரும்பிய வண்ணம் உணவளிப்பதாய்க் கன்மாடபாதன் மொழிந்து, என்னை நெடு நேரம் காத்திருக்கச் செய்து, உண்ணத் தகாத உணவை எனக்குக் கொடுத் தனுப்பினனே! இஃது என்ன கொடுமை? முன்பு சக்தி முனிவன் மொழிந்த வண்ணம் அவ்வரசன் விரைவில் இராக்கதனுகி, மக்கள் இறைச்சியை விரும்பித் தின்று அலையக் கடவன்," என்று வெவ்வுரை வழங்கி, அவ்விடத்தை விட்டேகினன்.

சூளுரைமேற் சூளுரை யுண்டாகவே கன்மாடபாதன், அன்றே கொடிய ஓர் இராக்கதனானான்; அரண்மனையை விட்டுப் புறப்பட்டு மக்கள் பலரை வெருட்டித் துரத்திக் கொண்டே சக்தி முனிவ னிருந்த காட்டிற் புகுந்தான். அவன், வரவை நோக்கி ஆவலுட னிருந்த கௌசிக முனிவன், அம்மன்னனைப் பார்த்துக் களித்தான்; அவனை யணுகி இன்சொற் கூறினான்; தன்னுடைய தவ வன்மையால் அவனை மயக்கித் தான் சொல்லும் வண்ணம் நடக்குமாறு செய்தான்; மறையோதி மாசற்ற மனத்தைப் படைத்த வனும், வசிட்டருடைய மரபை விளக்க அவருக்கு மூத்த மைந்தனாய்த் தோன்றியவனும், உயர்ந்த அந்தணனுமாகிய சக்தியைக் கொல்ல அவ்விராக்கதனை யேவினான். அவனும் கடிதேகிச் சக்தி முனிவனைப் பற்றிக் கொன்று தின்று கௌசிகனிடம் திரும்பிச் சென்றான். அந்த இழிந்த தொழிலைக் குறித்துக் கோமுனிவன், உள்ளடங்கா உவகை கொண்டான்; ஒருவராலும் செய்ய முடியாத அரிய வேலை யைச் செய்து முடித்ததாய் மதித்து மகிழ்ந்தான்.

அன்று முதல் சின்னாட்களுக்குள் அக்கௌசிகன், மறத்தைச் சிறிதும் கருதானாய் அப்போதைக் கப்போது அவ்விராக்கதனைத் தூண்டிச், சக்தி முனிவனுக் கிளையவர் எல்லாரையும் கொன்றழித்துத் தன் மனக் கொதிப்பை யடக்கினான்; அந்த இராக்கதனைக் கொண்டு வசிட்டரையும் கொல்ல முயற்சித்தான். அம் முயற்சி வீணாயிற்று. அரசனா யிருந்து அந்தணனான பின்னரும் அக் கௌசிகன் கொலைத் தொழிலுக்கு அஞ்சாதவனா யிருந்த கொடுந் தன் மையை என் னென்று கூறலாம்? அவன் கூற்று மிக வியக் கற் பாலதே யாகும். 'அருஞ் சுணங்கன் வாலை நிமிர்க்க வச மாமோ என்றமைக் கேற்ப ஒவ்வொரு பொருளுக்கும்

இயற்கையாக அமைந்த குணத்தை மாற்ற முடியாது போலும்.

தம்முடைய மைந்தர் எல்லாரும் விசுவாமித்திரனால் அழிந்தனர் என்பதைக் கேட்டவுடனே வசிட்ட மாமுனிவர், ஆற்றொணுத் துயரத்தை யடைந்தார்; மனம் நொந்து புலம்பினார்; உயிரும் உடலும் நையக் கீழே விழுந்தும், தலைமேற் கைகளால் மோதி யடித்தும் அழுது வருந்தினார். 'கடந்த ஞானிகளும் கடப்பரோ மக்கள்மேற் காதல்' என் றல்லவா அறிஞர் கூறியுள்ளார்? வசிட்ட முனிவர் எங்ஙனம் துக்கிக்காம லிருக்கக் கூடியவ ராவர்? தம்முடைய மைந்தரிடம் கொண்டிருந்த ஆசையினால் அவர், தம் உயிரையும் விடக் கருதினார். ஆயினும் அவர், கௌசிகனைப் போலக் கொடிய செயலுக்கு உட்பட்டிலர். அருமருந் தன்ன தம்முடைய மைந்தரைக் கொன்ற கோமுனிவனை ஒரு நொடிப் பொழுதில் அழிக்க அவரால் கூடும். தம் உள்ளத்திற் கௌசிகன் அழியக் கடவன் என்று அவர் எளிதாக நினைத் திருப்பினும் போதும். அப்பொழுதே கௌசிகன் எரிந்து சாம்பராய் வீழ்ந்து அழிந்திருப்பான். வசிட்டருடைய தூய மன வன்மையை மும்மூர்த்திகளாலும் தடுக்க முடியா தெனில், கோமுனிவன் அதற் கெதிரில் என் செய்யக் கூடும்? அந்தோ, எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகிய அம்மாதவத்தினர், கௌசிகனை யழிக்க எட்டுணையும் தம் மனத்திற் கருதினார் அல்லர். அவ்விழிந்த கருத்து அவருக்குக் கனவிலும் தோன்றுததே யாகும். அஃது ஒன்றே அவ்வந்தணருடைய பெருந்தகையை நன்கு புலப்படுத்துகின்ற தன்றே? அவ்வசிட்டருடைய தூய தன்மையைக் கருதியோ கடவுளுடைய நிலைமையைப் புகழ்ந்து துதிக்கத் தொடங்கிய உண்மைத் தொண்டர், 'அந்தணர் மாட்டு

அந்தி வைத்தானை' 'அந்தணர்தம் சிந்தையானை' 'அந்தணர் வணங்கும் தேவை,' என்று கடவுளுடைய பெருமையை அந்தணர் மாட்டேற்றிப் பாடிப் போந்தார்?

மைந்தர் இறந்தமைக்கு மன முளைந்து துன்புற்ற வசிட்டர், தம்முடைய உயிரை மாய்க்கத் துணிவு கொண்டார்; புதல்வரில்லாத தம் ஆச்சிரமத்தைப் பார்த்து மிகத் துக்கித்து, அங்கு நிற்ற லின்றி வெளிக் கிளம்பினர்; இருதடங் கண்களி னின்றும் ஆற்றைப் போல் வெம்புனல் சோரச் சடைமுடிசோர அழுது கொண்டே உயர்ந்திருந்த தொரு மலையின் மீது ஏறிக் கீழே குதித்தார். மண்மகள், அந்த அறிஞருடைய உடம்புக்கு யாதொரு நோயும் உண்டாகாமல் பஞ்சுப் பொதியின் மீது வீழ்ந்தவரைப் போலிருக்க அவரைத் தாங்கி விட்டாள். உடனே அவர், அவ்விடத்தி னின்று எழுந்து சென்று, கொழுந்து விட்டெரிகின்ற காட்டுத் தீயிற் புகுந்தார். அத்தீயும் அவருக்கு மிகக் குளிர்ந்திருந்தது. அப்பால் அவர், பெரும் பாறை ஒன்றைக் கழுத்திற் கட்டிக் கடலில் உருண்டு விழுந்தார். தன்னுடைய அலைகளால் அக்கடல், அந்த ஞானியை மெல்ல ஏந்திச் சென்று கரையில் ஒதுக்கி வைத்தது.

தம் மைந்தர்மாட் டுண்டான துக்கத்துடன் தமக்கு இறுதி நேராமையைக் குறித்து மூண்டெழுந்த துன்பமும், அம்மாதவருடைய மனத்தைக் கலங்கச் செய்தது. அவர், தம்முடைய ஆச்சிரமத்தை யணுக விருப்ப மின்றிக் கயிறுகளால் தம் கை கால்களை இறுகக் கட்டிக்கொண்டு ஓர் ஆற்றில் விழுந்தார். அந்நதி, அவருடைய கட்டுக்களை யறுத்துச் சிறிதும் நோயுண்டாகாமல் அவரைக் கரையில் ஒதுக்கிச் சென்றது. தம்முடைய கட்டை விடுவித்ததால் அந்த ஆற்றுக்கு விபாசை என்னும் பெயரை யிட்டு வசிட்டர், அவ்

விடத்தினின்று எழுந்து சென்று, இமய மலையி னின்று தோன்றி மிக ஆழ்ந்து செல்வதாய ஓர் ஆற்றில் குதித்தார். கொடிய முதலைகளை நிரம்பப் பெற்ற அந்த ஆறு, உடனே நூறு பிரிவுகளாகப் பிரிந்து முனிவருக்கு யாதொரு துன்பமும் உண்டாக்காமல் ஓடிற்று. அதனால் அந்த ஆற்றுக்குச் சதத்ரு என்னும் ஒரு பெயரும் உண்டாயிற்று.

எங்கும் தமக்கு இறப்பு நேராமையைக் குறித்து வசிட்ட முனிவர் வருந்தித் "தாமாக இறத்தல் எவர்க்கும் கூடாத காரிய மாகும்," என்று சொல்லித் தம்முடைய ஆச்சிரமம் இருந்த திக்கை நோக்கித் தள்ளாடி மெல்ல நடந்தார். அவருடைய செயல்களை யெல்லாம் மறைந்திருந்து உற்றுக் கவனித்து வந்தான் அரசமாதவன். எதனாலும் வசிட்டருடைய உயிர் நீங்காம லிருந்தமைக்கு அவன், பெரு வியப் படைந்தான்; "ஐயோ! அந்த வசிட்டன் எப்பொழுது, எப்படித்தான் இறக்கப் போகின்றானோ? யான் அறிகின்றிலேனே. உலகங்களை யாக்கிய ஐம்பெரும் பூதங்களும் அவனைக் கொல்ல மறுக்கின்றனவே. அவனைக் கடவுளாக அல்லவா அவை மதிக்கின்றன? அவன் எந்நாள் இறக்கின்றானோ அந்நாளே யான் களிக்கும் நன்னா ளாகும்," என்று சொல்லி வருந்தினான்.

சக்தி முனிவன் இறந்தபோது, அவனுடைய மனைவியாகிய அதிருச்யந்தி என்பாள் கருப்பவதியா யிருந்தாள். தன்னுடைய நாயகன் இறந்தமைக்கு அவள், எல்லையற்ற துக்க மடைந்து கதறி யழுது, மூர்ச்சித்து ஓர் இடத்தில் விழுந்து கிடந்தாள். அவளைப் பற்றி விசுவாமித்திரனுக்குச் சிறிதேனும் கவன மில்லாமற் போயிற்று. அதனால் அம் முனிவன், இராக்கதனை யேவி அம்மாதைக் கொல்ல முயலாம லொழிந்தான்.

ஆச்சிரமத்தை நோக்கிக் காட்டி னிடையே வசிட்டமா முனிவர் மெல்லப் போனபொழுது, சக்தியினுடைய இல் லாள், மூர்ச்சையினின்று தெளிந்து எழுந்தாள் ; தன்னு டைய மாமனுர் துக்கக் கடலுக்குள் ளாழ்ந்து மெல்ல நடந்து தனக் கருகிற் செல்லக் கண்டாள்; அவரைப் பின் தொடர்ந்து தானும் நடந்தாள். சிறிது தூரம் சென்றதும் வசிட்டர், யாரோ தம்மைத் தொடர்ந்து வருகின்ருர் என்பதை யுணர் ந்து, ''என் பின்னே வருகின்றவர் யாவர்,'' என்று கேட் டார். அதற்கு அதிருச்யந்தி, "ஆண்டவரே ! அடியாள் ஒருத்திதான் தம்மைப் பின்பற்றி வருகின்றேன். வேறு எவரும் இலர்,'' என்று தாழ்ந்த குரலுடன் மறுமொழி பகர்ந்தாள். உடனே வசிட்டர் திடுக்கிட்டு, அவள் பக்க மாகத் திரும்பி, அவளைப் பார்த்து ஓவென வாய்விட்டு அரற் றினுர் ; ஊற்றுக் கால்வாயைப் போலக் கண்களி லிருந்து நீர் பெருகி யோடப் புலம்பினுர். அதிருச்யந்தியும் அங்ஙனமே யாயினுள்.

சற்றுநேரம் அவ்வாறு துக்கித்து வருந்திய பின்னர் மருமகளை நோக்கி முனிவர் பெருமானுர், "என் அருமை மகளே ! நமக்கு இத்தகைய இடுக்கண் நேர்ந்ததே ! என்ன செய்யலாம்? விதி வலிது. எல்லாம் கடவுள் செயலே யாகும். 'உள்ளியல் தெள்ளிய ராயினும் ஊழ்வினை பைய நுழைந்தி டும்' என்பதற் கிணங்க முற்பிறப்பில் நாம் செய்த வினையினு டைய பயன் இப்பொழுது நம்மைத் தொடர்ந்தது போலும். அவ்வினைப் பயனை நாம் நுகர்ந்து அறிவுடன் அடங்கி யிருத் தலே சாலச் சிறந்த தாகும். நீ அழாமல் வா. என்னுடைய ஆச்சிரமத்தை யடைந்து வருத்த மின்றி வாழ்ந்திரு. இன் னும் சின்னுளில் உன் வயிற்றி லிருந்து அழகிய ஓர் ஆண் குழந்தை பிறப்பான். அம்மைந்தன் ஒப்பற்ற அறிவு படை

த்து உயர்ந்த அந்தணனா யிருப்பான். அதனால் என்னுடைய மரபு தழைத் தோங்கி இணையிலாப் பெருமையைப் பெறும்; நீயும் புனிதவதி யாவாய்,'' என்று மொழிந்து, அம்மடக் கொடியை யழைத் தேகினார்.

துக்கத்தினின்று தேற்றி மருமகளை யழைத்து வசிட்டர் சென்றதைக் கௌசிகன் கண்டான். "அடடா, என்ன வேலையைச் செய்தேன்? சக்தியினுடைய மனைவியைக் கொல்ல மறந்தேனே. என்னுடைய பேதமையை என்னென்று சொல்லுவேன்,'' என்று கூறி அவன், கையை யுதரிக் கடித்தான்; தன் வயத்தனான இராக்கதனை யழைத்தான்; சக்தி முனிவனுடைய மனைவியைப் பிடித்துக் கொன்று வரச் சொல்லி அவனைத் தூரத்தினான். இராக்கதனும் சினத்துடன் சீறி யெழுந்து, ஆரவாரித்து ஒரு கையில் நீண்ட தொரு வாளையும், மற்றொரு கையிற் குறுந்தடி ஒன்றையும் தாங்கிச் சுழற்றி யோடிச் சென்றான்; அதிருச்யந்தியை நெருங்கினான். அவனுடைய வரவை யறிந்து அதிருச்யந்தி, தன் மாமனாரை நோக்கி, "ஐயன்மீர்! இதோ பாரும், யாரோ ஓர் இராக்கதன் நம்மைக் கொல்லக் கருதி யோடி வருகின்றான்,'' என்றாள். உடனே வசிட்ட முனிவர் இராக்கதனைப் பார்த்து 'அவ்விடத்திலேயே அமைதியுடன் இரு' என்று கையைத் தூக்கிக் குறிப்பால் உணர்த்தினார். இராக்கதன் வெருண்டு மரத்தைப் போல் அசைவற்று அவ்விடத்திலேயே நின்று விட்டான். அவன் கன்மாடபாத மன்ன னென்பதையும், சக்தியினுடைய வெவ்வுரையால் இராக்கத னானான் என்பதையும், விசுவாமித்திரனுடைய தூண்டுதலால் சக்தி முதலியோரை அவன் கொன்றான் என்பதையும் வசிட்டர், அகக் கண்ணால் அறிந்து, அவனிடம்

இரக்கங் கொண்டு, அவனுக் கேற்பட் டிருந்த சூளுரையைத் தம்முடைய தவ வன்மையால் போக்கி யொழித்தார்.

அவன், தன்னுடைய பழைய நிலைமையை யடைந்து, தன் முன்னர் நின்றிருந்த குல குருவைப் பார்த்துப் பெரு வியப் பெய்தி, அவருடைய திருவடிகளைக் கீழே விழுந்து வணங்கினான்; எழுந்து நின்று அவரைத் துதித்தான். தனக்கு நேர்ந்திருந்த துன்பம் அவரால் ஒழிந்த தென்பதை யறிந்து உவகை கொண்டு அவரைப் போற்றினான். "மாதவத்தீர்! தங்களால் அடியேன் இன்று உய்ந்தேன். அடியேன் யாதேனும் குற்றம் செய்திருப்பின், பொருட் படுத்தாமல் மன்னித் தருள்க. குல குருவாகிய தாங்கள் இன்று அடியேனைத் துன்பத்தினின்று காத்ததைப்போல் அடியேனுடைய குலத்தையும் ஓங்கச் செய்தருளத் திருவுளம் பற்றுவீராக. எல்லாச் செல்வங்களையும் குறைவறப் பெற்றி ருந்தும் யான் மக்கட் பேறில்லாதவன் என்பதைத் தாங்கள் அறிவீர். என் குலம் விளங்க எனக்கொரு மைந்தன் உண் டாகுமாறு அருள் புரிய வேண்டுகின்றேன். அப்பேறு எனக்கு இலதாயின், யான் மறுபடியும் நகரத்தை யடைந்து அரசாண்டுதான் என்ன பயனைப் பெறப் போகின்றேன்? அதைவிடக் காட்டி லிருந்து காலத்தைக் கழித்தலே நன்றா யிருக்கும்," என்று சொன்னான்.

கன்மாடபாதனுடைய குறையைத் துடைக்க மனங் கொண்ட வசிட்ட மாமுனிவர், அன்புடன் அவனை நோக்கி, "மன்ன! நீ இராக்கதனாகி என்னுடைய மக்களைக் கொன்ற மையைக் கருதி யான், உன்னிடம் குற்றம் பாராட்டுகின்றி லேன். யாவும் வினைப் பயனுக்குத் தக நடந்தேறின. என் னுடைய மைந்தனான சக்தி முனிவன் தூய தன்மையையும், தவ வன்மையையும் உடையவனாவான். அவனால் உனக் குண்

டான வெவ்வுரையை முற்றிலும் போக்குதல் எவராலும் முடியாத வேலை யாகும். ஆதலால், பன்னிரண்டு ஆண்டுகளுக்கொரு முறை இராக்கதத் தன்மைக் குட்பட்டு நீ சின்னுள் வரை யலைந்து திரிந்து பின்னர் பழைய நிலைமையை யடைவாய். இன்னும் சில நாட்களுக்குள் உன்னுடைய அரண்மனையை யடைந்து, நீ விரும்பிய வண்ணம் உனக்கு மக்கட்பேறு உண்டாக யான் அருளிச் செய்கின்றேன். உன்னுடைய நகரத்தை யடைந்து நீ செவ்வனே அரசாண்டிரு. அந்தணரை யோம்பி வாழ். உன்னுடை வாழ்க்கை நற்பயனை யடையும்," என்று மொழிந்தார்.

அன்புடன் அவ்வரசன், தன் ஆசிரியரை வணங்கி விடை பெற்று அவ்விடத்தினின்று நீங்கித் தன்னுடைய நகரத்தை நோக்கிப் போனுன். தம்முடைய மருமகளை யழைத்துக் கொண்டு வசிட்ட மாதவர், அவ்விடத்தை விட்டு ஆச்சிரமத்தை நாடிச் சென்ருர். கன்மாடபாதன் வசிட்டரால் பழைய நிலைமையை யடைந்து நகரத்தை நாடிச் சென்றதை யறிந்து அரசமாதவன், அந்த வசிட்டரிடம் முன்னிருந்ததை விட மிக்க அழுக்காறு கொண்டான்; அம்மாதவருடைய மரபை முற்றிலும் யழிக்க மேற் கொண்ட முயற்சி வீணுனமைக்கு வருந்தினுன்; அவரை யழிக்கத் தன்னுல் முடியாதென்பதை நன்கு அறிந்தான்; ஆயினும், அவருடைய உயர்வுக்கு இழிவைத் தேட எண்ணங் கொண்டான்; இன்னல் பல விளைவித்து அவரைத் துன்புறுத்தக் கருதினுன்; தன் கருத்தை நிறைவேற்ற ஏற்ற காலத்தை யெதிர் பார்த்து அடங்கி யிருந்தான்.

---

## பிரிவு - ம

# சுதன்மையில் விளைந்த விவாதம்

கதிரவன் குலத் துதித்து அயோத்தியினின்று செங்கோல் செலுத்திய திரிசங்கு என்னும் மன்னனைப் பற்றி முன்பே நாம் ஒருவாறு அறிந்துளோம். அவனுடைய தவப் பேற்றால் தோன்றிய மைந்தனான அரிச்சந்திரனைக் குறித்துச் சிறிதளவே படித்தோம். மற்றெல்லாரையும் விட அரிச்சந்திரனிடமே அரசமாதவன், தன் அறிவின் திறமையையும், தவ வன்மையையும் முற்றிலும் பயன் படுத்திப் பல முயற்சிகளை மேற் கொண்டு உழைத் திருப்பதனால், அந்த அரிச்சந்திரனைப் பற்றி ஈண்டுச் சுருக்கமாக வாயினும் நாம் அறிதலே ஏற்ற தாகும்.

சரயு நதி ஊடுருவிப் பாயப் பெற்றதும், நீர் நில வளங்களாற் சிறந்தது மாகிய கோசல நாட்டிற்குத் திலக மென விளங்கி யிருந்தது அயோத்தி மா நகர மாகும். அதைத் தலை நகரமாகக் கொண்டு இப்பரத கண்டத்தை யாண்ட அரசர் பல ராவர். அவருள் திரிசங்கு மன்னனுடைய அருந்தவப் பயனால் தோன்றிய அரிச்சந்திரனும் ஒருவ னாவான். அவன் இளமையிலேயே வசிட்ட முனிவரிடம் பல கலைகளையும் நன்றாய்ப் பயின்றான். தூய வீரனும், மாபெரும் வள்ள லும், உண்மைக் கிறைவனுமாய அவன், தன் தந்தையினுடைய கருத்திற் கிணங்க முடி சூடி, அற நெறிக்கு மாறுபாடின்றி நாட்டை யோம்பி வந்தான்.

அந்நாளிற் கனோசி நாட்டிற் கண்டகீ நதிக் கரையிற் கன்ன மா புரியில் மதிதயன் என்னும் அரசன், நீதி தவறாமல் அரசு புரிந்திருந்தான். முதிர்ந்த வயதாகியும் மகப் பேறில்லாமையால் அவன், சிவபெருமானைக் குறித்து அரிய தவத்

தை யியற்றினன்; அக்கடவுளுடைய அருளால் ஒரு பெண் மகவைப் பெற்றான். சந்திரமதி என்னும் பெயரை யிட்டு அப்பெண்ணைத் தன் உயிரினும் அரிதாய் வளர்த்து வந்தான். அப்பெண் பிறந்த பொழுதே கழுத்தில் மங்கல நாணோடு இருந்தாள். அதைக் கண்டு அவ்வரசன் வருந்தினன்; அதைக் குறித்துத் தன் அமைச்சரிடம் ஆராய்ந்து ஏங்கினன். அப்பொழுது சிவபெருமானர், மலை மகளோடு விட்புலத்தில் தோன்றி அந்த மன்னற்குக் காட்சி யளித்து, "விற்கை வேந்தே! நீ கொண்ட கவலையை யொழி. உன்னுடைய மகளின் கழுத்திலுள்ள மங்கல நாண், அவளுடைய கொழு நனுக் கன்றி மற்றெவர்க்கும் புல னுகாது. ஆதலின், எவன் அதைக் கண் டறிகின்றானே அவனே உன் மகளுக்குக் கணவ னுவான்," என்று அம்மன்னனை நோக்கி மொழிந்து, மறைந் தருளினர். மதிதயன் மனக் கவலையை யொழித்து, மகளைச் சிறப்புடன் வளர்த்து வந்தான். அறிவும் அழகும் வளரச் சந்திரமதியும் வளர்ந்து மணத்திற் குரிய பருவத்தின ளானுள்.

புண்ணியத் துறைக ளாடிப் புனிதமாய இடங்களைக் காண விழைந்த முனிவர் சிலர், ஒரு நாள் அயோத்தியை யடைந்தனர்; அரிச்சந்திரனைக் கண்டு உவந்தனர்; ஆசி கூறி அவனை வாழ்த்தினர். அவன் அந்த முனிவரோடு அமர்ந்து சிறிது நேரம் அளவளாவிப் பேசிய பின்னர், அவர் சென்ற இடங்களிற் கண்ட புதுமைகளைச் சொல்லு மாறு கேட்டான். அதற்கு அம்முனிவர், சந்திரமதியின் அழகையும் நற்குணங்களையும் சிறப்பித்துக் கூறினர். அரிச்சந்திரன், அச்செய்தியை வசிட்டரிடம் சொன்னன்; சந்திரமதியை மணக்க அவருடைய கட்டளையைப் பெற் ருன்; வசிட்டர் அமைச்சர் முதலியோருடன் சேனைகள்

புடை சூழக் கன்ன மா புரியை நோக்கிப் புறப்பட்டான்; சில நாளில் அந்நகரத்தை யணுகி ஒரு சோலையில் தங்கினன்.

அச்செய்தியை மதிதயன் ஒற்றரால் அறிந்து, இறை வாக்குச்செய்யத் தக்க எல்லா மரியாதைகளையும் முறைப்படி அரிச்சந்திரனுக்குச் செய்தான். வசிட்டர், மதிதயனிடம் தாம் நாடி வந்த நற்செய்தியைத் தெரிவித்தார். மதிதயன், "மன்னரே! என் மகளைப் பார்த்த பின்பே திருமணச் செய்தியைக் குறித்துப் பேசலாம்," என்று அயோத்தி மன்னனை நோக்கிப் பகர்ந்தான். உடனே அரிச்சந்திரன், முனிவரோடு சென்று மண்டபம் ஒன்றை யடைந்தான். மதிதயனுடைய மகளும் அங்கு வரவழைக்கப் பட்டாள். அரிச்சந்திரன், சந்திரமதியின் இணையற்ற அழகைக் கண்டு மகிழ்ச்சியும், அவளுடைய கழுத்தி லிருந்த மாங்கலியத்தைக் கண்டு சினமும் கொண்டான்.

மதிதயனை நோக்கி அரிச்சந்திரன், "ஈ தென்ன புதுமை? முன்பே ஒருவனுக்கு வாழ்க்கைப் பட்ட உம்முடைய மகள், பின்பு வேறொருவனுக்கு மணஞ் செய்விக்கத் தக்கவளாவளோ?" என்று கேட்டான்; தன்னை மதிதயன் அவமதித்ததாக எண்ணி வெகுண்டான்; உடைவாளை யுருவிப் போர்க் கெழுந்தான். அந்நேரம், "அரிச்சந்திர! இவள் கன்னி; பிறர் பன்னி யல்லள்; எம் அருளால் இவள் மாங்கலியத்தோடு பிறந்தவ ளாவாள்," என்று ஒரு குரல் வானில் உண்டாயிற்று. அதைக் கேட்டு அரிச்சந்திரனோடு ஆண்டிருந்தவர் எல்லாரும் கலக்கந் தெளிந்தனர். வசிட்டர் முதலிய அறிஞர் பலர், மதிதயனோடு அமர்ந்து ஆராய்ந்து, நல்லோரையிற் சந்திரமதியை அரிச்சந்திரனுக்கு மன்றலில் உதவினர். திருமணம் நிகழ்ந்த சில நாட்களுக்குப் பின்னர் சந்திரமதியோடு அரிச்சந்திரன் மகிழ்ச்சியுடன் அயோத்திக்குத் திரும்பினன்.

உயிரும் உடலும் போல் அவ்விருவரும் அயோத்தில், ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிதலின்றி இனிதாக வாழ்ந்திருந்த காலத்திற் சந்திரமதி கருவுற்றனள். பத்துத் திங்களும் நிறைய நன்னுள் ஒன்றில் இளங்கதிரைப் போன்ற ஓர் ஆண்மகவை அம்மங்கை, பெற்றுக் களித்தாள். அரசன், குல மைந்தனைக் கண்டு பேருவகை கொண்டான். வசிட்ட மாமுனிவர், அப்புதல்வனுக்கு லோகிதாசன் என்னும் பெயரை யிட்டு மகிழ்ந்தார். அரிச்சந்திரன், வரம்பற்ற இன்பத்துடன் தன் மனைவி மைந்தரோடு இருந்து, நாட்டை அறவழியிற் காத்து, மன மிக மகிழ்ந்திருந்த காலத்தில் விண்ணுட்டில் நிகழ்ந்த செய்தி ஒன்றுளது.

விரும்பியவற்றை விரும்பியவாறு அப்பொழுதே அளிக்கக் கூடியதும், மெல்லிய தளிரையும் நறுமணம் வீசி நறை கசியும் அழகிய மலரையும் மிகுதியாகச் சொரியத் தக்கதும், தேனினும் இனிய கனிகளைத் தருவதும், நிலவினும் சிறந்த தண்ணிழலைக் கொடுப்பதும், பொன்னொளி விரித்து எல்லாப் பொருள்களையும் மின்னொளி பெற்றுத் திகழச் செய்வதுமாகிய பொற்புடைக் கற்பகக் காவைத் தன்னிடம் கொண்டதும், கடவுள் தன்மை பொருந்திய காமதேனு என்னும் பசுவைத் தனக் குரியதாகப் பெற்றுள்ளதும், சிந்தாமணியைச் சிந்தாமணி யெனத் தன்பால் வைத்திருப்பதும், திசை யானைகளுக்குத் தலைமை பூண்ட ஐராவதம் என்னும் வெண் களிற்றைத் தனக்குச் சொந்தமாகப் படைத்திருப்பதும், உச்சயிச்சிரவம் என்னும் வெள்ளைக் குதிரையைத் தனதாக அடைந்திருப்பதுமாய புகழ் மிகப் படைத்த பொன்னுடு, எவ்வுலகத்தினும் உயர்ந்த தாகும். அந்நாட்டினுடைய பெருமை, எவராலும் சொல்லுதற் கரிய தாகும். எல்லா இன்பங்களையும் ஒருங்கே அமையப் பெற்றிருப்பதனுல் அந்நாட்டைப், பொன்

ஞடு என்றும், இன்ப உலகமென்றும், புனிதமாய இடமென்றும், துறக்கமென்றும் மக்கள் அனைவரும் மெச்சிக் கூறுவர்.

அந்த நன்னாட்டில், மந்தாகினி என்னும் அமுதினும் இனிய நீர் நிறைந்த பேராறு, ஊடுருவிப் பாய்கின்றது. அமுதமுண்டு பிணி பசி மூப்பையொழித்து அங்கு இனிதாக வாழ்ந்திருப்பவர், முப்பத்து முக்கோடி தேவராவர். பாற்கடலினுடைய நீரிற் பிறந்தவரும், நீர்மேல் நடக்க வல்லவருமாய அரம்பை மேனகை உருப்பசி திலோத்தமை முதலிய தெய்வப் பெண்களும், இயக்கர் கந்தருவர் விஞ்சையர் முதலிய கடவுளர் இனத்தினரும், ஆண்டு எந்நேரமும் பாடியாடிக் களித் திருப்பவராவர். எப்பொழுதும் எவ்விடத்திலும் அந்நாட்டில் மங்கலவொலி நிறைந் திருக்கும். அழிதலில்லாத இன்பத்தை முற்றிலும் பெற்றுள்ள அப்பொன்னுட்டிற்கு உவமையாகச் சொல்ல எவ்வுலகமு மிலது.

அத்தன்மைத்தாய நாட்டில் அறச்சாலை, வேதசாலை, வேள்விச்சாலை, யோகசாலை, கீதசாலை, நாதசாலை, நாடகசாலை, விநோதசாலை முதலிய கணக்கற்ற சாலைகளும், அள் விறந்த பல்வகை மண்டபங்களும், பல அவைக் களங்களும் நிறைந் திருக்கின்றனவாம். அந்நாட்டிற்குத் தலைமை பூண்டு விளங்குவது, அழகிற் சிறந்த அமராவதி என்னும் மாநகரமாகும். அந்நகரத்தில், எவராலும் ஒப்பிட்டுச் சொல்ல முடியாத அமரேசனுடைய கோயில் அமைந்திருக்கின்றது. அந்த அரண்மனைக் கிடையில் மூவுலகங்களும் அடங்கக் கூடிய இட மகன்ற சுதன்மை என்னும் இந்திரனுடைய அவைக்களம், எப்பொழுதும் புதிதாகவே விளங்கிக் கொண்டிருப்பதாகும். பொன் திணிந்த நிலத்தையும், வைடூரிய கற்களாலாய சுவர்களையும், மரகதத்தால் செய்த தூண்களையும், பவளத்தால் இயன்ற போதிகைகளையும், வைரத்தா

லாய தூலங்களையும், பதுமராகத்தால் வேய்ந்த முகட்டை யும் உடைய தாகும் அந்த அவைக்களம்.

இணையற்ற அழகமைந்த அந்தச் சுதன்மையில் ஒரு நாள், தன் வழக்கம்போலக் காசிப முனிவருக்கு அதிதியின் வயிற்றில் தோன்றிய ஆண்டகையாய ஆகண்டலன், கல வைச் சாந்து பூசிப் பொற் பூம் பட்டாடைகளையும் பீதாம் பரத்தையும் கட்டி, உத்தராசங்க மணிந்து, மகரக் குழைக ளிட்டு, வாகுவலயம் தரித்து, அரதனக் கங்கணமும் வச்சிரக் கடகமும் பூண்டு, நவரத்தின மாலைகளையும் முத்துமாலைகளை யும் சூடிப் பொற்பூணூலைப் புனைந்து, பவித்திரம் கணையாழி முதலிய விர லணிகளைத் தரித்து, மந்தாரம் பாரிசாதம் முத லிய ஐந்தரு மலர்களால் தொடுத்த கதம்ப மாலைகளை யணிந்து, ஒரு கோடி இரவி கலந்து எரித்தலைப்போன்ற ஒளி வீசும் உயர்ந்த மணிகளால் இழைத்த மணிமுடி கவித்து, உலகத் தாயாகிய திருமகளைப்போலச் சிறந்த அழகுடைய அயிராணி யோடு போந்து, கந்தருவர் பாட அரம்பையர் ஆட அணங் குகள் கவரி வீச வெண்ணொளி நிறைந்த முத்துக்குடை நிழற்ற மஞ்ச மேறி, நவமணி குயிற்றி யொளிரும் அரியணை யடைந்து அழகுடன் அமர்ந்தான்.

அப்பொழுது, ஆண்டுக் குழுமி யிருந்த வசுக்கள் என் மரும், மருத்துக்க ளெழுவரும், பதினொரு உருத்திரரும், பன்னிரு ஆதித்தரும், திக்குப்பாலகரும், முனிவர் எழுவரும், கடவுளர் பலருமாகிய அனைவரும் எழுந்து, இந்திரனுக்குச் செய்ய வேண்டிய வந்தனை வழிபாடுகளை முறையே செய்து, அவ ரவர்க் குரிய இடங்களில் மகிழ்ச்சியுடன் அமர்ந்தனர். வாசவன், தன் அரசியல் ஆணை செல்லுதலைக் குறித்துச் சிறிது நேரம் பேசி முடித்துத் தன் னெதிரில் உட்கார்ந் திருந்த முனிவர் பலரை அன்புடன் நோக்கி, "அறிஞரே!

குணங்களிற் சிறந்தது எது," என்று வினவ, முனிவர், "வாய்மையே தூய்மை யானது," என்று பதிலுரைத்து அமர்ந்திருந்தனர். உடனே பொன்னுட் டிறைவன் முனிவரைப் பார்த்து, "மக்களின் மிக்க மாதவ முனிவர்காள்! அந்த வாய்மை தவருு ஒழுக்கத்தை யுடைய ஒருவன் யாண்டேனும் உளனே? நீவிர் உரைத் தருள்வீர்," என்று கேட்டான். முனிவர் அனைவரும் சற்றுநேரம் மன வமைதியுடன் இருந்தனர். பின்னர், வசிட்டர் எழுந்து வாசவனை வணங்கி, "அண்ணலே! கேட்டருள்வீர். பூவுலகில் அயோத்திமா நகரத்தைக் காக்கும் அரிச்சந்திரன் ஒருவனே வாய்மையையே தூய்மை யெனக் கொண்டோன். அவன் ஒருவனே தூயவீரன்; மாபெரும் வள்ளல்; பிறர் மனைவியரை உடன் பிறந்தவராய்க் கருதுகின்றவன்; வெம்போர் விளைத்தலில் நிகரற்ற ஆற்ற லுடையவன்; எத்திக்கினும் சாலப் புகழ் படைத்தவன்; மறை யனைத்தும் நன்கு கற்று ஆய்ந்தவன்; விதி விலக்குகளைத் தெரிந்து நடப்பவன்; அற நெறி தவருமல் அரசாள்கின்றவன்," என்று மொழிந்தார்.

வசிட்டரிடம் தனக் கிருந்த பகையை முன்னிட்டு அரசமாதவன் மிக்க அழுக்காறு கொண்டு, பொருக்கென எழுந்து புரந்தரனை நோக்கி, "இமையவர் அரசே! இந்த வசிட்டன் அவ்வயோத்தி மன்னனுக்குப் புரோகிதன். அவனோடு இவன் எல்லா அரச செல்வங்களையும் இன்பங்களையும் அமர்ந்து நுகர்பவன்; ஆதலால், இவன் பொய்யை மெய்யாகப் புகழ்ந்து புகன்முன். இவன் இந்த அரசவைக்கண் இருக்கத் தகாதவ னுவான். அந்த அரிச்சந்திரன் வாய்மை தவருதவன் அல்லன். அவன், மிகக் கொடியவன்; பாதகன்; பிறர் மனைவியரை இச்சிப்பவன்; வீணன்; எப்பொழுதும் பொய்யையே பேசும் நீர்மை யுடையவன்;

நிறையும் பொறையும் சிறிதளவேனும் இல்லாதவன்; புல்லன்; கையன்; கயவன்; வஞ்சகன். அவனை மெய்யனென்று இவ்வசிட்டன் உரைத்ததென்ன புதுமை! நால்வகை உபாயங்களால் பிறர் நாட்டையும் செல்வத்தையும் கவர்தலிலேயே கருத்துடையவனும், செல்வச் செருக்கானும் பொருளாசையாலும் எளிய குடிகளைப் பலவாறு வருத்தி இறை கொள்பவனும், புன்கண்மை கண்டும் மனமிரங்காத வன்கண்மை யுடையவனும், பிற உயிர்களைக் கொல்லுதலையே தொழிலாகப் பூண்டவனுமாய அவ்வரசனிடம் மெய் எங்ஙனம் பொருந்தி இருக்கும்? அவனுக்கு மெய் பகையே யாகு மன்றோ," என்று சொன்னான்.

அவ்வுரையைக் கேட்டு வசிட்ட முனிவர், உளம் கொதித்தெழுந்து கோமுனிவனை நோக்கி வெறுப்புடன், "பழி ஒரு சிறிதும் இன்றி மாசற்ற மணியேபோல் விளங்கும் அந்த ஆண்டகையை அடா நிந்தைகள் கூறி இழித்துரைத்த கௌசிக முனிவனே! அவனைப் பழித்த உன்னுடைய வாய் இன்னும் வெந்திலதே. அங்ஙனம் பழிப்பதற்கு உன்னிய உன் மனம் வெந்திலதே. அப்படிப் பேசுதற்கு இடனாயிருந்த நீயும் வெந்து விழாமல் இருக்கின்றனையே. கடவுளும் உன்னிடம் பொய்த்தனர் போலும்," என்றுரைக்க, கௌசிகன் பதைத்தெழுந்து வசிட்டரைப் பார்த்து, "உண்மையை உரைத்த எனக்கு நீ புகன்ற தீங்குகள் நேருவன அல்ல. பொய் பேசிய உனக்கே அவை நேரக் கடவன," என்று கூறினான்.

உடனே வானவர்கோனை நோக்கி வசிட்ட முனிவர், "கடவுளர் பெரும! யான் கூறிய புரவலன் வாய்மை திறம்பின், பிரம இருடிப் பதவியைத் துறந்து, சிகையும் முப்புரிநூலு மின்றிக் கள்ளை யுண்டு, நாயினுடைய ஊனைத் தின்று,

கழுதை யூர்ந்து தென்புல நோக்கிச் செல்லக் கடவேன்," என்று சொல்லி வாக்குறுதி செய்ய, அந்நேரமே விசுவாமித்திரனும், "கோசலை நாட்டுக் காவலன் வாய்மையினின்று திறம்பாக்கால், பல்லாண்டுகள் வேனிலில் ஐந்தீ நடுவணும் பனிநாளில் தண்ணீருள்ளும் இருந்து, காய் கனி கிழங்கு இலை சருகுகளை யுண்டு, நீரைப் பருகிக்காற்றை யுட்கொண்டு, யாதொன்றையும் உண்ணாமலும் இருந்து, வருந்தி யுழைத்து அரிதில் முயன்று பெற்ற கடுந் தவத்தினுடைய பயனிற் பாதியை அவ்வரசனுக் களித்து, என்னுடைய தவ வன்மையால் அவனை எழு தீவுகட்கும் ஒரு தனி இறைவ னாக்கிப் பல யுகங்கள்தோறும் அரசாள வைப்பேன் யான்; மற்றும், அம்மன்னனைப் பலகோடி ஆண்டுகள் இச்சுதன்மையில் நின்றே டொப்ப வீற்றிருந்து செங்கோல் செலுத்தவும் செய்குவன் யான். என் தவத்தால் இதோ அன்னோனை வறிய னாக்கி, அவனுடைய செல்வங்களையும் மனைவி மக்களையும் இழக்கச் செய்து, அயோத்தியினின்று அகல வெருட்டி அவனைப் புலையனுக்கு அடிமையாக்கித் துன்பக் கடலில் ஆழ்த்திப் பொய் புகலச் செய்வேன்; இழிந்த பாதகனாக அவனை யாக்குவேன்; என் திறமையை இதிற் பாரும்," என்று புருகூதனை நோக்கிப் புகன்று, கையோடு கையறைந்து வாக்குறுதி செய்தான்.

அம்மொழிகளைக் காதேற்ற வசிட்ட முனிவர், மிக வெகுண்டு கௌசிகனைப் பார்த்து, "யானோ பொய் புகன்றேன்? அடாத செயல்களுக்கு அரசனாகிய நீயே, அரிச்சந்திரனுடைய உயர்ந்த தன்மையை யறியாமல் பொள்ளென வெழுந்து பொய் பேசிப் புரட்சிக்காரனானாய். அவ்விறைவனைப் பொய்யனாக்க உன்னால் முடியாதென்பதுடன் உன்னைப் படைத்த கடவுளாலும் முடியாதென்றே துணிந்து

சொல்வேன். கனவிலும் பொய் சொல்லக் கருதா இயல் புடைய அம்மன்னன், எத்தகைய துன்பம் வரினும், நல்குரவு நலியினும், உயிர் துறக்க நேரினும், எவ்வளவு துயர் உறினும், சிறிதும் தன் உண்மையினின்று திறம்பாச் செம்மை பூண்டோன்; இன்ப துன்பங்களை ஓரே படித்தாகக் கொள்ளும் குருசில்; அறமே உரு வெடுத்தாற் போன்ற ஆணழகன்; கலை பயின்று கட்டுரை கூறவல்லக் கலைஞன்; அறம் உணர்ந்து மறங் கடிந்த மானவன்; எவ்வுயிர்க்கும் அன்புடை இறைவன்; அந்தமில் இன்பத்து அறிவன் தாளிணை யடைதற் குரிய அறிஞன். உண்மைக்கு உறை விடமாயும், அகமும் முகமும் மலர்ந்து எப்பொழுதும் எழி லுடன் விளங்குகின்றவனும், அகன்ற கடலைப்போன்ற பெருமை படைத்தவனும், உயர்ந்த இமய மலையை யொத்த மனத் துணிவையும் வீரத்தையு முடையவனும், மதி யன்ன தோற்றத்தை மன்னியவனும்; அளகேசனோ டொப்ப வழங்கும் தன்மை யுடையோனும், திருமாலைப் போலத் திறலுடையோனும், பொய் யறியா நாக்கைப் படைத்த வனுமுள்ள அந்த இறைவனைப் பொய்ய னாக்குவேன் என்ற உன்னுடைய திறமையை யான் காண்பேன். உன்னைப்போன்ற தன்மை யுடையவன் என்று அவனையும் கருதினையோ? நீயோ, அரசர் குலத்திற் பிறந்து அரசியற்றி, காட்டில் வேட்டையாடி உயிர்வதை புரிந்து வருந்திக் களைத்து, என் னாச்சிரமத்தை யடைந்து வயிறார உண்டு தெளிந்து, பொல்லாத பேரவாவால் காமதேனுவைக் கவர எண்ணிச் சேனைகளோடு அதனிடம் நண்ணிச் சீர்குலைந்து, என்னை யெதிர்த்து ஏங்கித் திகைத்து, அரசனுடைய வன்மையினும் அந்தணனுடைய வலியே உயர்ந்த தென் றுட்கொண்டு, நாடு நகரம் முதலிய எல்லாவற்றையும்

துறந்து, நான்கு திக்கினும் சென்று தவ மியற்றிப் பிரம இருடி என்று உன்னை நீயே புகழ்ந்து, என்னிடம் கொண்ட உட்பகையால் அற நெறிக்கு மாருக நடக்க முயல்கின் றவ னுவாய். உன்னைப்போல் யான் ஏன் பொய் புகல வேண்டும்,'' என்ருர்,

கோசிகன் சினந்து சீறி வசிட்டரைப் பார்த்து, "உன் னுடைய மைந்தர் எல்லாரையும் கொன்றழித்த என்னுடைய திறமையை நீ இன்னும் உணர்ந்திலை போலும். நீ, மெய் யன் என்று மெய்ப்பிக்க முயன்ற காவலனைப் புலையனுக்கு அடிமையாக்கிப் பொய்யுரைக்கச் செய்து என்னுடைய வல் லமையைக் காட்டுகின்றேன்,'' என்றுரைத்துக் கையில் தண் டத்தை யேந்தி நெருப் பெழ விழித்துக் கனன்று முழக்கி, வசிட்ட முனிவரை யெதிர்த்து வாட்ட ஆரவாரித்தான். வசிட்ட முனிவரும் கையி லிருந்த தண்டத்தைத் தூக்கினர். அதைக் கண்டு அங்கிருந்தவர் அனைவரும், அஞ்சி நடுங்கினர். இந்திரன் நடுக்க மெய்தி விரைந்து போய் அம்முனிவர் இரு வரையும் பணிந்து, அவருடைய சினத்தைத் தணித்து, அவ ரை நோக்கி, மாமுனிவர்காள்! நீவிர் இவ்வாறு முனிவு கொள்ளுதல் முறையோ? நீவிர் இப்பொழுது கூறிய அரிச் சந்திரனுடைய தன்மையைப் பரிசோதிப்பின், உங்க ளிருவ ருள் ஒருவருடைய பேச்சு மெய்யாகு மன்ருே? அப்படி அந்த அரசனைப்பற்றி ஆராயு மிடத்தில் நேரும் வெற்றி தோல்விகளுக்கு நீவிர் சற்று நேரத்திற்கு முன்பு சொன்ன வாக்குறுதிக் கிணங்க நடந்து கொள்ளுதலே தக்க தாகும். இவ்விடத்தில் இங்ஙனம் வெகுண்டு விவாதத்தைப் பெருகச் செய்வதால் யாது பயன் உண்டாகக் கூடும்? நீவிர் சென்று அயோத்தி வேந்தனுடைய தன்மையை யாராய்ந்து பார்ப்பீ ராக,'' என்று வேண்டினன்.

"இறைவ! வீணனான இந்தக் கௌசிகனே சென்று அரிச்சந்திரனைப் பரிசோதிக்கக் கடவன். அவ்வரசன் இறையும் மெய்யினின்று பிறழான். இஃது உண்மை யாகும். என் சொல் தவறின், யான் முன்பு கூறிய வாக்குறுதிக் கேற்ப யாதொரு தடையு மின்றி நடந்து கொள்வேன்," என்று இமையவர் வேந்தனை நோக்கி இயம்பி வசிட்டர், அவ்விடத்தை விட்டு நீங்கினார். இந்திரனைப் பார்த்து விசுவாமித்திரன், "உம் மெதிரில் வாக்குறுதி யளித்த வண்ணம் யான் நடப்பேன். இதோ மண்ணுலகத்தை யடைந்து அவ்வரிச்சந்திரனைப் பொய்யனாக்கி என் திறமையைக் காட்டுகின்றேன்," என்று சொல்லிச் சினமும் வீரமும் நிறைந்தவனாய் அச்சுதன்மையை நீத்து வெளி யேறினான். அந்த அவைக்கணிருந்தவர் அனைவரும் வியந் தெழுந்தனர். அற்றைப் பொழுது அரசவையும் இனிது கலைந்தது.

---

பிரிவு - ௰க

# அரிச்சந்திரனுடைய செல்வங்களைக் கவர்தல்

சுதன்மையை விட்டகன்ற கௌசிகன், பனிமால்வரைச் சாரலை யடைந்து தங்கிக், கோசலை நாட்டுக் கோமானைப் பொய்யனாகச் செய்தற்கு எண்ணி, ஏற்ற காலத்தை யெதிர் நோக்கிக் காத்திருந்தான். நாட்கள் சில கழிந்தன. அயோத்தி வேந்தன் அரிய வேள்விகள் பலவற்றை யியற்றி அந்தணர், அறிஞர், வறிஞர் முதலியோர்க்குப் பணமும், பூமியும், வேண்டியவரை மற்றைப் பொருளும் அளித்து மகிழ்ந்தான். அவனுடைய அருஞ் செயலை யறிந்த அரசமாதவன், "அரிச்

சந்திரன் இப்பொழுது, தன்னிட மிருந்த பொருளை எல்லாம் செலவழித் திருப்பான். அவனை யேமாற்றித் துன்புறுத்து வதற்கு இதுதான் தக்க வேளை யாகும்,'' என்று எண்ணி, அப்பொழுதே புறப்பட்டுச் சென்று அயோத்தியை யண்மி, இறைவனுடைய கோயிலைக் குறுகித், தன் வரவை வாயில் காப்போரால் அரிச்சந்திரனுக்கு அறிவித்தான்.

மாதவன் வரவை யறிந்து அம்மன்னன் உவந்தான்; தன் அமைச்சருடன் எதிர் நோக்கிச் சென்று முனிவனு டைய அடிகளைப் பணிந்து வழிபட்டான்; அன்புடன் அவனை அரண்மனைக்குள் அழைத்துச் சென்று மணித் தவிசின் மீதேற்றி மனங் களித்தான்; அவனை நோக்கி, "அடிகள் வரவால் அடியேன் இன்று புனித னானேன். இம்மனையும் மாண்புடைய தாயது. அடிகளுடைய அடி யிணையை வணங்குதற் குரிய பேற்றை யான் இன்று பெற் றமையை என்னென்று கூறுவேன்? இஃது, என் குலத் தொல்லோர் செய்த தவப் பயனால் நேர்ந்ததோ? நான் முற் பிறப்பிற் செய்த நல்வினைப் பயனால் நேர்ந்ததோ? யாதொன் றையும் அறியேன். அடிகளுக்கு அடியேன் செய்ய வேண்டியது யாதேனும் உளதோ? கட்டளையாயின் உடனே செய்குவல். அடிகள் ஆணையை யெதிர்பார்த்துக் காத்திருக்கின்றேன்,'' என்று பணிவுடன் கூறினான்.

ஆசி வழங்கி அம்மன்னனைப் பார்த்துக் கோசிகன், "மாதவர் மதிக்கும் மன்ன! உன் அறிவினுடைய பெருமை என்னென்று கூறுவேன்? உன்னுடைய வணக்கத்தையும் வழிபாட்டினையும் ஏற்று என் மனம் மிக்க உவகை யுற்றது. மாணவர்க்குக் கலையோதி மா மாயனை நோக்கி இமய மலையி னிடம் தவஞ் செய்திருந்தேன் யான்; அரிய வேள்விகளைச் செய்து அந்தணர் ஏழைகள் முதலியோர்க்கு நீ ஏராளமாகப்

பொருள் வழங்கி உதவியதைக் கேள்வியுற்றேன் ; மிக்க மன மகிழ்ச்சி கொண்டேன் ; எல்லாம் வல்ல இறைவனை நோக்கி ஓர் அரிய யாகத்தை யியற்ற யான் விழைந்துளேன்; அதைச் செய்து முடித்தால் உன்னைப்போன்ற மன்னர்க்கும், மற்றை மக்களுக்கும் நன்மை பெருகும். அதை முட்டின்றி முடிப்பதற்கு ஐராவதத்தினுடைய மரபிற் பிறந்த ஜயந்தம் என்னும் யானையின்மீது வல்ல ஆடவன் ஒருவன் ஏறி நின்று, உயரக் கல் லொன்றைக் கவண் கொண் டெறிந்தால், அஃது எவ்வளவு தூரம் செல்லுமோ அவ்வளவு பொருட் குவியல் வேண்டும், அந்த அளவு வெறுக்கை தரக் கூடியவர் இவ்வுலகத்தில் உன்னை யன்றி வேறு எவரும் இலர் என்பது உண்மை யாகும். ஆதலால், என் இச்சையை உன்னிடம் தெரிவிக்கலா மென்று எண்ணியே இப்பொழுது இவண் போந்தேன். உன்னால் என் விருப்பத்தை முடிக்கக் கூடுமா என்பதையும் அறிய விரும்புகின்றேன்,'' என்று வஞ்ச நெஞ்சத்துடன் உரைத்தான்.

முனிவன் மொழிந்ததைச் செவியேற்ற மன்னன், "என்னிடம் நீர் பொருள் பெற விரும்பின், யான் கொடுக்க மறுப்பேனா? இதைவிட உயர்ந்த கொடை யாதுளது? இதனால் எனக்கு விளையும் நற்பயனும் பெருமையும் அள விடற் கரிதாமோ,'' என்று கௌசிகனை நோக்கிப் பகர்ந்து, தன் பொருட் களஞ்சியத்தைக் காத்திருந்தவரை யழைத்துக் கோசிகனைக் குறித்துக் காட்டி, "இம்மாமுனிவர் விரும்பிய அளவு பொருள் கொணர்ந்து தருக,'' என்று அவரை நோக்கிக் கூறிக் கட்டளை யிட்டான். உடனே அவரும் பொருட் களஞ்சியத்தைத் திறந்து வெறுக்கையைக் கூடை களில் வாரி வாரிக் கொணர்ந்து முனிவன் முன்பு கொட்டி மலை போலக் குவிக்கத் தொடங்கினர்.

அச்செயலைக் கண்டு கௌசிகன், அரையனை நோக்கி, 'ஆண்டகையே! உன் வள்ளண்மையைக் கண்டு கற்பகத் தருவும் நாணுமே. இது காறும் உன்னைப் போன்ற சிறந்த வள்ளலை யான் எங்கும் கண்டிலேன். முப்பெரும் புவியினும் ஒப்பிலா உயர்ந்த வள்ளல் நீயே யாவாய். நீ கொடுத்தற் கிசைந்த வெறுக்கை இராசி யான் வேண்டும்போது பெற்றுச் செல்கின்றேன். அதுவரை உன்னிடமே அஃது இருக்கட்டும். யானோ காட்டில் தவஞ் செய்து கொண் டிருக்கின்றேன். பொருளை யெடுத்துச் சென்று எங்கு வைப்பேன்? எவ்வாறு காவல் புரிவேன்? அதைக் காத்திருப்பின் என் நிலைமை அழிந்து படுமே. தீவினைக்கு ஆளாகுவேனே. ஆதலால், எனக்கு வழங்கிய பொருள் உன்னிடமே இருக்கட்டும். இன்னும் சின்னாளில் யான் மக மியற்றத் தொடங்குவேன். அப்பொழுது அதை யெடுத் தேகுவேன்,'' என்று சொல்லி, விடை கொண்டு தன் ஆச்சிரமத்தை நோக்கிப் போனான். கௌசிகன் பொருளை யாசித்ததையும், பிறகு அதை யெடுத்துச் செல்லாமல் போனதையும் குறித்து நினைந்து அயோத்தி அரசன் மனக் கலக்க மடைந்தான். அவனைச் சத்யகீர்த்தி தேற்றினான்.

காட்டை யடைந்து விசுவாமித்திரன், அரிச்சந்திரனுக்குத் தீங்கிழைக்க உன்னினான்; அவ்வரசனுடைய நாட்டில் மழை பொய்க்கவும், வறுமைநோய் மலியவும், பிணி பீடிக்கவும் செய்தான்; கணக்கற்ற கொடிய விலங்குகளையும் பறவைகளையும் ஏவிக் கோசல நாட்டிலிருந்த பயிர்களையும் பொழில்களையும் உயிர்களையும் அழித்துப் பாழாக்கச் செய்தான். அந்த முனிவனால் கோசல நாட்டிற் பல கெட்ட குறிகள் உண்டாயின; பஞ்சம் விளைந்தது; மக்களுக்குப் பலவகைத் துன்பங்கள் நேரலாயின. தங்களுடைய உயி

ரினும் அரிதாய் ஓம்பி வந்த பயிர்களைப் பல்வகை விலங்கு களும் பறவைகளும் பாழாக்கத் தொடங்கியதைக் கண்டு குடிகள், கொற்றவன் கோயிலை யடைந்து, குறையைக் கூறி முறையிட்டார்கள். அக்குறையை விரைவிற் போக்குவதாய்ச் சொல்லி அவர்களைத் தேற்றி யனுப்பிவிட்டு அரிச்சந்திரன், தன் அமைச்சர் தலைவனாகிய சத்தியகீர்த்தியுட னிருந்து பயிர்களைக் காக்க ஆராய்ந்தான்; வேட்டையாடி விலங்குகளை யழிக்கத் தீர்மானித்தான். மறுநாள் நால்வகைச் சேனை களும் புடைசூழ அவ்வேந்தன், தன் அமைச்சர் தண்டத் தலைவர் வேடர் முதலியோருடன் புறப்பட்டு வேட்டையாடக் காட்டை நோக்கிப் போனான். மனைவி மைந்தரும் அவனு டன் சென்றனர்.

கானகத்திற் புகுந்து மூலைக்கு மூலை திரிந்து அரிச்சந்தி ரன், விலங்குகளையும் பறவைகளையும் தூக்கிக் கொன்றான். அச்செயலை யறிந்து கோமுனிவன், பெரியதொரு பன்றி யைப் படைத்து, அரிச்சந்திரனை வாட்ட அதை விடுத்தான். அவ்வேனம் விரைந்தோடி யுருமி யார்த்து அயோத்தி மன்னனைக் குறுகிற்று. சேனைத் தலைவரும் வேடரும் மடக்கி யெதிர்த்து அதைக் கொல்ல பலவாறு முயன்றனர். அவருடைய முயற்சிக ளெல்லாம் பயன் படாதன வாயின. உடனே மன்னன் சென்று அம்புமாரி பொழிந்து அதைக் கொன்று வீழ்த்தினான்,

நெடுநேரம் அங்கு மிங்கும் அலைந்து திரிந்து வேட்டை யாடியதால் மன்னன் இளைத்தான்; ஓர் இடத்தில் தங்கி இளைப்பாற எண்ணினான்; சேனைகளுடன் புறப்பட்டுத் தக்க தோர் இடத்தை நாடிச் சென்றான்; சோலைகடோறும் புகுந்து சென்ற அவன், ஓர் இடத்தில் வசிட்ட முனிவர் தவஞ் செய்திருந்ததைப் பார்த்தான்; மகிழ்ச்சியுடன் அவரை

யணுகிப் பணிந்து, வலம் வந்து வழிபட்டு நின்றான். வசிட்டர், அவ்வரசனைக் கண்டு உள மிக மகிழ்ந்தார். ஆசி கூறி அவனை அன்புடன் பார்த்து அவர், "வெற்றி வேந்தே! மனைவியோடும் மைந்தனோடும் இக்காட்டை யடைந்து வேட்டையாட நீ எப்படித் துணிந்தனை? எவ்வுயிரையும் உன்னுயிரைப்போல் மதிப்பாயே! இப்பொழுது எதனால் இச்செயலுக்கு உடன் பட்டனையோ? எனக்கே வியப்பா யிருக்கின்றது," என்று மொழிய, அரிச்சந்திரன், தன்னுடைய குடிகளுக்கு விலங்குகளால் நேர்ந்த துன்பத்தை யெடுத் தோதி, அத் துன்பத்தைத் துடைக்கத் தான் வேட்டைக்கு வந்தமையைத் தெரிவித்தான். அதைக் கேட்டு வசிட்டர் புன்னகை புரிந்து, சுதன்மையில் அம்மன்னனைக் குறித்து நிகழ்ந்தவற்றை யெடுத் தியம்பி, அவனை நோக்கி, "இறைவ! விலங்குகளிடம் யாதொரு குற்றமு மிலது. விசுவாமித்திரனால் அவை உன் நாட்டை அடைந்து பயிர்களைப் பாழாக்கின. உன்னைப் பொய்யனாக்க அவன், இன்னும் கொடிய செயல்கள் பலவற்றைச் செய்யப் போகின்றான்; உனக்குப் பல துன்பங்களை யுண்டாக்க எண்ணி யுள்ளான். உண்மையினின்று பிறழாமல் கவனித்து நடந்து உலக முள்ளளவும் உன்னுடைய இன்னிசை நிலைத் திருக்கச் செய்வாயாக. விதி விலக்குகளை நன்கு யுணர்ந்த அறிவிற் சிறந்த தூய வீரனாகிய உனக்கு இதைவிட வேறு எதையும் யான் சொல்ல வேண்டிய தில்லை என்று நம்புகின்றேன். விரைவில் நாடேகி எத்தகைய துன்பம் வந்துறினும் அஞ்சாமலிருந்து உன்னுடைய உயர்ந்த தன்மையைக் காத்துக் கொள்வாயாக," என்று கூறி, ஒருவாறு எச்சரித்தார்.

தன்னுடைய ஆசிரியர் மொழிந்தவற்றைச் செவிமடுத்த மன்னன், ஒருவாறு மனக் கலக்க மெய்தினான்;

ஆயினும், வாய்மைக்கு வழுவின்றி நடப்பவரிடம் எய்தும் எத்தகைய துன்பமும் இன்பமாகவே மாறும் என்பதை யுட்கொண்டு ஆறுத லடைந்தான்; ஆசிரியரை வணங்கி விடைபெற்று அவ்விடத்தை விட்டு நீங்கினான்; சற்று நேரம் தங்கியிருந்து இளைப்பாறத் தக்கதோர் இடத்தைக் கருதிப் போனான்; சிறிது தூரம் சென்றதும், இட மகன்றதும் அழகியதுமாய ஒரு சோலையைக் கண்டான்; அதனுட் புகுந்து சேனைகளுடன் தங்கினான்; அங்கிருந்த குளிர்ந்த செந்தாமரைக் குளத்தில் இறங்கிக் குளித்துக் கரையேறினான்; உண வருந்திச் சிறிது நேரம் துயின்றான்; தீக்கனா ஒன்றைக் கண்டான்; அதைத் தன் மனைவியினிடம் உரைத்தான். சந்திரமதி ஆராய்ந்து பார்த்து, அந்தக் கனவினால் முன்பு துன்பமும், பின்பு இன்பமும் வந்தடையுமென்று அந்தக் கனவினுடைய பயனைக் கண்டு தன் நாயகனிடம் தெரிவித்தாள்; அதற்காக மன வருத்த மடையாவண்ணம் அவனைத் தேற்றினாள்.

சிறிது நேரம் கழிந்ததும் ஓர் அந்தணச் சிறுவன் அரசன் தங்கி யிருந்த இடத்திற் கருகே சென்றான். அவனை யழைத்து மன்னன், தான் தங்கி யிருந்த சோலை யாருடையது என்று வினவினான். அரசனை நோக்கி அச் சிறுவன், "இது விசுவாமித்திர முனிவனுடைய சோலையாகும். இவ்விடத்திற்குச் சிறிது தூரத்தில் அம்முனிவன் தவஞ் செய்து கொண் டிருக்கின்றான். அவனுக்காக யான் இதோ பூவும் புனிதப் புல்லும் எடுத்துச் செல்கின்றேன். சற்று நேரத்திற்குள் அம்முனிவன் இவ்விடம் வருவான். நீர் இப்பொழுதே இவ்விடத்தை விட்டு அப்புறம் சென்றால் பிழைத்தீர்; இன்றேல், அவனுடைய சினத்திற்கு ஆளாய் வருந்துவீர்," என்று சொல்லித் தன் வழிக் கொண் டேகினான். அரசன் அஞ்சித் திகைத் திருந்தான்.

அந்தணச் சிறுவன் அகன்றதும் விசுவாமித்திரன், மண்ணும் விண்ணும் அதிர விரைந்து நடந்து, அரிச்சந்திரனிருந்த இடத்தைக் குறுகி, அவனைக் கண்டான்; பாம்பைப் போலச் சீறி அவனிடம் ஓடினான்; அவனுடைய தலைமேல் எட்டி யுதைத்தான். அதனால், மன்னன் தலையிலிருந்த முடி தத்திக் கீழே விழுந்தது. உடனே அரிச்சந்திரன், முழங்கா லிட்டுக் குனிந்து முனிவனுடைய தாளிணையை மெல்லப் பிடித்து வருடி, "ஐயோ! இம்மலரடிகள் என் முடியி லிருந்த அரதனக் கற்கள்மீது பட்டு எவ்வாறு நொந்தனவோ? இதற் கென் செய்வேன்," என்று சொல்லி, மன மிரங்கி, மனைவி மைந்தனோடு அம்முனிவனை வணங்கிக் கைகட்டி, அவனை நோக்கி வணக்கத்துடன், "மாதவ ரேறே! அடியேன் உமக் கொரு பொருளோ? உம்முடைய சினத்தைத் தாங்க என்னால் கூடுமோ? நீர் இவ்வளவு சீற்றங் கொள்ள யான் யாது பிழை செய்தேனோ? எத்தகைய குற்றஞ் செய்திருப்பினும், மனங் கொள்ளாமல் அடியேனை மன்னித் தருள இறைஞ்சுகின்றேன்," என்று சொல்லி வேண்டினான்.

கனிச் சினந்த முனிவன், அயோத்திக் கரசைப் பார்த்து, "நீ மிக்க பசப்புக்காரன் என்பதை யான் அறிவேன். வஞ்சிப்பதிற் கைதேர்ந்த நீ, பிறர் மயங்கப் பேசுதல் புதுமையோ? உன்னைப் போன்ற வல்ல கள்வன் ஒருவனை யான் இதுகாறும் எவ்விடத்தும் கண்டிலேன். அரசனைப் போல் வேடம் கொண்ட அரக்கனே நீ யாவாய். என் சோலையை உன்னுடைய சேனைகளுடன் சேர்ந்து நீ இவ்வாறு அழித்துப் பாழாக்கினையே. குழந்தைகளைப் போல் அருமையாக வளர்த்துப் பெருமையாகக் காப்பாற்றி வந்த மரம் செடி கொடிக ளெல்லாமும் ஒடிந்து வீழ்ந்து கிடக்கின்றனவே. குளிர்ந்த நல்ல நீரையுடைய குளத்தை

யும் கலக்கி நீ கெடுத்தனையே. உன் செங்கோல் முறையி னுடைய அழகு இதுதானோ? கொடியவனே! தவ முனி வனுக்குத் துன்பம் விளைக்கத் தலைப்பட்டனையே. உன் தந் தையினுடைய புலைத் தன்மையை நீக்கிய என் திறமையை யறியாயோ நீ? இதோ பார்; தீச்செயல் புரிந்த உன்னை, மனைவி மக்கள் நட்டோர் சுற்றத்தினர் முதலியோருடன் அழிக்கின்றேன்; உனக்குத் துணையாக எத்தகைய வீரன் வரினும் ஒறுப்பேன்; உன் ஆசானாகிய வசிட்டன் வந்தா லும் வாட்டுவேன்; இந்திரன் எய்தினும் இடர் விளைவிப் பேன்; மும்மூர்த்திகள் முந்தினும் பின்னிடேன்," என்று கொதித்தோதினான்.

அயோத்தி மன்னன் நடுங்கிக் கௌசிகனைப் பார்த்து வணக்கத்துடன், "அறியாமல் அடியேன் செய்த குற்றத் தைப் பொருட்படுத்தாமல் காத்தருள வேண்டுகின்றேன்," என்று சொல்ல, முனிவன் சீற்றத்துடன், "என் பொழிலை முற்றிலும் அழித்தனையே. அதற்கு மாறாக என்ன செய் யப் போகின்றனை? எதைத் தர இணங்குவாய்," என்று கேட்க, அரசன், "ஐயா! தாம் எதை விரும்பிக் கேட்பி னும் கொடுக்க இசைவேன். இச்சோலைக்கு ஈடாகக் கண்ணை வேண்டினும் ஈகுவன்; காக்கின்ற மண்ணை வேண்டினும் வாழ்வுடன் வழங்குவேன்; பின்னை, எதைக் கேட்பினும் தருகுவல்," என்றுரைக்கக், கோமுனிவன் நகைத்து, "உன் சொல் நன்றாயிருக்கிறது. ஏன் இப்படி உளருகின்றனை? உன் எண்ணம் யான் அறிவேன். என்னை மயக்க உன்னால் வசமாமோ? காக்கின்ற நாட்டைக் கேட் பினும் கொடுப்பேன் என்று உளம் கூசாமல் சொல்லு கின்றனையே. அங்ஙனம் கொடுக்க உடன்படுவையா? வாய் மையி னின்று இறையும் தவறாதவ னென்று உன்னை வசிட் டன் புகழ்கின்றானே. அஃது எவ்வளவு உண்மை யென்

பதை யான் அறிய வேண்டும். எதோ, நீ உரைத்த வண்ணம் நட; பார்க்கலாம். உன்னுடைய நாட்டைப் பெற யான் விரும்புகின்றேன்; கொடுப்பாய்,” என்று கேட்டான்.

வஞ்ச நெஞ்சம் படைத்த அந்த முனிவனுடைய மொழியைக் கேட்டு வேந்தன் திகைத்து, அவனைப் பார்த்து, “தூய மா முனிவரே! நானும், என்னுடைய நாடும், மற்றும் எனக்குள்ள செல்வங்களெல்லாமும் உம்முடையனவாய் இருக்க, யான் நாட்டை உமக்குக் கொடுக்க வேண்டுமா? நீரே கொள்ளலாமே. உம்முடைய விருப்பத்திற்கு யான் தடை சொல்வேனே,” என்று சொல்ல, அதற்கு முனிவன், உடல் குலுங்கச் சிரித்து, “மிக நன்றாய்ச் சொன்னாய்; இக்கலைகளையெல்லாம் எங்குக் கற்றனையோ? மெச்சினேன்; வஞ்சகத்தில் உன்னைவிடக் கைதேர்ந்தவர் எவரும் இரார். ஆ ஆ, கள்வனே! முதலில் நாட்டை வேண்டினும் கொடுப்பேன் என்று நீ கூறினாய். அதைக் கொடுக்குமாறு கேட்டவுடனே, நீரே கொள்ளலாம் என்று பின்னர் மிக்க நயத்துடன் என்னை நோக்கிக் கூறுகின்றனை. இப்படி எல்லாம் பொய்யும் புரட்டும் பேசிப் பிழைப்பானேன்,” என்று சீற்றத்துடன் சொன்னான்.

கோசிகனுடைய பிடிவாதத்தைப் பார்த்து மன்னன் ஏங்கி நின்றான். அப்பொழுது, அருகிலிருந்த சந்திரமதி, தன் கணவனை நோக்கி, “என் ஆருயிர்க் காதலரே! இம்முனிவன் நம்மை வஞ்சிக்க வந்துள்ளான்; உம்மைப் பொய்யனாக்கிப் புகழ்பெற முயல்கின்றான். ஆதலால் இனிமேல் அவனுக்கு வாதிட இட முண்டாகுமாறு நீர் பேச வேண்டாம். முன்பு நீர் சொன்ன வண்ணம் நம்முடைய நாட்டை அவனுக்குக் கொடுத்துவிடும். உம்முடைய வாய்மையைக் காப்பாற்றுவீராயின், நமக்கு யாதொரு தாழ்வும் நேராது; அளவிடற் கரிய புகழும், புனிதமும், இன்ப

மும், புத்தேளிர் உலகமும் நமக்குச் சொந்த மாகும். எத்தனையோ அரசர் இவ்வுலகத்தை யாண்டனரே; அவருள் ஒருவரேனும் நிலைத் திருக்கின்றனரா? அன்றி, அவருடைய செல்வங்க ளாயினும் காணப் படுகின்றனவா? செல்வங்களெல்லாமும் தோன்றி மறையும் மின்னலுக் கொப்பாகும். அறம் ஒன்றே எப்பொழுதும் அழியாம லிருப்ப தாகும். அதற்கு வாய்மையே உறுதியான வேராகும். வாய்மையினாலே உலகம் உயிர் பெற் றிருக்கின்றது; கதிரவனும் திங்களும் அவ்வாய்மையினாலேயே முறையே தோன்றி உலகத்தை நடத்துகின்றனர். வாய்மையினும் உயர்ந்தது யாது மிலதே," என்று மொழிந்தாள்.

அறிவிற் சிறந்த அவ்வரசி உரைத்தவற்றைக் கேட்டு அரிச்சந்திரன், உள மகிழ்ந்தான்; கௌசிகனுக்குப் பொன்னோடு நீர்த் தாரை வார்த்துத் தன் பொன்னாடு முழுவதையும் வழங்கினான். அதை யறிந்து அறிஞர் விண்ணவர் முதலியோர், "வசிட்ட முனிவரே வென்றார்; அறம் களித்தது; உண்மையே உயர்ந்தது; அரிச்சந்திரனே உண்மைக் கிறைவனும், உயர்ந்த வள்ளலு மாவான்," என்று சொல்லிக் களித்தனர்; புகழ்ந்து கொண்டாடினர். அரசமாதவன், மன்னனுக்கு ஆசி வழங்கி, அவனை அன்புடன் பார்த்து, "நீ ஒருவனே உண்மையாளன், உன் வள்ளல் தன்மையை இன்றே கண்டேன்; களி மிகக் கொண்டேன். உன்னுடைய அரண்மனையை யடைந்து நீ இனிதாக வீற்றிரு. யான் நாளைக்கு அங்கு வருகிறேன்," என்று சொல்லி அப்புறம் சென்றான். உடனே அயோத்தி மன்னன், தன் மனைவி, மகன், அமைச்சர், சேனைகள் முதலியோருடன் அவண் நீங்கி அயோத்தியை நாடிப் போய்ச் சேர்ந்தான். அரசமாதவனுடைய கொடுமையைக் கண்டு நாணிச் செல்லுதலைப்போல் அற்றைப் பொழுதும் போயது.

மற்றைநாள் பொழுது புலர்ந்ததும் அரிச்சந்திரன், காலக் கடன்களை முடித்துத் தன் அரசவைக்கண் எய்தி அமர்ந்திருந்தான். அரசமாதவனும் அங்குச் சென்றான். எதிர்சென்று அவனை யழைத்துப் போய் மன்னன், அரியணை யின்மீது உட்காரவைத்துத் தன்னுடைய தலையி லிருந்த முடியை யெடுத்து அவன் தலைமீது கவிழ்த்து, அவனைப் பார்த்து, "நெருநல் யான் வழங்கிய வண்ணம் இந்நாட்டை இனிமேல் நீரே கைப்பற்றி யாண்டு மன்னுயிரைக் காத்தருள் வீராக," என்று சொல்லி, அமைச்சர், சேனைத்தலைவர், குடிகள் முதலியோரை யழைத்து, அவர்களுக்குக் கோமுனிவனைக் குறித்துக் காட்டி, அவர்களை நோக்கி, "இம்முனிக் கரசரே இனி உங்களை யாள்வார். முன்னர் இவர் சிறக்கச் செங் கோல் செலுத்தி அறம் வளர்த்த அரசராய் இருந்தவரே யாவர். நீங்கள் முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனால் இப்பொழுது இவரை மன்னராகப் பெற்றீர்கள்; இவருடைய ஆணைக்கு அடங்கி இனிதாக வாழ்ந்திருங்கள்," என்று கூறி, முனிவரை வணங்கி விடைபெற்றுத் தன் மனைவி மைந்தனை யுடன் கொண்டு அரண்மனையை நீத்துக் களிப்புடன் செல் லத் தொடங்கினான்.

அச்செய்தி அயோத்தி மா நகரம் முழுவதும் காட்டுத் தீயைப் போல் விரைவிற் பரவிற்று. குடிக ளெல்லாரும் கும்பல் கும்பலாய்த் திரண்டு அரண்மனையினிடம் ஓடிப் போயினர்; அழுது அரற்றினர். அமைச்சர் முதல் அந் நகரத்து மக்க ளெல்லாரும், "நாங்கள் இங்கு இருக்க மாட்டோம். அரசனைப் பின்பற்றிச் செல்வோம். இன்றேல், கௌசிகனைக் கொன்றொழித்து நாங்களும் இறப்போம்," என்று சொல்லித் துடித்துப் புலம்பினர். அவ ரனைவர்க்கும் இன்ப முண்டாகப் பேசி, அமைதியுட னிருக்க அவ ரெல்லா ரையும் வேண்டி அரிச்சந்திரன், அரண்மனையை விட்டுச்

சிறிது தூரம் சென்றான். கோமுனிவன் ஓடிப் போய் அவ்வரசனுடைய கையைப் பிடித்து, அவனை நோக்கி, "மன்ன, என்னை அரசனுக்கி ஆடை யணிக ளின்றி வெறிதே இருக்கச் செய்து நீ செல்கின்றனையே. உனக்கு இது நன்றாமா? நீ பூண்டிருக்கும் அணிகலன்க ளெல்லா வற்றையும் கழற்றி எனக்குக் கொடுத்துப் போ; நீ உடுத் திருக்கும் பீதாம்பரத்தையும் பட்டாடைகளையும் அவிழ்த்து எனக்கு ஈவாய்," என்று கேட்டான். உடனே அரசன், தான் அடைந்திருந்த அணிக ளெல்லாவற்றையும் எடுத்து அம்முனிவனுக்குச் சாத்தினான்; தன் விலையுயர்ந்த ஆடை களையும் அவிழ்த்து அவனிடம் கொடுத்துத் தான் வேறு சில வெள்ளாடைகளை யுடுத்து அவ்விடத்தை விட்டு அகன்றான்; நகரத்திற் கருகி லிருந்த தொரு பெரிய பொழிலிற் சென்று தங்கினான்.

விசுவாமித்திரன் அந்தச் சோலையினிடம் ஓடிச் சென்று அரசனைப் பார்த்துக், "கள்வர் தலைவனே, என்னை யேமாற் றிச் செல்கின்றனையே. உனக்கு இஃது அடுக்குமா? என் வேள்விக்காக முன்பு உன்னிடம் வைத்த என்னுடைய பொருளைக் கொடாமற் போகின்றனையே. இப்படியும் என்னை யேமாற்றி நீ செல்லுதல் அறமாமோ? தவத்தில் உயர்ந்த அந்தணனாகிய என் பொருளைக் கவர்ந்து செல்வா யாயின், உன் சுற்றத்தினருடன் நீ பாழாய்ப் போவாய்; உன்னுடைய குலமும் அழிந்து போகும்; வேண்டாம், வேண்டாம்; என்னுடைய பொருளைக் கொடுத்து விட்டு அப்புறம் அடி யெடுத்து வை," என்று பேசி அரசனைத் தடுத்தான். அவனை நோக்கி மன்னன், "உம்முடைய பொருள், பொருட் சாலையிலேயே இருக்கிறது," என்று சொல்ல, முனிவன் வெகுளியுடன், "நாட்டை எனக்கு அளித்தபோது என்னுடைய பொருள் பொருட் சாலையில்

அடங்கி யிருக்கிற தென்று நீ குறித்துச் சொன்ன துண்டா," என்று மன்னனைக் கேட்க, அவன், "அப்படியாயின், ஒரே திங்கள் தவணை கொடுப்பின் உம்முடைய வெறுக்கை தந்து விடுகின்றேன்," என்று சொல்ல, முனிவன் உடன்பட்டான்.

அரிச்சந்திரன் நகரத்தை விட்டுச் செல்லுதற்கு முன்பே அங்கிருந்த அந்தணர் அறிஞர் முதலிய பல்லோர் காட்டை நோக்கிச் சென்றனர். எஞ்சி யிருந்த மக்கள் முனிவனுடைய கூற்றைக் கண்டு அடங்காச் சீற்றங் கொண்டனர்; "எல்லா வற்றையும் வழங்கிச் செல்லும் வள்ளலைத் தடுத்து இன்ன மும் பொருள் கொடு என்று இம்முனிவன் கேட்கின்றானே. இவனுக்குச் சிறி தளவேனும் இரக்கமும் அறிவும் இல்லை போலும். முனிவன் வேடம் பூண்டு வந்த யமனே இவ னாவான். இவனை வெறிதே விடக் கூடாது; கொன்று போட வேண்டும்," என்று கூறி முனிவனைத் தாக்கத் துணிந்தனர். நன்மொழி பகர்ந்து அவர்களை அமைதியுடன் இருக்கச் செய்தான் அரிச்சந்திரன். கௌசிகனுடைய ஆளு கைக்கு அடங்கி யிருக்க ஒவ்வாமல் அவர்களும் நகரத்தை விட்டுக் காடேகத் தொடங்கினர். அயோத்தி வெற்றிடமே யாயிற்று. அரசனை விட்டு எப்பொழுதும் பிரிந்தறியாச் சத்தியகீர்த்தி துக்கத்துடன் அவ்வரசனிடம் போந்து, தான் அவனை விட்டுப் பிரிந்திருக்க முடியா தென்பதை யறிவித் தான். பற்பல நீதிகளைக் கூறி அவனை மன்னன் தடுத்தான். அவற்றை எல்லாம் அந்த அமைச்சன் மறுத்தான். ஆதலால், அவனையும் உடன்கொண்டு செல்ல அரசன் ஒத்துக்கொண் டான். அந்நால்வரும் அவ்விடத்தை யொழித்து அப்புறம் செல்ல லாயினர்.

---

பிரிவு - ௰௨

# அரிச்சந்திரனைப் பரிசோதித்தல்

சோலையினின்று அகன்ற அரசனை மற்றும் விசுவாமித்திரன் சென்று மடக்கி, அவனைப் பார்த்து, "அரிச்சந்திரா! நீ செய்த சூழ்ச்சி நல்லதே யாகும். இந்த விரகை எங்குக் கற்றாய்? நில், நில், போகாதே! எனக்குக் கொடுக்க வேண்டிய பொருளைக் கொடாமல் மோசம் செய்வதற்காக, நீ இவ்வளவு விரைவாய் இந்நகரத்தை விட்டுப் போகின்றாய் என்பதை யான் நன்றாய் அறிந்தேன். என் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து சென்று என்னை யேமாற்ற எண்ணங் கொண்டனை போலும். தவம் செய்து உடல் வற்றி வன்மை குன்றியுள்ள முனிவன் எங்குத் தேடிக் கண்டு பொருளைக் கேட்கப் போகின்றான் என்பது உன்னுடைய கருத் தாகும். அதனால் இவ்விடத்தை விட்டுக் கடிதேக விழைகின்றனை. முன்பு யான் உன்னிடம் வைத்த அவ்வளவு பொருட் குவியலை நீ எங்குத் தேடி, எவ்வாறு எனக்குக் கொடுக்கப் போகின்றனை? நாடோறும் வருந்தி யுழைத்து நீ பொருள் தேடினும், அஃது உனக்கும், உன்னுடைய மனைவி மைந்தனுக்கும் உணவுக்கே போதாதே. நீ எப்படி எனக்குப் பொருளைச் சேர்த்துக் கொடுக்கப் போகின்றாய்? அதைப் பற்றி எனக்குச் சிறிதேனும் நம்பிக்கை யிலது. நீ ஏமாற்றி விட்டால் நான் என்ன செய்வேன்? ஆதலால், என்னுடைய மாணாக்கனாகிய நட்சத்திரகனை உன்னுடன் அனுப்புகின்றேன். எனக்குச் சேரவேண்டிய பொருளை முன்னர் நீ சொன்னவாறு ஒரு மாத தவணைக்குள் அவனிடம் கொடுத்து விடு. அப்பொருளை இப்பொழுது எனக்குச் சொந்தமான இக்கோசலை நாட்டில் நீ பெற்றுத் தரக் கூடாது. இந்நாட்

டில் நீ பொருள் தேட முயல்வா யாயின், முன்பு அரச ஞய் இருந்தமையைக் கருதிக் குடிகள் உனக்குப் பொருள் கொடுத் துதவ முற்படுவார்கள். ஆதலால், வேறு நாடு சென்று நீ பொருள் ஈட்டி எனக்குத் தரல் வேண்டும்," என்று தெரிவித்தான்.

முனிவனுடைய சொல்லுக் கிணங்க நடப்பதாய் மன்னன் ஒத்துக் கொண்டான். நட்சத்திரகனைக் கூவி யழைத்தான் கௌசிக முனிவன். அப்பொழுதே அவன், விரைந்து சென்று முனிவன் எதிரில் தோன்றினுன். உடனே கௌசிகன், தன் மாணுக்கனைச் சுட்டிக் காண்பித்து மன்னனை நோக்கி, "இவன் என்னிடம் எல்லாக் கலைகளையும் நன்ருய்க் கற்றுத் தேர்ந்தவ னுவான். அதனுல் இவன், கரைந்த உள்ளமும் மெலிந்த உடம்பும் உடையவனு யிருக்கின்றுன். இவனுடைய மனத்திற்குச் சிறிதும் வருத்த முண்டாகாமல் நீ நடந்து கொள்ளல் வேண்டும். இவனுக்கு அடங்கிப் பணிவாய் நீ இருக்க வேண்டும். உலகியல் தெரியாச் சிறுவ னும், எப்பொழுதும் மிக்க தூரம் வழி நடந்து அறியாதவனு மாவான் இவன். ஆதலால், உடம்புக்கு நோயுண்டாகாமல் இவனைத் தோள்மீது நீ தூக்கிச் செல்லல் வேண்டும். முப் பொழுதும் இவனுக்குத் தக்க உணவை யளித்துக் காப் பாற்று. எவ்வகையினும் இவனுக்குச் சற்றும் வருத்த முண்டாக்காமல் நடந்து கொள்; இன்றேல், உனக்குக் கேடு உண்டாகும். இப்பொழுது நான் சொன்ன வண்ணம் உன்னுல் நடக்க இயலாதாயின், உன்னிடம் யான் வேள்விப் பொருளை வைத்திலேன் என்ருயினும், நாட்டை எனக்குக் கொடுத்த தில்லை யென் ருயினும் சொல்லி விடு. இன்னே உன்னுடைய நன்னுட்டைத் திருப்பிக் கொடுத்து விட்டு, உன் வயின் வைத்த பொருளையும் கேட்காமல் போய் விடு கிறேன்," என்று சொல்ல, வேந்தன், "உயிர் நீங்கினும்

என் உரையினின்று பிறழேன்,'' என்று உறுதியாகப் பதிலுரைக்க, முனிவன், "அப்படியா? உன் உரையினுடைய உண்மையை யான் காண்கின்றேன்,'' என்று சொல்லி, நட்சத்திரகனைத் தனியே யழைத்தேகினான்.

மன்னனுக்கு மறைவிற் சென்றதும் நட்சத்திரகனை நோக்கிக் கோமுனிவன், "நீ இந்த அரசனுடன் சென்று எனக்குச் சேரவேண்டிய பொன்னைப் பெற்று வருவாயாக; போகும் வழியில் இவனையும், இவனுடைய மனைவி மகனையும் பலவாறு துன்புறுத்தி வருத்தி, இழித்துரைத்து இன்னல் புரி; பொய் புகலச் செய். 'முனிவனுக்கு யான் வெறுக்கை தர வேண்டிய தில்லை' என்று இவ்வேந்தன் சொல்லினும் சாலும். அங்ஙனம் சொல்லுமாறு சிறிதும் மன மிரக்கமின்றி இவனை வருத்துவாய் நீ,'' என்று கூறி நகர்ப் புறம் திரும்பிப் போனான்.

மனைவி மைந்தன் அமைச்சரோடு அரசன், நட்சத்திரகனையும் அழைத்து அவ்விடத்தை விட்டுப் போகத் தொடங்கினான். அப்பொழுது, அயோத்தி மக்கள் பலர், திரளாக அவ்வரசனைப் பின்பற்றித் தொடர்ந்தனர். நகரத்தில் தங்கிக் கௌசிகனுடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்து வாழ்ந் திருத்தலே தக்க தென்றும், அங்ஙனம் செய்வதால் தன்னுடைய வாய்மைக்கும் பெருமைக்கும் மிக்க உயர்வு உண்டாகு மென்றும் தெரிவித்துத் தன்னுடன் வாராமல் அவரைத் தடுத்து மன்னன் சென்றான். நகரத்தை யடைந்த கோமுனிவன், அரியணையின்மீது அமர்ந்து, ஆண்டிருந்த அரசியற் பணியாளரெல்லாரையும் அழைத்துத் தான் தவஞ் செய்யக் காட்டிற்குப் போகவேண்டி யிருப்பதால் நாட்டை அவரே செவ்வையாய்க் காத்திருக்க வேண்டு மென்று அவரிடம் தெரிவித்து, அரண்மனையை நீத்து, அரிச்சந்திரனைப் பின் தொடர்ந்து சென்றான்.

அரிச்சந்திரனை வருத்த எண்ணங் கொண்டு அங்ஙனம் சென்ற முனிவன், அந்த அரசன் பற்றிப் போன வழி முழுவதும் முட்களும் கற்களும் நிறைந் திருக்கவும், புதர்களும் செடிகளும் மரங்களும் அடர்ந் திருக்கவுமாகச் செய்தான்; கனல் போலக் காற்று வீசவும், நெருப்பைப்போல் வெயில் காயவு மாக்கினான்; வழியி லிருந்த புல் பூண்டு முதலியன வெல்லாம் காய்ந்து தீப்பற்றி யெரியச் செய்ததுடன் எங்கும் அம்மன்னன் கண்களுக்குத் தண்ணீர் தென்படாம லிருக்கச் செய்தான். அதனால், லோகிதாசனுடன் சந்திரமதியும் பட்ட துன்பங்களுக்கு அளவே கிடையாது. அவ்விருவரும் பட்ட வருத்தங்களைக் கண்டு அரையனும் அமைச்சனும் ஆறாத் துக்க மடைந்து நடந்தனர். நெடுந்தூரம் சென்ற பின்பு பாலைவனம் ஒன்று அவர் வழிக்குக் குறுக்கிட்டது. அதைக் கடந்து போக லோகிதாசனும் சந்திரமதியும் மிக வருந்தினர். அமைச்சன், தன் தோள்மீது அவ்வரசிளங் குமாரனைத் தூக்கிச் சென்றான். சந்திரமதி பட்ட துன்பத்தை மன்னன் கண்டு மனங் கலங்கி, அவளைப் பார்த்துப், "பைந்தொடீ, என் தோண்மீது இவர்வாய்," என்று அழைத்தலும், அக்கற்பரசி, தன் கணவனை நோக்கிப், "பூமகளும் மண்மகளும் ஏறுதல் பொறாமல் கோமுனிவனுக்குற அளித்த உம்முடைய மணித் தோள்மீது நாயினும் தாழ்ந்த பெண்பாலாய யான் ஏறின், நரகத்தை யடைந்து அழிவேனே," என்று பதி லுரைத்து நடக்க, அம்மங்கையர்க் கரசியைப் பார்த்து மன்னன், "அன்ன மன்ன மென்னடைப் பாவாய்! இந்நன்மதி உனக்கு இன்றே யுள்ள தன்று; என்றும் நீங்கா திருப்பதே யாகும்," என்று சொல்லி, அவள் கையைப் பிடித்து மெல்ல அழைத்துப் போனான்.

அந்நாள் முழுவதும் அரிச்சந்திரன் சத்தியகீர்த்தி முதலியோர் வழிநடந்து துன்புற்று மிக வருந்தினர். அவரு

டைய துன்பத்தைப் பார்த்து மனம் பொருதவனைப் போல் இரவியும் மேற்கடலுள் ஆழ்ந்தான். அவ்வேளை அவர், ஒரு கொடிய கானகத்தை யடைந்தனர். இருள் மூண் டெழுந் தது. அப்பொழுது விசுவாமித்திரன், அயோத்தி வேந்த னுக்கு அல்லல் விளைவிக்கக் கருதித் தந்தகோடகன் என்னும் பெயரைப் படைத்த அசுரத் தலைவ னொருவனை யேவினான். அவன், அந்தணன் உருக்கொண்டு அரிச்சந்திரனை யண்மி மயக்கினான்; வானகத்தை யளாவிய வேதாளமாகத் தோன்றித் துன்புறுத்தத் தொடங்கினான். அஃது ஏதோ மாய மென்று உணர்ந்து மன்னன், தன் உடைவாளால் அவ் வேதாளத்தைச் சிதைத்துக் கொன்றான். அதை உணர்ந்த கௌசிகன், அறிவிழந்து திகைத்தான்.

பேரிருள் கவிழ்ந்ததுடன் கோசிகனுடைய ஏவலால் மேகங்கள் திரண்டு சென்று அரிச்சந்திரனிடம் யுகாந்த கால மழையே போலப் பொழிந்தன; உலகம் அதிரும் வண்ணம் வானகத்தில் இடி முழக்கங்க ளெழுந்தன; எல்லா உயிர் களும் நடுங்கும்படி மின்னலும் உருமு முண்டாயின. அவற்றால் அரிச்சந்திரன் சந்தியகீர்த்தி முதலியோர் அச்ச மெய்தினர்; ஆயினும், மனத் தளர்ச்சி யின்றிப் பொறுமை யோடு வழியைக் கண்டு மெல்ல நடந்தனர். அப்பொழுது, நட்சத்திரகனால் அரசனுக் குண்டான துன்பம் அளவிடற் கரிய தாகும். அச்சிறுவன், தனக்கு நேர்ந்ததாகக் காட்டிய அச்சத்தையும் வருத்தத்தையும் நீக்க முயன்றதே மன்னனுக் குப் பெருந் துன்பமா யிருந்தது. அந்நள் ளிரவில் அந்த மாணவன், "ஐயோ! என்ன செய்வேன்; பொறுக்க முடி யாத பசிப்பிணி என்னை வாட்டுகின்றதே. அரசரே! இப் பொழுதே எனக்கு அறுசுவை உண்டி யமைத் திடுவீராக. இன்றேல், இதோ என்னுடைய உயிரை விடுகின்றேன், அதனால், அந்தணனைக் கொன்ற தீவினை உம்மைத் தொடர்ந்து

சாரும்," என்று அரசனைப் பார்த்துக் கூறி, "அம்மவோ! ஐயகோ! அச்சோ," என்று அரற்றினான்; மண்ணில் விழுந்து புரண்டான். அரசன் திடுக்கிட்டு அவ்விருளில் அங்கு மிங்கும் ஓடிச் சில காய் கனிகளைத் தேடிக் கொணர்ந்தான்; அவற்றை அம்மாணவனுக்குக் கொடுத்து உண்பித்தான்; இன்ப முண்டாகப் பேசி அவனைத் தேற்றினான்.

வஞ்ச நெஞ்சங் கொண்ட நட்சத்திரகன், அந்நேரத்தில் அரசனை நோக்கி, "உயர் மதியாளரே! சிறந்த நிலைமையிலிருந்த நீர் இவ்வாறு மனைவி மகனோடு துன்புறக் கண்டு என் மனம் கனல்கின்றது. அதனால், உமக்கொரு நன்னெறியையெடுத் தியம்ப யான் விரும்புகின்றேன்; உற்றுக் கேட்பீராக. நீர் முன்பு விசுவாமித்திர முனிவருக்கு வழங்கிய நாட்டைக் கொடுத்த தில்லை என்று இப்பொழுது சொல்லி விடின், உடனே அந்நாட்டைப் பெற்று முன்போல் இனிதாக வாழ்ந்திருக்க லாமே. இஃது ஒன்றே இன்பத்தை நுகர்ந்திருக்கத் தக்க வழி யாகும். இதனால் உமக்கென்ன குறைவு நேரப் போகின்றது," என்றுரைக்க, அதற்கு வேந்தன், "மிக எளியதும் உடலை மாத்திரம் வருத்தக் கூடியதுமாய இத்துன்பத்திற் கஞ்சி ஒப்பற்ற அறமாயதும், துறக்கத்தை யளிக்க வல்லதும், நல்லிசையை நாட்டக் கூடியதுமாய உண்மையைத் துறக்க லாமோ? எனக்கு மனச் சோர்வு உண்டாயினும், என்னைத் தேற்றி நல்வழியிற் செலுத்தாமல் நீர் இப்படிப் பொய் சொல்லக் கற்பிக்கின்றீரே. இஃது உமக்குத் தகுமா? அறமாமா," என்று பதிலுரைத்து, அந்த முனி மாணவன் வெட்க மடையச் செய்தான். சற்று நேரம் கழிந்ததும் அவ்வைவரும் அவ்விடத்தினின்று நீங்கினர்; சிறிது தூரம் நடந்து சென்று சோண மா நதியை யடைந்தனர்; அன்றிரவு முழுவதும் அவ்வாற்றங் கரையில் தங்கித் தக்கதோர் இடத்திற் படுத்தனர்.

அடுத்த நாள் வைகறையில் எழுந்து அரிச்சந்திரன், காலக் கடன்களை முடித்தான். நட்சத்திரகன் உணவு வேண்டுமென்று அரசனிடம் அறிவித்தான். உடனே மன்னன், அவ்வாற்றங் கரையூடு சென்று அங்கு ஓர் இடத்தில் ஆற்றுணுக் கையிற் கொண்டு உட்கார்ந்திருந்த ஓர் அந்தணனிடம் யாசித்துச் சிறிதளவு சோற்றைப் பெற்றுத் திரும்பினன்; அதை நட்சத்திரகனுக்கு உண்பித்து உவப்பித்தான். சந்திரமதி லோகிதாசன் முதலியோர் ஆற்று நீரைப் பருகிப் பசியைத் தணித்தனர். அவர் அனைவரும் அவ்வாற்றில் இறங்கி நடந்து மறு கரை யேறினர்; அதை விட்டுச் சற்றுத் தூரம் போனதும் சிறியதொரு காடு குறுக்கிட்டது. அதனுள் அவர் ஐவரும் புகுந்தனர்.

வேந்தனுக்கு இடுக்கண் விளைவிக்கக் கோமுனிவன் விரும்பிக் கனற் கடவுளை யழைத்தனுப்பி அக்காட்டை நெருப்புப்பற்றி யெரியச் செய்தான். அந்தக் கானகத்தினுடைய நாலாப் பக்கங்களிலும் தீப் பிடித்து மிக விரைவில் எரிந்து, அரிச்சந்திரன் சத்தியகீர்த்தி முதலியோரைச் சூழ்ந்தது. மன்னன் மிக்க மனக் கலக்க மடைந்து திகைத்தான். அக்காலைச் சந்திரமதி, தன் ஆளனைப் பார்த்து, “இறைவரே! நீர் அஞ்ச வேண்டாம். இத்தீயில் உமக்கு முன்பாக யான் நடக்கின்றேன். என்னுடைய முன்றானையைப் பிடித்து நீர் வாரும். லோகிதாசன் அமைச்சன் முதலியோர் உம்மைப் பின்பற்றி வரச் செய்யும்,” என்று கூறித் தீக்குள் நுழைந்தாள். அரசன் அமைச்சன் முதலியோர் அக்கற்புடை மகளைப் பின்பற்றிச் சென்றனர். அந்நெருப்புக் கற்பில் மிக்க வடமீன் அனைய சந்திரமதியைக் கண்டு அஞ்சியது; யாதொரு துன்பமும் விளைத்த லின்றிக் குளிர்ந்திருந்தது; வழி விட்டு விலகிற்று. அரசன் முதல் ஐவரும் அத்தீயைக் கடந்து அப்புறம் சென்றனர். மன்னனும்

மந்திரத் தலைவனும் சந்திரமதியின் அருந் தன்மையை வியந்து பேசிக் களித்தனர். மாசிலா மனத்தினர் வைகும் காசியம் பதியை நாடி அவர் அனைவரும் புறப்பட்டனர்.

நெடுந்தூரம் நடந்து களைத்து யமுனை யாற்றங் கரையைச் சேர்ந்தனர் அவர். அரசமாதவன் அவ்விடத்தை யடைந்து, அரச னெதிரில் தோன்றினன். வணங்கி அவனை நோக்கி அயோத்திக் கிறைவன், "முனிவர் பெரும! நீவிர் இன்னணம் விரைந்து வருதற்கு யாது குறை நேர்ந்தது? அமைச்சர் பணியாளர் முதலியோருள் யாவரேனும் உம் முடைய பேச்சை மறுத்தனரா," என்று வினவ, முனிவன், "இறைவ! நீ இவ்வாறு மனைவி மைந்தருடன் எல்லாச் செல்வங்களையும் விட்டு வேறு நாட்டை நாடி நடந்து, அலைந்து வருந்துதலைக் குறித்து என் மனம் பெருந்துன்பத்தை யடைகின்றது. எனக்குத் தந்த நாடு நகரங்களையும், மற்றைச் செல்வங்க ளனைத்தையும் நீயே யடைந்து இன்பத்துடன் வாழ்ந்திரு," என்றுரைக்க, அயோத்திக் கோமான், "நரகத்திடைக் கிடந்து வெவ்விய துயரத்தை யடையினும் யான் வழங்கியதைத் திரும்ப வாங்கேன்," என்று கோசிகனுரையைத் தடுத்துக் கூறினன்.

கோமுனிவன், முகம் சுளிக்க, மனம் சலிக்க அப்புறமகன்று, நட்சத்திரகனை அருகழைத்து, "இவ்வேந்தன் மிக்க மனவுறுதி படைத்தவனாய் இருக்கின்றானே. இவன் தன்மையை யுணராமல் இவனைப் பொய்ய னாக்குவேன் என்று யான் வாக்குறுதி வழங்கினேனே. என் தவ வன்மை இவனுடைய மன வன்மைக் கெதிரில் யாது செய்யப் போகின்றது? இன்னமும் பரிசோதித்துப் பார்க்கலாம். இன்னல் பல விளைவித்து இவனை மிக வருத்தி ஒரு பொய்யேனும் புகலச் செய். இவனிடம் சிறிதும் மன மிரக்கங் கொள்ளாதே. அடாத வழிகளில் அலைத்து இவனுடைய

மன வுறுதியைக் கலைத்திடு. ஏற்ற காலத்திற் பொய் பேசச் செய்,'' என்று அவனை நோக்கிச் சொல்லி, அவ்விடத்தி னின்று ஒழிந்தான்.

விரகில் வல்ல விசுவாமித்திர முனிவனால் யமுனை யாற் றில் இருகரையும் புரள வெள்ளப் பெருக் குண்டாயிற்று. அரிச்சந்திரன் முதலிய ஐவரும் நெடுநேரம் அவ்வாற்றங் கரையில் தங்கி யிருந்து, நீர் வற்றியதும் ஆற்றில் இறங்கி, அதைக் கடந்து மறுகரையைச் சேர்ந்தனர்; அவணின்று நீங்கி மெல்லப் போய் வாரணாசியை யடைந்து, களிப்புடன் ஓர் அறச்சாலையில் தங்கினர். அரிச்சந்திரன், அக்காசி நகரத்தினுள் திரிந்து சில உணவுப் பொருள்களைத் தேடிக் கொண்டு வரலானான். அவற்றைச் சந்திரமதி செவ்வனே சமைத்து நட்சத்திரகன் முதலியோர்க்கு இட்டு வந்தாள். நாட்கள் சில கழிந்தன. நட்சத்திரகன் பொருள் தருமாறு அரசனைப் பல்வகையினும் வருத்தினான். ஒரு நாள் அச் சிறுவன், “கோமுனிவருக்கு நீர் செலுத்த வேண்டிய பொருளை இன்னே கொடுத்தல் வேண்டும். இன்றேல், யாதொன்றையும் செய்ய உம்மை விடேன்,'' என்று அரசனைப் பார்த்துக் கூறி, அவனுடைய கால்களைக் கயிற்றால் இறுக்கிக் கட்டத் தொடங்கினான்.

முனிவனுக்குக் கொடுக்க வேண்டிய பொருளைத் தேடு தற் குரிய வழியைப் பற்றி மன்னன் ஆராய்ந்து ஏங்கி யிருந்தான். அவனுடைய ஏக்கத்தை யுணர்ந்த மதிதயன் மகள், பணிவுடன் அவனை நோக்கி, “என் அருமை நாய கரே! அடியாள் இருக்கும் பொழுது நீர் ஏன் இவ்வாறு கவலைக் குள்ளாய் ஏங்கி யிருக்க வேண்டும்? நீர் எத்தனை நாள் எவ்வாறு வருந்தி யுழைத்துப் பொருள் தேடினும் முனிவனிடம் பட்ட கடனை யடைக்கக் கூடுமோ? குளப்படி

நீரினல் குளம் நிறையுமோ? கப்ப லேறிப் பட்ட கடன் கொட்டை நூற்றுத் தீருமோ? பலவாறு எண்ணி மனத்தைப் புண்ணுக்க வேண்டாம். வெண்ணெய் இருக்க நெய்க்கு அலேவாரு முளரோ? என்னையும் உம்முடைய மைந்தனையும் ஒருவருக்கு ஆட்படுத்திப் பொருளைப் பெற்று முனிவனுக்குக் கொடுத்தலே நேர்மைத் தாகும்,'' என்று சொன்னுள்.

தன் மனைவியின் உரையைக் கேட்டு மன்னன், முன்னிலும் மிக்க மன வருத்த மடைந்தான்; மனைவியை நோக்கி, ''மாதராய்! உன் சொல் தக்க தன்று. உலகத்தில் ஆடவன் அடிமைப் படுதலே நேர்மைத் தாகும். பெண்பாலாரைப் பிறரிடம் அடிமையாக்கல் பெரும் பிழை யன்றோ? யான் எவருக்காயினும் ஆட்பட்டுக் கடனை யடைக்கின்றேன்,'' என்று கூறினன். அன்னகாலை, அரசமாதவனுடைய சூழ்ச்சியால் அந்தணன் ஒருவன், அரிச்சந்திரனிடம் போந்து, தன் வீட்டு வேலைகளைச் செய்தற்கு வேலையாள் ஒருத்தி வேண்டு மெனத் தெரிவித்தான். சந்திரமதியை அந்த அந்தணனுக்கு அடிமையாக்க அரிச்சந்திரன் உடன்பட்டான். அந்தணன், அரசனை நோக்கிச் சந்திரமதியைப் பற்றி, "இவள் யாவள்? இவள் அடிமைக்காக வேண்டும் தொகை என்ன,'' என்று கேட்டான். அதற்கு விடையாக வேந்தன், "இவள் என்னுடைய மனைவி யாவள்; சந்திரமதி என்னும் பெயரை யுடையவள். வல்லான் ஒருவன் யானைமீ திவர்ந்து உயர நோக்கிக் கவண்கல் எறியச் செல்லும் அளவினதாய பொருளை யான் விசுவாமித்திர முனிவனுக்குக் கொடுக்க வேண்டும். அவ்வளவு பொன்னே இவள் அடிமையாதற் குற்ற தொகையாகும்,'' என்ருன்.

அந்தணன் அரசனைப் பார்த்து, "உன் மனைவியுடன் மைந்தனையும் ஆட்படுத்துவையேல் நீ விரும்பிய அளவு பொன்னைத் தருவேன்," என்ன, மன்னனும் அதற்கு ஒத்துக் கொண்டான்; காலகண்டன் என்னும் அந்த அந்தணனிடம் தன் மனைவியையும் மகனையும் ஒப்புவித்தான்; பொன்னைப் பெற்று நட்சத்திரகனிடம் கொடுத்து, "விசுவாமித்திர முனிவனுக்கு யான் தர வேண்டிய பொருள் முழுவதையும் கொடுத்துவிட்டேன். இதைக் கொண்டுபோய் அம்முனிவனிடம் சேர்க்க வேண்டியது உன்னுடைய கடமையாகும்," என்று சொன்னான்.

அரிச்சந்திரனை இன்னமும் வருத்த எண்ணங் கொண்டு அவனை நோக்கி நட்சத்திரகன், "இறைவனே! முனிவருக்குச் சேர வேண்டிய பொருள் முழுவதையும் கொடுக்கப் பெற்றேன். ஆயினும், உம்முடன் இத்தனை நாள் யான் திரிந்து வருந்தியதற்கு யாதும் பொருள் எனக்குக் கொடுப்பதிலையோ," என்று கேட்டான். அவன் கேள்வி தக்கதேயாகு மென்று மன்னன் மனத்திற் கொண்டு அமைச்சனை நோக்கினன். சத்தியகீர்த்தி தன்னை யாருக் காயினும் விலைப் படுத்தி நட்சத்திரகனுக்குப் பொருள் உதவுமாறு அரசனை வேண்டினன். வேந்தன், அமைச்சனுடைய வேண்டுகோளை மறுத்துத் தன்னை எவருக் காயினும் ஆட்படுத்தி நட்சத்திரகனுக்குப் பொன் கொடுக்குமாறு மன்றாடினன். சத்தியகீர்த்தி, காசியம் பதியிற் பல தெருக்க டோறும் அரசனையழைத்துச் சென்று விலை கூறினன்.

கௌசிகனுடைய மாயையால் வீரவாகு என்னும் புலையர் தலைவன் ஒருவன், சத்தியகீர்த்தியை யண்மி, "நீர் விலை கூறும் இந்த ஆடவனை விலை கொடுத்து எக்குலத்தினரேனும் பெறலாமோ?" என்று வினவ, சத்தியகீர்த்தி, "பொன்

கொடுக்கக் கூடியவர் எக்குலத்தின ராயினும் என்ன? விலை கொடுத்துப் பெறலாம்,'' என்று விடை யளிக்க, வீரவாகு, “விலை யாது?'' என்று கேட்க, அமைச்சன், “பதினுயிரம் பொன்னே விலை யாகும்,'' என்று பதிற் கூறினன். அப் பொன்னை அப்பொழுதே கொடுத்து வீரவாகு, மன்னனை யாட்படுத்திக் கொண்டான். சத்தியகீர்த்தி அந்தப் பொருளை நட்சத்திரகனிடம் கொடுத்து, “ஐயரே! உம்முடைய விருப் பத்திற் கிணங்க யாவும் முடிந்தன. இனி, நீர் போக லாமே,'' என்று அவனை நோக்கிப் பகர்ந்து வணங்கினன். நட்சத்திரகனுடைய மனம் மிக வருந்தியது. மன்னனை அங் ஙனம் ஆட்படுத்திப் பொருள் வாங்கிச் செல்ல அவனுக்குச் சிறிதும் மன மிலது. ஆயினும், என் செய்வான்? முனிவ னுடைய மொழிக்கு மாறின்றி நடக்க வேண்டியவனுய் இருப்பதால், மனங் கவன்று மன்னனை விட்டுப் பிரிந்தான்.

வீரவாகு வேந்தனை யழைத் தேகிப் பிணங்கள் சுடுவத னல் எப்பொழுதும் பொறுக்க முடியாத முடை நாற்றம் நிறைந்து வீசுவதும், பிணங்களைப் பற்றிச் செந்தீக் கொழுந்து விட்டு எரிவதனுல் அச்சம் விளைவிக்கக் கூடியதுமாய சுடு காட்டைக் காட்டி, அவனை நோக்கி, “அரிச்சந்திர! இந்த ஈமக்காடு எனக் குரிய தாகும். இவண் சுடும் ஒவ்வொரு பிணத்திற்கும் கோள்ளியாடை ஒரு துண்டமும், காற் பொன்னும், வாய்க் கரிசியும் எனக்குச் சேர வேண்டிய தாகும். அவற்றைப் பெற்றுக் கொள்ளி யாடையையும் காற் பொன்னையும் எனக்குக் கொடுத்து, வாய்க் கரிசியை உன்னு டைய வாழ்க்கைக்காக வைத்துக்கொள். சற்றேனும் இவ் விடத்தை விட்டு அகலுத லின்றி அல்லும் பகலும் இந்த ஈமத்தைக் காத்திரு,'' என்று சொன்னன். அங்ஙனமே நடப்பதாய் அரசன் உடன்பட, வீரவாகு அப்பாற் சென்

ருன். வீரவாகு இட்ட கட்டளைக் கிணங்க அரிச்சந்திரன், அச்சுடலையிற் பிணங்களை யெரித்து எஞ்சி யிருந்த கொள்ளிக் கட்டைகளையும் பாடைக் கட்டைகளையும் கொண்டு கொட்டில் ஒன்றை யமைத்து, அதனிடம் அமர்ந்து சுடுகாட்டைக் காத்திருந்தான். கடவுள் செயல் அவ்வாறிருக்கலும் உண்டோ? மணிமுடி கவித்து மன்னர் பலர் வணங்கச் சிங்கங்கள் சுமந்த செழுமணித் தவிசேறி விற்றிருந்து உலகத்தைக் காத்த இறைவன் அங்ஙனம், பாணமீ தேறிச் சுடுகாட்டைக் காக்க நேர்ந்த கொடுமையை என்னென்று குறிக்கலாம்? ஊழ்வினையினுடைய வலியினும் கௌசிக முனிவனால் சூழ்வினையினுடைய வன்மையே பெரிய தாயிற்றே.

அரசனை விட்டுப் பிரிந்த அமைச்சன், பலவாறு எண்ணி யேங்கி, ஆவைப் பிரிந்த இளங்கன்றைப் போல் மனம்வாடிப் பல இடங்க டோறும் தேடித் திரிந்து சுடலையை யடைந்தான்; ஆண்டு, மன்னனைக் கண்டு மகிழ்ந்தான்; ஆயினும், அரசனுடைய நிலைமையைப் பார்த்துத் துக்கித்து, "உலக முழுவதையும் ஒரு குடைக் கீழிருந்து அறநெறியிற் செங்கோல் செலுத்திய உமக்கு இக்கொடுமை நேர்ந்ததே. உமக்குண்டான கொடிய நிலைமையைக் கண்டும் யான் உயிர் விடாம லிருக்கின்றேனே," என்று வேந்தனை நோக்கிக் கூறி யழு தாற்றினன். அமைச்சனைப் பார்த்து அம்மன்னன், "இணையற்ற அறிவு படைத்த சத்தியகீர்த்தியே! எல்லாம் அறிந்த நீயும் இவ்வாறு வருந்துதல் அழகாமோ? விதி யாரை விட்டது? நம்முடைய செல்வங்களும் திறமையும் அதன் முன் நிற்குமோ? அதன் வன்மையைக் குறித்து யான் விதந்து உனக்குச் சொல்ல வேண்டிய தில்லையே," என்றுரைத்தான். சத்தியகீர்த்தி ஒருவாறு மன மாறி

மன்னனோடு இருந்தான். நாள் சில கழிந்தன. முனிவனுடைய முனிவு முதிர்ந்து வரலாயிற்று.

அந்தணனுக்கு அடிமைப்பட்ட சந்திரமதியும் லோகிதாசனும், அம்மறையவன் மனையை யடைந்து, அவன் இட்ட வேலைகளை அப்போதைக் கப்போது செவ்வையாய்ச் செய்து வந்தனர். சந்திரமதி நாடோறும் பொழுது புலர ஒரு யாமத்திற்கு முன்பே படுக்கையினின்று எழுந்து, வீடு தொழுவம் முதலிய இடங்களை விளக்கல், சாணம் திரட்டுதல், எரு முட்டை தட்டுதல், உலக்கையைக் கையிற் கொண்டு நெற் குத்தல், அரிசி தீட்டுதல் முதலிய வேலைகளைச் செய்து, அந்தணனுடைய இல்லாள் அளித்த கூழை யுண்டு நாட்களைக் கழித்து வந்தாள். ஒவ்வொரு நாளும் லோகிதாசன், விடியற் காலத்தில் எழுந்து, மறையவனிட்ட குற்றேவல்களைச் செய்து, காட்டிற்குப் போய் விறகு சமிதை தருப்பை மாவிலை முதலியவற்றைக் கொணர்ந்து கொடுத்துக் கூழைப் பருகிக் காலத்தைக் கடத்தினன். அவ்விருவரையும் காலகண்டன், இழித் துரைத்தும், அதட்டி வெருட்டியும், லோகிதாசனை யடித்துத் துன்புறுத்தியும் வந்தான்.

அவ்வாறிருந்த காலத்தில் ஒரு நாள் லோகிதாசன், அந்தணச் சிறுர் சிலரோடு காட்டிற்குப் போனுன் ; விறகுகளைச் சேர்த்துச் சுமை கட்டித் தலைமீது அச்சுமையைத் தூக்கித் திரும்பினுன். அப்புதல்வனைக் கொல்லக் கௌசிகன் கருதித் தருப்பைப் புல் செழுத்து வளர்ந்து அடர்ந்து மூடிய ஒரு புதரை அவனுக்கு எதிரில் தோற்றுவித்தான். லோகிதாசன் அப்புதரைக் கண்டு, அதிலிருந்த தருப்பையை அந்தணனுக்குக் கொய்து செல்ல விழைந்தான் ; தன் தலை மீதிருந்த சுமையை யிறக்கிக் கீழே வைத்தான் ; அந்தப் புதரினிடம் விரைந்து போனுன்; தருப்பையைக் கைகளால் பற்றிப்

பறிக்கத் தொடங்கினன். உடனே, கோமுனிவனுடைய சூழ்ச்சியால் அப்புதரினுள் மறைந்திருந்த ஓர் அரவம் சீறி எழுந்து லோகிதாசனுடைய காலில் தீண்டிற்று. அப்பொழுதே லோகிதாசன் அலறித் துடி துடித்து அப்புறம் ஓடினன்; அழுதாற்றி மண்ணில் விழுந்தான்.

அந்நிகழ்ச்சியை ஒரு பழு மரத்தினிட மிருந்து பார்த்திருந்த பார்பனச் சிறுவ ரெல்லாரும், பதை பதைத்து லோகிதாசனிடம் ஓடினர்; அவனைப் பார்த்து, "அப்பா! உனக்கு என்ன நேர்ந்தது? ஏன் அலறி விழுந்தனே," என்று வினவ, லோகிதாசன், "அன்பரே! அதோ, அந்தப் புதரினுள் இருந்த விடநாகம் ஒன்று என்னைத் தீண்டிற்று. அதனுடைய நஞ்சு என் தலைக் கேறியது; மார்பை யடைக்கின்றது; மூச்சுத் தடுமாறுகின்றது," என்று சொல்லி முடிந்த காலையே அவன், அறிவு சோர்ந்து உயிர் துறந்தான். அந்தணச் சிறுவர் அனைவரும் நடுக்க மெய்தினர்; இறந்த இளங்கோவைப் புரட்டிப் பார்த்தனர்; மூச்சுப் பேச்சு இன்மையால் திடுக்கிட்டனர்; "அச்சோ! ஐயகோ! லோகிதாசா! எம்மை விட்டுப் பிரிந்தனையே! திக்கற்ற பிண மானாயோ! உன்னை விட்டு யாம் எப்படி நகரம் செல்வோம்?" என்று சொல்லிக் கண்களில் நீர் வடிய அழுதனர். தன் குல மைந்தன் இறந்தமைக்குத் துக்க மடைந்தவனைப் போலவும், கொடிய சூழ்ச்சியை நிகழ்த்திய விசுவாமித்திரனிடம் அருவருப்புக் கொண்டவனைப் போலவும் காய்கதிர்ச் செல்வன் மேற்கடலில் ஆழ்ந்தான். இராப் பொழுதிற் காட்டகத்திருக்க அஞ்சி மறையவர் மக்கள் அனைவரும், லோகிதாசனை விட்டுக் காசி நகரத்தை நாடிப் போயினர்.

காடேகிய தன் மைந்தன் பொழுது பட்டும் வீட்டுக்குத் திரும்பி வாராமையைப் பற்றிச் சந்திரமதி, மனக் கலக்க

மடைந்து ஏங்கினள் ; தெருவிற் சென்று பார்த்தாள் ; தன் மகனோடு சென்ற சிறுவர் அனைவரும், அவனொழிய வரக் கண்டாள்; அப்பிள்ளைகளுக் கருகிற் சென்று தன் மைந்தன் அவருடன் வாராமல் நின்றதேன் என்பதைக் கேட்டாள். நடுக் கத்துடன் அவ்விளைஞர் எல்லாரும், பாம்பு கடிக்க லோகி தாசன் இறந்தான் என்பதைத் தெரிவித்தனர். அதைக் கேட் டுச் சந்திரமதி, "ஆ, மகனே! அப்பா மைந்தனே! என் அருமைக் குழந்தையே! நீ எப்படி இறந்தனை? பெற்ற வயிறு தீப்பற்றி யெரிகின்றதடா பிள்ளையே," என்று பல வாறு வாய்விட் டாற்றித் துடித்து, அடியற்ற நெடு மரத்தைப் போலப் படியில் விழுந்தாள் ; விதியை நொந்து அழுதாள் ; மண்ணிற் புரண்டு புலம்பினள் ; கதறிப் பலமுறை யெழுந்து கீழே விழுந்தாள் ; கைகளைத் தலையில் மோதி யடித்து அழு தாள் ; ஆலிலை யன்ன தன் வயிற்றைப் பிசைந்து அரற்றி னள் ; மூர்ச்சை யுற்றாள்.

சிறிது நேரம் கழிய அம்மங்கை, ஒருவாறு தெளி வடைந்தாள்; தன் மகனோடு காட்டிற்குப் போன இளைஞர் அழுகையுடன் நின்றிருக்கக் கண்டாள்; மனம் பதறி அவரை நோக்கி, "மக்காள்! என் மைந்தன் எந்த இடத்தில் இறந்து கிடக்கின்றான்," என்று கேட்டாள். அச்சிறுவர், "யாம் வந்த இந்த வழியூடு சென்று காட்டில் நுழைந்து சிறிது தூரம் போனால் பெரிய ஆலமரம் ஒன்று நிற்றலைக் காண்பாய். அம்மரத்திற் கயலிற் சற்று வடக்கினிற் குசை படர்ந்த புதர் ஒன்றிருக்கின்றது. அதன் தென்பாலில் உன் மகன் இறந்து கிடக்கின்றான், அம்மா," என்று சொல்லிக் கண்ணீரும் கம் பலையுமாகத் தம் வீடுகளை நாடிச் சென்றனர்.

உயிரு முடம்புஞ் சோரச் சிறிது நேரம் அழுது வருந் திய பின்னர் சந்திரமதி, "இனி எனக்கு வாழ்வு எது,"

என்று உட்கொண்டு அவ்விடத்தினின்று எழுந்து சென்றாள்; மறையவன் மனையைச் சேர்ந்து தான் செய்தற்கிருந்த குற்றேவல்கள் எல்லாவற்றையும் குறைவறச் செய்து முடித்துக், காலகண்டனிடம் போய் வணங்கி, அவனைப் பார்த்துப் பணிவுடன், "பெரியீர்! காட்டிற்குச் சென்ற என் மைந்தன் அரவு கடிக்க இறந்தானும்; அவனை யெடுத்து அடக்கஞ் செய்து வரத் தம்முடைய கட்டளையை யெதிர் பார்த்து ஏழை நிற்கின்றேன்," என்றுரைக்க, அந்தணன் சாலச் சினங்கொண்டான்; பற்களை நெற நெற வெனக் கடித்தான்; புருவம் நெற்றியி லேறக் கண்களை யுருட்டிச் சந்திரமதியை நோக்கி, "அடி பாவி! என் வாழ்வைக் கெடுக்க வந்த வீணி! உன் மகன் இறந்ததால் உனக் கென்ன போயிற்று? யாது குறை யுண்டாயது? என்னுடைய பொருளுக்கு அன்றோ அழிவு நேர்ந்தது? அடிமைக்கார பையலுக்கு அன்னையும் ஒருத்தி யுளளோ? என் வீட்டை விட்டு நீ அப்புறம் போகக் கூடாது. என் கட்டளையை மீறிச் செல்வா யாயின் உன் கால்களைத் துணிப்பேன்," என்று கடுஞ் சொற்கள் பலவற்றைப் பகர்ந்து அதட்டினன்; அச்சுறுத்தினன்; "ஐயோ! என் பொருள் போயிற்றே! போயிற்றே!" என்று கூறி வயிற்றில் அடித்துக் கொண்டு அங்கு மிங்கும் திரிந்தான்.

காலகண்டனுடைய செயலைக் கண்டு சந்திரமதி முன்னிலும் மிக்க துயருற்றாள்; நடுக்க மெய்தினாள். என்ன செய்வாள், பாவம்! எவரை நோவாள்? யாரை உதவிக் கழைப்பாள்? கடவுளே துணை யெனக் கொண்டு அம் மன்னி, உயிர் உக்க, உடல் நடுங்க, மற்றும் அந்தணனை வணங்கி, அவனை நோக்கி வணக்கத்துடன், "ஐயரே! என் மகன் தமக்கு அடிமையே யாயினும், அவன் இறந்து கிடக்கின்றான் எனில், பெற்ற வயிறு எவ்வா றிருக்கும்?

அருள் கூர்ந்து கட்டளை யிடுவீ ராயின், யான் விரைந்தோடி அவனை யெடுத்து அடக்கஞ் செய்து, பொழுது விடியு முன் தம்முடைய வீட்டை யடைந்து முட்டின்றி வேலைக ளெல்லாவற்றையும் செய்து முடிக்கின்றேன்,'' என்று கூறி யிறைஞ்சினள். "அப்படி விரைவில் வருவதாயின் செல்லுக,'' என்று மறையவன் மொழிந்தான்.

மறையவன் வீட்டை விட்டு அப்பொழுதே வெளிக் கிளம்பினள் சந்திரமதி; பேரிருள் நிறைந்த அவ்விராப் பொழுதிற் சிறிதும் அச்ச மின்றிக் கடிது நடந்து காசியம்பதி யை நீத்துக் கானகத்திற் புகுந்தாள்; அந்தணச் சிறுவர் உரைத்த வழியைப் பற்றி அடிதோறும் கண்ணீர் பெருகச் செடிதோறும் மகனைத் தேடிச் சென்றாள். அரசமாதவன் அக்காலைப், பேய் பூதங்களுடன் நாய் நரிகளையும் ஏவி அவ ளைத் துன்புறுத்தச் செய்தான். அவற்றை எல்லாம் அவள் பொருட் படுத்தாமல் ஓடிச் சிறுவர் குறிப்பிட்ட இடத்தை யணுகினள்; நரிகளுடன் கழுகுகள் சூழ்ந்து நிரையாய் நிறைந்திருக்க, அவைகளுக் கிடையில் தன் மைந்தன் கிடக்கக் கண்டாள்; அக்கழுகுகளும் நரிகளும் அஞ்சி அப்புறம் ஓட உடல் பதைக்கக் கதறி, மைந்தனிடம் கொண்டிருந்த அன்பு ஆவியைக் கொள்ளை கொள்ளப் பதறி யழுது, இறந்த மகனை இரு கைகளாலும் வாரி யெடுத்து, முத்தமிட்டு உச்சி மோந்து, மார்புற வணைத்து மண்ணில் விழுந்தாள்; உட் கார்ந்து மகனை மடிமீது வைத்து, "அப்பா! லோகிதாசா! இனி எப்பொழுது உன்னை உயிருடன் காண்பே னடா! அன்னையை விட்டு நீ எப்படி ஆவியை விட்டாய்? இஃது உன் அறிவிற்கு அடுக்குமா அப்பா? எப்பொழுது உன்னுடன் கொஞ்சிக் குலாவிப் பேசி மகிழப் போகிறேன்? எழுந்து வாயைத் திறந்து என்னுடன் பேசுவாய்க் கண்மணி,''

என்று சொல்லி யழுது மூர்ச்சித்துத் தரையிற் சாய்ந்தாள்.

சற்று நேரம் செல்ல மூர்ச்சையினின்று ஒருவாறு தெளிந்து அம்மாது, தன் மடிமீ திருந்த மைந்தனைப் பார்த்து மற்றும் துக்கித்து, "ஆ மகனே! என்னைத் திக்கற்றவளாகச் செய்து நீ எங்குச் சென்றாய்? நான் இவ்வாறு கதறிப் புலம்புகின்றேனே! உன் மன மிரங்க வில்லையா? 'அன்னையே அழ வேண்டாம்' என்று நீ ஒரு பேச்சேனும் சொல்லப் படாதா? உன் வீரம் எங்கு ஒளித்தது? செப்புதற் கரிய செம்மலே! ஒப்பிட லற்ற நின் மழலைச் சொற்களைக் கேட்டு என்று யான் மகிழப் போகிறேன்? அப்பா மகனே! பனியி னால் உன் உடம்பு நனைந்தும் வெயிலால் உலர்ந்தும் நீ இற வாம விருந்து கொடிய கண்களை யுடைய பாம்பு கடிக்க உயிர் துறந்த தேனோ? இஃது என்ன அநியாயமோ! யார் இழைத்த தீவினையோ! யான் அறியே னடா மைந்தனே! தீய விட நாகத்தினுடைய நஞ்சால் நீ எவ்வாறு துடித்து மண்ணிற் புரண்டு, யாரை நொந்து உயிர் விட்டனையோ? இனி எவரை நம்பி யான் உயிர் வைத் திருப்பேன்? என் தலைவரும் யானும் இனிமேல் உயிருட னிருத்தல் வீணே யாகும். விசுவாமித் திர முனிவன் யாசிக்க வளப்பம் பொருந்திய நாடு முழுவதை யும் கொடுத்தவரும், கூரிய வேலைக் கையிற் கொண்டவரு மாகிய அரசர், அருமையாகப் பெற்றுச் சிறப்புடன் வளர்த்த புதல்வனே! மங்கல ஒலி நிறைந்த நகரத்தின்கண் அரண் மனையில் இறக்காமல் இக்காட் டகத்திற் செடிகளிடம் கழுகு களுடைய சிறையோசைக் கிடையில் நீ இறந்து கிடக்கின் றனையே! கடவுள் இப்படியும் விதிப்பாரா? வானகத்தி லிருந்து பொழிகின்ற மழைத் தாரைபோலக் கண்ணீர் ஒழுக வும், என் உடம்பு முழுவதும் செந்நீர் பெருக் கெடுத்துச் சொரியவும், உயிர் வன்மை யின்றி நெருப்பி லிட்ட தளிரைப்

போல் வாடவும் யான் தனியே இங்கு அழு தாற்றுகின்றேன் என்பதைக் கருதாமல் நீ விழுந்து கிடக்கின்றனையே; இதுதானே உன் நீதி? அறத்தைத் தழுவிச் செங்கோல் செலுத்துகின்றவரும், அறிவிலும் ஆற்றலிலும் மிக்கவரும், பகைவரையடர்த்து வெற்றி கொள்ளத் தக்க வீரத்திற் சிறந்தவரும், மிக்க சினத்தையுடைய மதயானைமீது ஏறிச் செல்கின்றவருமாய உன் தந்தை, நம்மிருவரையும் மீட்டுச் செல்ல வருங் காலத்தில் என்னை நோக்கி, 'என் அருமைப் புதல்வன் எங்கே இருக்கின்றான்' என்று கேட்டால், யான் என்ன விடை கூறுவேன்? அந்தோ! பொல்லாத பாம்பினால் இறந்த மைந்த! நீர் நிறைந்த குளங்கள் நெருங்கியுள்ள கோசலை நாடு முழுவதையும் உன் தந்தையார் தவ முனிவனுக்குக் கொடுத்திருப்பினும், உலகத்தை யாளும் தொடர்பு உனக் கில்லாமற் போக வில்லையே. என் தந்தை இறந்தால் வேளாளர்கள் ஏர்களை யோட்டும் ஓசை ஓயாமல் பெற்றுள்ள கன்னோசி நாட்டை நீயே யன்றோ ஆளுதற் குரியவனுவாய்? யானும் என் நாயகரும் அரண்மனையி லிருந்து, நன்னூல் உணர்ந்த பெரியார் உரைத்த முப்பத்திரண்டு அறங்களையும் குறைவின்றிச் செய்தோமே; எளியோரைச் சிறிதும் இகழ்ந்திலோமே; குடிகளிடம் ஆறில் ஒரு பங்குக்குமேல் இறை வாங்கியறியோமே. பொய் யுரைத்திலோமே. யாசித்தவர்க்கு இல்லை யென்று எப்பொழுதும் சொல் லிலோமே. துறந்தார் சொன்ன சொல்லைக் கடந்து எதையும் செய்திலோமே. யாவர்க்கும் நன்மையே செய்து வந்தோமே. ஆ கடவுளே! எமக்கு இக்கொடுமை எப்படி வந்தது? மறை நீதிக் கிணங்க அரசாண்ட பிறர் நாட்டை யழித்து வந்த சேனைகளை வைத்து ஆண்டிலோம். பெரியார் விதித்துள்ள நீதிகளெல்லாவற்றையும் உணராத அமைச்சரை அரண்மனையில் வைத்

திலோம். கொடிய பாவச் செயல்களை மேற்கொண்ட குடி களை எம்முடைய நாட்டிற் குடி யிருக்கச் செய்திலோம். ஓ தெய்வமே! எமக்கு இத்தீங்கு நேர்ந்த தேன்? ஆ புதல் வனே! மழையையும் ஐந்தருவையும் நிகர்த்த உன்னுடைய கைகளும், நாள் மல ரன்ன சிரிப்புடன் கூடிய உன் முகமும், தலையிலுள்ள அழகிய உன் குடுமியும் மண்மேல் சோர்ந்து கிடக்கக் கண்டு பாவியாகிய யான் இன்னும் சாகாமல் இருக் கின்றேனே. என் மைந்தனே! நீ இறந்ததால் உண்டான துன்பத்தை இனி என் மனமும் தாங்காது. உன்னை வருந்திப் பெற்ற என் வயிறும் தாங்காது. பாவாதிகட்கு இடர் விளை வித்தலைப்போல் உளத்தில் அறத்தைக் கருதாத கௌசிக முனிவனுக்கு யாம் குறை செய்ததாக நினைத்து மைந்தனைக் கடித்த பொல்லாத பாம்பே! உனக்கு யாம் என்ன தீங் கிழைத்தோம்? என் நாயகருடைய மணி மார்பிலேறி விளை யாடும் குழந்தாய்! முன்பு, முனிவனுடைய மாயையால் மூண் டெழுந்த நெருப்பில் எமக்கு முன்னே போய் விழத் துணிந்தனையே. இப்பொழுது செந்நாய்கள் கூடி நெருங்கி யுள்ள இந்தக் காட்டி லிருந்து மனம் தெளியாமல் அழுது வருந்துகின்ற என்னைப் பார்த்துத், 'தாயே! அழவேண்டாம்' என்று சொல்லாமல் நீ கிடத்தல், உன்னுடைய புத்திக்கூர் மைக்குத் தக்க தாகுமோ? கடவுள் அருளால் தோன்றிய கண்மணியே! வாளைப்போன்ற கூரிய பற்களையும், கொடிய நஞ்சையு முடைய அரவத்தால் மாண்ட உன்னுடன் யான் இறந்திலேன் என்பதைக் கருதியோ என்னுடன் உறவு கொள்ளுவதால் பயனில்லை என்று மனங் கொண்டு கொவ் வைக் கனியைப் போன்ற உன் சிவந்த வாயைத் திறந்து பேசாம லிருக்கின்றாய்? என் முகத்திலும் விழியாம லிருக்கின் றாய்? வடி யேறிய வெற்றியைத் தாத் தக்க நீண்ட வேலை

மலர்போன்ற கையில் தாங்கிய மகனோடு இறவாத கொடியவ ளாகிய என் முகத்தில் கௌசிகனுக்கு நாட்டை வழங்கிய அண்ணல் விழிக்க மாட்டார். ஆதலால், ஓ யமனே! இடி யேற்றினால் பட்டுப்போன நெடுமரத்தைப்போல் இம்மண்ணி லிருந்து யான் ஏன் வருந்த வேண்டும்? இஃது உனக்கு அழகா யிருக்கின்றதா? மகனோடு என்னையும் கொல்லாமல் நீ யிருத்தல் மிக்க அநியாய மாகும்,'' என்று வாய்விட்டுப் பல வாறு கதறி நெடும்பொழுது புலம்பி வருந்தினாள்.

ஒருவாறு மனத் தெளிவடைந்து அந்நங்கை, "மைந்த னோடு யானும் இறந்து படுவே னாயின், அவனை யெடுத்து அடக்கஞ் செய்ய எவரும் இலரே. என் செய்வேன்? அடிமைகொண்ட அந்தணன் சால வன்கணன். அவனு டைய மனைவி, அவனைவிட மாபாவி. பொழுது விடியு முன் வீட்டிற்குச் செல்லே னாயின், அவ்விருவரும் மிக்க சீற்றங் கொள்வரே,'' என்று கூறி, மடிந்த மகனைத் தூக்கித் தோண் மீதிட்டு எழுந்தாள்; பேய்களும் அயர்ந்து தூங்கத் தக்க அந்நள் ளிருளிற் சுடலையைத் தேடிப் போனாள். அந்த அர சிக்கு இடர் உண்டாக்கக் கருதிக் கோமுனிவன், பேய் பூதங்களுடன் காட்டு மிருகங்கள் பலவற்றைத் தூண்டி விட் டான். அவனுடைய விரகால் செந்நாய்கள் பல, சந்திரமதி யைச் சூழ்ந்து, அவள் தூக்கிச் சென்ற பிள்ளையைப் பற்றி யிழுத்தன; பல கழுகுகள், அம்மைந்தனைச் சிறகுகளால் மோதி யடித்து வாய்களால் கௌவின; 'பிள்ளையைக் கீழே போடு, போடு' என்று கூவிப் பேய்கள் அவளைத் தொடர்ந் தன; கொடிய பூதங்கள், 'நில், நில், போகாதே; மைந்த னோடு உன்னைத் தின்ன வேண்டும்' என்று கத்தின; பல நரிகள் தாவிப் பாய்ந்து அப்புதல்வனைப் பறிக்க முயன்றன. அம்மங்கை சென்ற வழிக் கருகில் இருந்த முட் செடி

களும் கொடிகளும், அவளுடைய நீண்ட கூந்தலையும் துகிலையும் தொட் டிழுத்தன.

மனத் துணிவுடன் சந்திரமதி, தள்ளாடி மெல்ல நடந்து, ஈடுபாடு அத்தனையும் பட்டு நீள் முள் இடுகாடு நீந்தி நெடுஞ் சுடுகாட்டை யுற்றாள். பிணங்கள் வெந்து தலைகள் வெடிக்க உண்டான அரவத்தாலும், பேய்கள் கூத்தாடிய தால் எழுந்த அமலையாலும், முடை நாற்றம் இடைவிடாமல் வீசியதாலும் தான் அடைந்த இடம் சுடுகாடே எனத் தெரிந்த அம்மாது, தன் மகனை ஓர் இடத்தில் இறக்கி வைத்துக் கடவுள் திருவருளையே துணையாகக் கொண்டு, விரைவிற் பலவிடங்களிற் சென்று தேடி, எரிந்து குறைந்திருந்த கொள்ளிக் கட்டைகளைக் கொணர்ந்து சேர்த்து அடுக்கி, அவ்வடுக்கின்மீது தன் மைந்தனை மன மின்றிப் படுக்க வைத்துத் தீயிட்டாள். அந்நெருப்பு மூண்டு எரிந்தபோது, அந்த ஈமத்தைப் பரணையின் மீதிருந்து காத்திருந்த அரிச்சந்திரன் அதைக் கண்டான். அரவு கடித்ததால் அரசிளங்கோ இறந்தான் என்பதை அறியாமல் அவ்விறைவன், மிக வெகுண்டான்; “யாரோ இந்த இராப் பொழுதில் எனக்குத் தெரிவிக்காமல் பிணத்தைக் கொண்டுவந்து சுடுகின்றனர். அவரை யறிந்து வருவேன்” என்று கூறிப் பரணையினின்று இறங்கி விரைந்தோடிச் சந்திரமதியை யண்மி, அவளை நோக்கிச் சீற்றத்துடன், “எடி மூடி! தா வுரிய பொருளை எனக்குத் தாாமலே நீ தனியே இப்பனி யிருளிற் சவங் கொணர்ந்து திருட்டுத் தனமாய்ச் சுடுதல் உனக்கு அடைவோ” என்று சொல்லிக், கால் வீசிக் கான்முளையை யெடுத் தெறிந்தான்.

அச்செயலைப் பார்த்துச் சந்திரமதி மிக்க நடுக்க மெய்தினாள்; கதறிக் கீழே விழுந் தெழுந்தாள்; தன் முன் நின்ற

ஆடவனை நோக்கி மொழி குழற, "ஐயா! யான் திக்கற்ற ஒருத்தி யாவேன். உனக்குப் பொருள் தரும் இவ்வூர் வழக்கத்தை யான் அறியேன். அஃதன்றியும், உனக்கு வழங்க என்னிடம் பொருள் யாதும் இலது. பொருளும் சுற்றமும் உண்டா யிருப்பின், மாண்ட என் மைந்தனைத் தனியே யான் தோள்மீது தூக்கி இந்நடு இரவில் ஈண்டு வருவேனோ? தீப்பற்றி யெரிந்து மிகுந்த கொள்ளிக் கட்டைகளை யடுக்கி இம்மகனைச் சுடுவேனோ? பெரியோய்! அருள் கூர்ந்து இப்புதல்வனைச் சுடக் கட்டளை யிடுவாய்," என்று இறைஞ்சினாள். மிக்க இருள் சூழ்ந் திருந்தமையால் அரிச்சந்திரன், அங்ஙனம் இறைஞ்சியவள் தன் பன்னி என்று அறியாமல், அவளை நோக்கி, "அம்மையே! நின் சொல் உண்மையா யிருக்கலாம். ஆயினும், யான் ஒரு புலையற்கு அடிமைப்பட்டவ னாவேன். உனக்கு யாதோர் உதவியையும் செய்தற் கிலேன். ஈண்டுப் பிணம் சுட வருகின்றவர் கொடுக்கும் காற் பொன்னும் கொள்ளித் துண்டமும் என் தலைவனுக்குச் சேரத் தக்கன; வாய்க்கரிசி ஒன்றே எனக்குரிய தாகும். ஆதலால், என் தலைவனுக்குச் சேர வேண்டியவற்றை மாத்திரம் கொடுத்துவிட்டு உன் மகனைத் தடையின்றிச் சுடுவாய்," என்று தெரிவித்தான்.

அன்னவனைப் பார்த்துச் சந்திரமதி, "அருளுடையீர்! சுடுவார் இன்மையால் பெண்பாலாய யான், துஞ்சிய மைந்தனைத் தோள்மீது சுமந்து போந்து இந்த இடு காட்டிற் பஞ்சி படும் பாடு படுகின்றேனே. இப்பாவியேற்குப் பணமேது? கொள்ளி முறிப் பாதிதான் ஏது? அருவினையேன் இங்ஙனம் வருந்துதலைப் பார்த்து, நீர் நெஞ்சு தளர்ந்து, என் மகனை யெரிக்க இசைவீர்," என்று இரந்தாள். உடனே அரிச்சந்திரன் அவளை உற்று நோக்கினான்; அவளுடைய

கழுத்தில் இருந்த செம்பொற்றாலி மின்னக் கண்டான்; அவளை நோக்கி, "மாதே, நீ மிக நல்லவள்; சால வல்லவள். பெண்களெல்லாரினும் நீயே சூழ்ச்சிகளில் மிகக் கை தேர்ந்தவள். செம்பொன்னாலாகிய மங்கல நாண் கழுத்திலிருக்க உன்னிடம் பொருள் யாதும் இல்லை என்று நீ சொல்லுதல் சற்றும் ஏலாததாகும். எனக்குரிய பணத்திற்காக அதனை யீந்து நின் குழந்தையை யெரித்துச் செல்வாய்," என்று பகர்ந்தான்.

வலையிற் பட்டு வேடருடைய அம்புகளால் தாக்குண்ட மானைப் போலச் சந்திரமதி பதை பதைத்துப் பதறிக் கீழே விழுந்தாள்; கொல்லனுடைய உலையி லிட்ட மெழுகையொப்ப உளம் உருகி யழுதாள்; "ஐயோ, கடவுளே! தூய வீரனான அரிச்சந்திர மன்னனுக் கன்றி வேறு எவருக்கும் காணப்படாத என் திருமங்கிலியம், இன்று ஒரு புலையனுக்குத் தென்பட்டதென்னே? கடவுளுடைய மொழியும் பொய்த்ததே! எல்லாம் வல்ல இறைவனினும் விசுவாமித்திர முனிவனே சாலச் சிறந்தவனாய் இருக்கின்றானே," என்று சொல்லிப் புலம்பினாள். அவற்றைக் கேட்டு மன்னனுடைய மனம் திடுக்கிட்டது. தன் அருந்தவப் புதல்வனே இறந்து பட்டான் என்று உணர்ந்த அவன், மெய்ம்மறந்து கையிற் பிடித்திருந்த தடியை நழுவ விட்டான்; பொத்தெனப் பூமியில் விழுந்தான்; பெருமூச் செறிந்தான்; "அப்பா லோகிதாசா! நீ எப்படி மடிந்தனை? என் குலத்தை விளக்க வந்த நற்குணக் குன்றே! என்னை வெறுத்து உயிர் விட்டனையோ? எவ்வாறு மனம் நொந்து இறந்தனையோ! என்னைப் பயனற்றவனாகச் செய்தனையே," என்று பலவாறு கூறி, நெடு நேரம் அழுது வருந்தினான்; தலையை நிலத்தில் மோதினான்; நெட்டுயிர்ப்போடுற்ற பிணமானான்.

தன் கணவனென்று அறிந்து அன்னேனைத் தேற்றினாள் சந்திரமதி. சிறிது மனத் தெளிவடைந்ததும் மைந்தன் மடிந்த வகையை அவனிடம் தெரிவித்து, பணிந்து அவனைப் பார்த்துச் சந்திரமதி, "என் அருமைத் தலைவரே! எல்லாச் செல்வங்களைத் துறந்தும் நம் மகனாகிய செல்வத்தை மிக மதித்திருந்தோம். இப்பொழுது, 'சேயோடு தான் பெற்ற செல்வம் போம்' என்னும் நிலைமையை யடைந்தோம். நாம் என்ன செய்யலாம்? எல்லாம் இறைவன் திருவருளே. தாம் இவ்வாறு அழுது வருந்துவதால் யாது பயன் உண்டாகக் கூடும்? எஃது எவ்வாறாயினும் ஆகுக. தம்முடைய நிலைமைக்குத் தவறு நேராமல் அற நெறியைக் கடைப்பிடித்து நடப்பீராயின், அஃது ஒன்றே இம்மை மறுமைகளில் நமக்குத் தோன்றாத் துணையா யிருந்து பேரின்பத்தை யளிக்கும்," என்று சொல்ல, அரசன், "அறிவுடை அணங்கே! உன் உரை உண்மையானதே யாகும். அற வழியில் ஒழுகுதலே நம்முடைய நோன்பாகுமன்றோ? உன்னை விலைகொண்ட அந்தணனிடம் சென்று நான் வீரவாகுக்குச் செலுத்தவேண்டிய காற்பொன்னையும், கொள்ளித் துண்டையும் நீ கேட்டுப் பெற்று வா; நம் மகனை யெரித் தடக்கஞ் செய்வோம்," என்று மன்னியை நோக்கிச் சொன்னான். அவ்வாறே செய்தற் கிசைந்து அம்மாது, தன் மைந்தனை ஆண்டுக் கிடத்தி மறையவன் மனையை நாடிச் சென்றாள்.

கொடிய சூழ்ச்சிகள் நிறைந்த உள்ளத்தை யுடைய கோமுனிவன், அவ்வேளையிலும் சந்திரமதியை வருத்தக் கருத்துட் கொண்டான். அக்காசியம்பதியை யாண்டிருந்த மன்னனுக்கு ஓர் ஆண் குழந்தை யிருந்தது. வழக்கம்போல் அந்நாள் இரவில் அந்தக் குழந்தையைத் தமக் கருகிற் கண் வளரச் செய்து பெற்றோர் படுத் துறங்கினர். அரசமாதவன்,

கடவுளர் சிலரை யழைத்தேவி, அக்குழந்தையைக் களவாடிப் போய்க் கொன்று சந்திரமதிக் கெதிரில் எறியச் செய்தான். பிள்ளையினுடைய பிரிவாற்றுமையின் பித்துக்கொண்டு சுடலை யை விட்டு வெளிப்போந்த மதிதயன் மகள், காலகண்ட னுடைய வீட்டை நாடி அக்காசி நகரத் தெரு ஒன்றூடு தள்ளாடிச் சென்றுள். கள்வரால் கழுத்தை முறித்துப் போடப்பட்ட வாரணசி வேந்தனுடைய மைந்தன் அவள் காலிற் பட்டான். அம்மகனை யெடுத்துப் பார்த்துத் தன் மைந்தன் என உட்கொண்டு உளம் உருக அம்மாது புலம்பி நின்றுள்.

அவ்விரவிற் பின்னேரத்துக் காசி அரையன், கண் விழித்துத் தன் பக்கலிற் கிடத்திய புதல்வனைப் பார்த்தான்; மகன் அங்கின்மையால் திடுக்கிட்டுத் தன் மனைவியை யெழுப்பி, அவளுடன் அரமனை முற்றிலும் தேடினுன்; எவ்விடத்தும் தன் புதல்வன் காணப்படாமையின், யாரோ அவனைத் திருடிப் போயினர் என எண்ணி, உடனே காவலர் பலரை யழைத்துப் பிள்ளையைத் தேடவிடுத்தான். அக்காவற் காரர், காசிப்பதியில் தெருக்கடோறும் ஓடி மன்னன் மகனைத் தேடினர்; அச்சிறுவனைக் கையிற்கொண்டு ஒரு தெருக் கோடியில் துக்கித் திருந்த சந்திரமதியைக் கண்டனர்; அரு கிற் போய் அவளிட மிருந்த குழந்தையைப் பறித்துப் பார்த்த னர்; அந்த இளவல் தம் அரையன் புதல்வனே யாவான் என் பதை யறிந்து வெகுண்டனர்; அயோத்தி யாசியை யிழுத்துச் சென்று காசிக்கோனை யணுகி, "ஆண்டவரே! தம்முடைய மகனைத் திருடிப்போய்க் கொன்ற கள்வியைப் பிடித்து வந்தோம். இக்கொலைக்காரி பேயோ, பூதமோ, அன்றி அரக்கியோ, யாம் அறியோம். இதோ பாரும், தம் மைந்தனைத் தின்னக் கழுத்தை நெறுக்கி இவள் கொன்றிருக்

கிறாள்," என்று அவ்வரச னிடம் தெரிவித்து, மடிந்த மைந்தனை அவன் முன்னர் வைத்துச் சந்திரமதியை அவ னெதிரில் தள்ளி நிறுத்தினர்.

இறந்த தம் மகனைப் பார்த்துக் காசி வேந்தனும், அவனுடைய மனைவியும், பலவாறு கதறி யழுது வருந்தினர். அங்ஙனம் சிறிது நேரம் சென்றதும் காசிக்கோமான், "நீ யாவள்," என்று சந்திரமதியை நோக்கிக் கேட்டான். மதி மருட்கையாலும் மனச் சோர்வாலும் நின்றிருந்த அம்மங் கை, மிக்க வெறுப்புடன் அவ்வேந்தனைப் பார்த்து, "இறைவ! யான் ஓர் அரக்கியே யாவேன். குழந்தைகளைக் கொன்று தின்று திரிதலே என்னுடைய தொழிலாகும். உன் புதல்வ னுடைய நறுந்தசை மிக்க சுவையுடைத் தாகு மென்று நினைந்து யானே, அவனை இவ்விடத்தினின்று எடுத் தகன்று வதைத்தேன்," என்று கூறினாள். அவ்வரசியின் முகத்தை நன்று யுற்றுப் பார்த்துக் கொலைபுரிகின்றவர்க் குரிய குறிகளுள் ஒன்றேனும் அவளிடம் தோன்றாமையால் மன்னன், திகைப்புடன் நின்றான் ; அவளுடைய உண்மை வரலாற்றினை யுரைக்குமாறு பன்முறை வற்புறுத்திக் கேட்டான். முன்னர் கூறியவற்றையே அவள், முற்றிலும் பதி லிறுத்தாள்.

சந்திரமதியின் சொற்களில் அவ்வேந்தனுக்கு நம்பிக்கை யில தாயது. ஆதலின் அவன், தன் அமைச்சரை வரவழைத் துச் சந்திரமதியை அவர்களுக்குக் காட்டி, அவள் குற்றவாளி யாவாளா என்பதைக் குறித்து ஆராய்ந்து சொல்ல அவரிடம் தெரிவித்தான். அவருட் சிலர், அவள் குற்றஞ் செய்தவள் அல்லள் என்று அறிவித்தனர் ; வேறு சிலர், சிறுவனைக் கொன்றவள் அவளே யாவாள் என்றுரைத்து மெய்ப்பித்த னர். இரு திறத்தினருடைய சொற்களையும் காதேற்ற இறை

வன், செய்வ தின்ன தெனத் தெரியானுகிச் சற்றுநேரம் திகைத் திருந்தான். கௌசிகனுடைய மாயையால் அவ் வேந்த னுடைய மனம் மருட்கைத் தாயது. அந்த அரசன், ஈமத் திறைவனாய வீரவாகுவை யழைத்துச் சந்திரமதியை விரலால் சுட்டி, "என் மகனைக் கொலை புரிந்தவள் இவளே யாவாள் என்று அமைச்சர் ஆய்ந்து அறிகின்றனர்; ஆதலால், சுடலையிற் கொண்டுபோய் இவளைக் கழுத்தைத் துணித்து வீழ்த்துவாய்," என்று கூறிக் கட்டளை யிட்டான்.

பொழுதும் புலர்ந்தது; பொங்கிருள் போயது. காசி மன்னன் இட்ட கட்டளையைத் தடுப்பான் போலவும், கௌ சிகனுடைய திறமையைக் கெடுப்பான் போலவும், அரிச்சந் திரனுடைய துன்பத்தைத் துடைக்க வருவான் போலவும் வெயிலவன், தன் கதிர்க் கைகளை விரித்துப் பேரொளி வீசிக் குணபாலில் எழுந்தான். அக்காலையில் நற்குறிகள் பல உலக முற்றிலும் தோன்றின. அவற்றைப் பார்த்து அறிஞர் முனி வர், முதலிய பல்லோர், அகக் கண்ணால் ஆராய்ந்து, அரிச் சந்திரன் எய்த விருக்கும் உயர்வை யறிந்து, அகங் கனிந்து ஆரவாரித்தனர்; அவர் அனைவரும் காசி நகரத்தை நாடிக் காற்றினும் கடிதேகினர். வானுலகத்தினரும் வாரணாசிக்கு நேரிற் போந்து வானகத்துக் குழுமி யிருக்க லாயினர். அந்தக் கூட்டத்து நடுவண் இருந்த இந்திரனோடு உசாவி வசிட்டமா முனிவர் மகிழ்ந்திருந்தார். நெஞ்சிற் கரவுடையார், தம்மைக் கரந்து இருத்தலைப் போலக் கௌசிகமுனிவன், அரிச்சந்தி ரன் காத்திருந்த சுடலையினிடம் மறைந்திருந்தான்.

அரசனுடைய ஆணைக் கிணங்க நடக்க வீரவாகு, குற்ற மிலாக் குலமகளாய சந்திரமதியை மணிக் கயிற்றால் இறுகக் கட்டினான்; தன் அடிமையாகிய அரிச்சந்திரனைக் கூவி யழைத்தான்; அவனும், விரைவில் தன் தலைவனை யணுகினான்.

அவனை நோக்கி வீரவாகு, "இம்மாது நம்முடைய அரசன் புதல்வனைக் கொன்றாள். ஆதலின், நம் சுடுகாட்டினிடம் தள்ளிச் சென்று இவளைக் கழுத்தை வெட்டிக் கொலை புரிந்து பழிக்குப் பழி வாங்குவாய்," என்று சொல்லித் தன் கையி லிருந்த நீண்ட வாளைக் கொடுத்துச் சந்திரமதியையும் அவனிடம் ஒப்புவித்தான். தன் மனைவி என்று சிறிதும் முகங் கோணாமல் கட்டியிருந்த மணிக் கயிற்றைப் பிடித்து அவளைத் தெருவழியே அழைத் தேகினான் அரிச்சந்திரன். அந்நகரத்து மக்கள் எல்லோரும் திரள் திரளாகச் சென்று சந்திரமதியைப் பார்த்தனர். சந்திரமதியை யுற்று நோக்கி அம்மக்களுள் ஒவ்வொருவரும், தத் தமக்குத் தோன்றியவாறு அவளைக் குறித்துப் புகழ்ந்தும் இகழ்ந்தும் உரையாடினர். அவற்றை யெல்லாம் கேட்டு அரிச்சந்திரன், 'கடவுள் திருவருள் இவ்வா றிருப்பின் நான் என்ன செய்யக்கூடும்' என்று எண்ணி மனங் கசிந்து, மாதோடு போய் மயானத்தை நண்ணினான்.

அரைக்க அரைக்க மண மிகுஞ் சந்தனக் கட்டையைப் போல் அரிச்சந்திரன், கோமுனிவனால் உண்டான இன்னல்களுக்குக் குணத்திற் குறைவடைத லின்றி நடுநிலைமையைக் கடைப்பிடித்து ஒழுகி வந்தான். மனைவியை வெட்ட அவன் சடிலையை யடைந்தவுடன் அரசமாதவன், அவன் எதிரிற் போய், "மன்ன! மனைவியின் தலையைத் துணிக்க உனக்குத் தகுமா? நீ இத்தகைய துன்பங்களுக் கெல்லாம் இடந் தந்து வருந்து வானேன்? முன்பு எனக்குக் கொடுத்த நாட்டை வழங்கிலேன் என்று இப்பொழுது நீ உரைத்தியேல், அந் நாட்டை இன்னே திரும்பப் பெற்றுத் துன்பங்க ளெல்லாவற்றையும் தொலைத்து இன்புற்று வாழ்ந்திருக்கலாமே," என்று அவனைப் பார்த்துப் பகர்ந்தான். அம்மாதவனை

நோக்கி உம்பரும் புகழ உயர்மதி படைத்த அரிச்சந்திரன், "முனிவரே! புலையனும் விரும்பாத புன்புலால் நிறைந்த இந்த யாக்கையை நிலையெனக் கொண்டு மதி மருண்டு உயிரினும் மிகச் சிறந்ததும், அறங்க ளனைத்தினும் தலைமைத்தாயது மாய உண்மையினின்று பிறழ என் மனம் இசையாது. கலையுணர்ந்த நீர் இன்னணம் என்னிடம் வந்து பேசுதல் அழகாமோ? பதி யிழந்தேன்; பாலனை யிழந்தேன்; படைத்திருந்த நிதி யனைத்தையும் இழந்தேன்; இனி, எனக் குரியதாக உளதென நினைக்கும் உயர்கதி யிழக்கினும் உண்மையை யிழக்க யான் ஒவ்வேன்," என்று அந்த முனிவனுடைய உளம் நைய இடித் துரைத்தான். அம்மொழிகளைக் கேட்டு அருந்தவன், தன் மதி யிழந்து, வா யிழந்து மறைந்து போனான்.

முனிவன் அகன்றதும் உண்மைக் குறையுளாய மன்னன், தன் இல்லக் கிழத்தியை நோக்கி, "என் அருமை நாயகி, நீ அஞ்சற்க! நாளும் வழிபடும் கடவுளை மனத்துட் கொண்டு ஈண்டுக் கிழக்கு நோக்கித் தலை குனிந்து நீ நிற்பாய்," என்று சொல்ல, அங்ஙனமே அந்தக் கற்பரசியும், தான் ஒரு நொடிப் பொழுதும் இடைவிடாமல் தொழுதேத்தி வழிபடும் தன் மணாளருடைய மலரடிகளை மனத்திற் கொண்டு கிழக்கு நோக்கித் தலை குனிந்து நின்று, தன் ஆளரிடம், "என் நாயகரே, என்னை யிழப்பதற்கு அஞ்சி அறத்தைக் கை விடற்க. அஃது ஒன்றே நமக்குப் பொன்றாத் துணையாகும்," என்று தெரிவித்தாள். உடனே அரிச்சந்திரன், கடவுளைத் துதித்து, "உலகத் துயிர்க் கெல்லாம் ஒரு தனி முதல்வனாய கடவுள் உண் டென்பதும், அலகிலாச் சீருடை அவன் மொழி மறை யென்பதும், அம்மறைக்கண் இலகு அறம் பலவற்றினும் வாய்மையே ஈடிலாத தாகும்

என்பதும், விலகுருமல் அவ்வாய்மையையே நோன்பாகக் கொண்டவன் யான் என்பதும், என்னையே கண்கண்ட கடவுளாகக் கொண்ட கற்புடை மகள் இவள் என்பதும் உண்மையாயின், அவ்வுண்மையே இப்பொழுது தலை காக்கக் கடவது,'' என்று சொல்லித் தன் கையி லிருந்த வாளை ஓங்கி மனைவியின் கழுத்தில் வீசினுன். அவ்வாள், திருமணக் காலத் திட்ட நறுமணம் மிக்க மலர் மாலையைப் போலச் சந்திரமதியின் கழுத்தில் விளங்கியது. வானகத்தில் துந்துபி முழங்கியது. அரிச்சந்திரன் சந்திரமதி யாகிய இருவர் மீதும் விண்ணவர் மலர் தூவி ஆசி கூறினர்.

அயோத்தி மன்னன், திடுக்கிட்டு மறுமுறை வாளை யோச்ச எண்ணங் கொண்டான். அப்பொழுது, திடீரென "அரிச்சந்திர! பொறுப்பாய்! பொறுப்பாய்,'' என்று சொல்லி அறிஞர் முனிவர் முதலிய பல்லோர், அவன் எதிரில் இணையற்ற மகிழ்ச்சியோடு தோன்றினர்; விண்ணவர் பலரும் அம் மன்னவன் கண்பட விளங்கினர்; முப்பெருங் கடவுளரும் அவண் போந்து, அரசனுக்குக் காட்சி கொடுத்து, அவனைப் பார்த்து ஆசி வழங்கி, "அரிச்சந்திர! நீ ஒருவனே உண்மையாளன். உன்னைப்போன்ற உண்மைக் கிறைவன் ஒருவன் எவ்வுலகத்திலும் இலன். மனைவி மைந்தனோடு நாட்டையடைந்து நீ பன்னெடுங்காலம் பண்புடன் வாழ்ந்து பெறலரும் பேற்றைப் பெட்புடன் பெறுவாயாக,'' என்று திருவாய் மலர்ந்தருளி, லோகிதாசனுடன் காசி வேந்தனுடைய மைந்தனும் உயிர் பெற் றெழுந்திருக்கச் செய்து மறைந்தனர்.

அரசமாதவன், துள்ளிக் குதித்து அரிச்சந்திர னெதிரிற் போய்த், "தோற்றவன் யானே; வென்றவர் வசிட்டரே,'' என்று சொல்லிக் கைகளைத் தூக்கிக் களிப்பின் மிகுதியால்

கூத்தாடினான்; அரசனைப் பார்த்து, "அரச்சந்திர! நீ நீடூழிகாலம் இன்பத்துடன் வாழக் கடவாய்! உன் புகழ் உலக முள்ளளவும் விளங்கக் கடவது. உன்னுடைய உயர்ந்த தன்மை உலகங்க டோறும் தெரியவும், மக்கள் எல்லாரும் நன்னெறியில் ஒழுகவும் கருதி யான், உன்னைப் பலவாறு துன்புறுத்தினேன். அவற்றையெல்லாம் நீ மனத்திற் கொள்ளாமல் இன்புற்றிருக்கக் கடவாயாக," என்று சொல்லித் தான் முன்னர் சுதன்மையிற் செய்த வாக்குறுதிக் கிணங்கத் தன் தவப் பயனில் நேர்ப் பாதியை ஆண்டுக் குழுமி யிருந்த கணக்கற்ற மக்களும் கடவுளரும் காண அயோத்தி வேந்தனுக்கு நீருடன் வழங்கினான்; அவனுடைய நாட்டையும் திரும்பப் பெற்றுக்கொள்ளுமாறு வேண்டினான்.

முனிவனுடைய வேண்டுகோளை மறுத்து மன்னன், "இரந்தவருக்கு அளித்ததைத் திரும்ப வாங்கிடில், இம்மையிற் பழி யுண்டாவதுடன் மறுமையில் நரகத் துன்பமும் நேரும்; நல்லார் பலரும் நகைப்பர்; ஆதலின், யான் அந்நாட்டை இனி உம் மிடத்நினின்று திரும்பப் பெறேன்," என்று புகல, அதற்குக் கோமுனிவன், "அரிச்சந்திர! நின் நன்னெறியை உல கறிந்து உய்ய எண்ணங் கொண்டு யான், இடையூறுகள் பலவற்றை உனக்கு உண்டாக்கினேனே யன்றி வேறு ஒன்றையும் கருதி அங்ஙனம் செய்திலேன். உன்றன் உயர்ந்த தன்மையைப் பரிசோதிக்க எனக்குக் கருவியாய் நேர்ந்தவர் அனைவரும் கடவுளரே யாவர். நீ காத்த இவ்விடம் உண்மையிற் சுடுகாடு அன்று. இதோ உண்மையைக் காண்," என்று சொன்னவுடன் அச்சுடலை வேள்விச் சாலையாகவும், ஆண்டு நெருப்பெரிந்திருந்த இடங்களெல்லாமும் ஓம குண்டங்களாகவும், வீரவாகு முதலியோர்

அறக்கடவுள் முதலிய கடவுளராகவும் அரிசந்திரனுடைய கண்களில் தென்பட்டனர்.

மீண்டும் அரசமாதவன், அவ்வேந்தனை நோக்கி, "அளப்பரும் புகழுடை அண்ணலே! உன் நாடு நகர முதலியன வெல்லாம் எனக்கே உரியன வன்றோ? அவற்றை எவருக்கேனும் யான் விரும்பும் வண்ணம் வழங்கலாமே? உனக்கே அவற்றைக் கொடுக்க யான் இப்பொழுது விழைகின்றேன்; ஆதலால், இதோ அவற்றை உனக்கே தந்தேன்; பெற்றுக் களிப்பாய்," என்று சொல்லி வழங்கினான். அரிச்சந்திரன் யாதும் சொல்லுதற்கின்றி அசைவற்று நின்றான். பண்ணவர் அண்ணலுடன் வசிட்டரும் அவ்வேந்தனைப் பார்த்து, "மாண்பிற் சிறந்த மன்ன! இப்பொழுது விசுவாமித்திர முனிவர் அளித்த நாட்டை நீ யடைதற்குத் தடை யாது உளது? உன்னுடைய பெருமை எங்கும் விளங்கச் செய்தற்கே அவர், பலவாறு உன்னைப் பரிசோதித்தனர். இப்பொழுது உன்னுடைய பெருமை எங்கும் பாவி நிறைந்தது. உன்னுடைய நாடு நகரங்களையும், எல்லாச் செல்வங்களையும் பெற்று நீ இன்புற்று வாழ்ந் திருப்பாயாக," என்று சொல்லினர். விண்ணவர் அனைவரும், அவ்வேந்தனை வாழ்த்தி மறைந்தனர்; அறிஞர் பலரும், ஆசி வழங்கி அப்புறமகன்றனர். ஆண்டிருந்த மக்கள் எல்லாரும் அம்மன்னனைப் புகழ்ந்து கொண்டாடினர். அவ்வரசனுடைய பெருமை காற்றினும் கடிது சென்று உலக முற்றினும் பரவியது.

மனைவி மகனோடு அரிச்சந்திரனையும் வசிட்டரையும் காசிமன்னன், தன் அரண்மனைக்கு அழைத்தேகினன்; பரிவுடன் விருந்தளித்து இன்ப முண்டாக்கினன். அந்நாள் முழுவதும் வசிட்டர் அரிச்சந்திரன் முதலியோர் அவ்விடத்திலேயே மகிழ்ந்திருந்தனர். மறுநாட்காலைக் காசிவேந்தன்

வசிட்டர் முதலிய பெரியார் பலர், அரிச்சந்திரன், சத்திய கீர்த்தி, சந்திரமதி, லோகிதாசன் முதலியோரை யுடன் கொண்டு கோசல நாட்டை நோக்கிப் புறப்பட்டனர்; சின்னாளில் அயோத்தியைக் குறுகினர். கோசல நாட்டு மக்கள் எல்லாரும் பேருவகையுடன் எதிர்கொண்டு சென்று தம்முடைய மன்னனை வணங்கி யழைத் தேகினர். அரிச்சந்திரன், தன்னுடைய மனைவி மகனோடு தன் அரண்மனையை யடைந்து மகிழ்ந்திருந்தான். அந்நாட்டு மக்கள் பலரும், அன்று முழுவதும் மன்னனைக் கண்டு வணங்கிப் போற்றிக் கொண்டாடினர். வசிட்டர் காசிவேந்தன் முதலிய அறிஞர் பல்லோர், நன்னாள் ஒன்றில் அரிச்சந்திரனை யாளி திகழ் அணை மீதேற்றி மணிமுடி சூட்டி ஆசிகூறிக் களித்தனர். அந்நாடு முழுவதும் அன்று பெருந் திருவிழாக் கொண்டாடப்பட்டது. தம்முடைய அரசனை மீண்டும் அடைந்தமைக்கு மக்கள் அனைவரும், இன்பக்கடலுள் ஆழ்ந்தவ ராயினர்; பல்லிடங்களிலும் பலவகைத் தான தருமங்களைச் செய்து களித்தனர். அந்நாள் முதல் அரிச்சந்திரன், மிக்க இன்பத்துடன் மனைவி மகனோடு வாழ்ந்திருந்து செங்கோல் செலுத்தி வந்தான். நாட்கள் சில செல்லக் காசி மன்னன், அரிச்சந்திரனிடம் விடை பெற்றுத் தன் நகரத்தை நாடிச் சென்றான். வசிட்டரும் தவத்தைக் கருதிப் போயினர். அரசமாதவனால் அரிச்சந்திரனுடைய பெருமை இன்றும் இந்நிலவுலகத்தில் நிலைத்திருக்கின்றது. உலக முள்ளளவும் அஃது அழியாததே யாகு மன்றோ?

---

பிரிவு - ௰௩

# இராமலட்சுமணரை யடைதல்

பன்னாட்காறும் பாடுபட்டுத் தேடிய தவப் பயனிற் பாதியைப் பங்கிட்டுக் கொடுத்து அரிச்சந்திரனை விட்டகன்ற அரசமாதவன், மலைச்சாரல்க ளிடமும் சோலைக ளிடமும் போய்த் தங்கிப் பல்லாண்டுகள்வரை அருந்தவத் தொழிலில் ஈடுபட்டிருந்து பெரும் பயனை யடைந்தான்; மன்னர் முனிவர் மக்கள் முதலியோர்க்கு அரிய உதவிகள் பலவற்றைப் புரிந்து மிகப் புனித னானான். பாரத நாட்டுத் தென்கோடி எல்லைக் கப்பாலுள்ள இலங்கைத் தீவில் ஒரு காலத்தில் இராவணன் கும்பகர்ணன் முதலிய கொடிய அரக்கர் பல்லாயிரவர் வாழ்ந்திருந்தனர். அந்த அரக்கர் பலரும், அவருடைய தலைவனான இராவணனும், இவ்வுலக முழுவதும் திரிந்து அந்தணர் அறிஞர் முனிவர் முதலிய நல்லார் பலர்க்கும் பல இடையூறுகளை யுண்டாக்கி வந்தனர்; விண்ணுலகத் தவரையும் வருத்தாமல் விட்டனர் அல்லர். அவருடைய கொடுமைக்கு அஞ்சி அந்தணர் முனிவர் முதலியோர், வேள்விகளைச் செய்யவும், ஐந்தீ வளர்க்கவும் இயலாதவராய் மனம் வருந்தி யிருந்தனர். அக்காலத்து, விசுவாமித்திர முனிவன் ஒரு சோலையினிடம் அரிய வேள்வி ஒன்றைச் செய்யத் தொடங்கினான். G. Narayanan.

தாடகை என்னும் அரக்கி ஒருத்தி யிருந்தாள். யாது கருதியோ அரசமாதவனிடம் அவள், மிக்க பகை யுடையளா யிருந்தாள். அந்த முனிவன், தான் மேற்கொண்ட வேள்வியைச் செய்யத் தொடங்குவா னாயின், அப்பொழுதே தாடகை, தன் புதல்வரோடும் சுற்றத்தினருடனும் அம்முனிவனிடம் போந்து வேள்வித் தீயை யவித்து, அவன் நிலைமை

யைக் கலைத்துப் பலவாறு அவனை வருத்தித் திரும்புதல் வழக்கமாகக் கொண்டிருந்தாள். யாது செய்வான் முனிவன்? தான் அடைந்திருந்த உயர்ந்த நிலைமையை நோக்கி அவன், தாடகையை யெதிர்த்து யாதும் செய்தற்கின்றி மனம் நொந்து வாளா விருந்தான்.

அரக்கரால் நேர்ந்த துன்பங்களைப் பொறுக்க முடியாமல் தவ முனிவர் பலரும், ஒருங்கே கூடி இமையவர் கோனிடம் சென்று பணிந்து, தமக் குற்ற குறையைப் போக்க வேண்டி முறை யிட்டனர். அரக்கரிடம் அச்சங் கொண்டிருந்த இந்திரன், தான் அவரை யழிக்க இயலாதவனாவான் என்பதை அம்முனிவரிடம் தெரிவித்து, அவரை யுடனழைத்து நான்முகனை நாடிப் போனான். அயிராணி கேள்வனோடு முனிவர், படைப்புத் தொழில் கடவுளிடம் சென்று, தொழுது வழி பட்டு, அரக்கருடைய கொடுமையை யகற்ற அவரை வேண்டினர். அக்கடவுள், இந்திரனோடு முனிவரை யழைத்துப் பரமசிவனிடம் சென்றார்; அரக்கரை யழித்து முனிவரையும் வானவரையும் காக்குமாறு சிவபெருமானை இறைஞ்சினர். சிவபெருமானார், "பாற்கடலிற் பள்ளி கொண்ட திருநாரணனை யன்றி வேறு எவரும் அரக்கரை யொழித்து அறிஞரைக் காக்க வல்லுநர் அல்லர்," என்று பிரமனைப் பார்த்துத் தெரிவித்தார். முனிவருடைய வேண்டு கோளுக் கிணங்க அப்பொழுதே அம்முனிவருடன் சிவபெருமான் முதலிய கடவுளரும் புறப்பட்டுச் சென்று திருப்பாற்கடலை யடைந்து, ஆயிரவாய்ப் பாம்பணைமேல் அறி துயில் இனிதமர்ந்த திருமாலைத் துதித்துப் பரவினர். அடைக்கலம் புகுந்த அன்பரைக் காத்தலிலேயே கண்ணுங் கருத்துமாய அந்நெடுமால், தம்மிடம் போந்த கடவுளர்க்கும் முனிவர்க்கும் காட்சி தந்து, புன்னகையோடு அன்பும் அருளும்

ததும்ப அவரை நோக்கி, "அன்பர்காள்! நீவிர் அச்சத்தை யொழிமின். நடநெடு மாட மாளிகைகள் நிறைந்த அயோத்தியில் தசரத மன்னனுக்கு யாம் மைந்தராய்த் தோன்றி அரக்கரை வாட்டி உம்மை யாட்கொள்வோம்," என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். அமுதினும் இனிய அம்மொழிகளைக் கேட்டு முனிவருடன் கடவுளரும், உவகை கொண்டனர்; செங்கண்மால் திருவடிகளை வணங்கிப் பலவாறு வாழ்த்திக் களித்தனர்; மகிழ்ச்சி நிறைந்த மனத்தினராய்த் தம்மிருப்பிடங்களை நாடித் திரும்பினர்.

அரிச்சந்திரனுக்குப் பின்னர், அவனுடைய மாபிலுதித்த மன்னர் பலர், அயோத்தியி லிருந்து அரசாண்டனர். அவருள் தயரதன் என்பானும் ஒருவ னுவான். அவ்வேந்தன் பல்லாண்டுகாறும் செவ்வனே உலகத்தை யாண்டு மக்கட் பேறின்றி மன மிக வருந்தி யிருந்தான். தன் குல குருவாகிய வசிட்டமா முனிவருடைய உதவியால் அம்மன்னன், கலைக் கோட்டு முனிவரைக் கொண்டு புத்திர காமேட்டி யாகத்தைச் செய்தான். ஆகுதி சொரிந்தவுடன் அவ்வேள்வித் தீயின் நடுவண், அமுதுடைப் பொற்றட்டு ஒன்றைக் கையி லேந்திப் பெரும் பூதம் ஒன்று தோன்றித், தான் கொணர்ந்த அமுதத்தைத் தயரதனிடம் கொடுத்து, அதை அவனுடைய மனைவியர்க்கு அளிக்குமாறு சொல்லி மறைந்தது. மன்னன் மிக்க களிப்புடன் அவ்வமுதத்தை யெடுத்துச் சென்று, தன் மனைவியராய கோசலை கைகேயி சுமித்திரை யாகிய மூவர்க்கும் பகிர்ந்து கொடுத்தான்; பின்னர், தட்டிற் பிதிர்ந்து வீழ்ந்திருந்த அமுதத்தையும் விடாமல் சேர்த் தெடுத்துச் சுமித்திரைக்கு அளித்தான்; வேள்வியை முறையே முடித்து இன்புற்றிருந்தான்!

வேள்விப் பயனால் கிடைத்த அமுதத்தை அன்புடன் உண்ட அரசியர் மூவரும் கருப்பவதிக ளாயினர். திங்கள் பத்து நிறைய மன்னனுடைய மூத்த மனைவியாய கோசலை, உலக மெலாம் தொழுதேத்த நல்லோரையில் ஓர் ஆண் மதலையைப் பயந்து உவந்தாள். கைகேயியும் ஒப்பற்ற புதல்வ னொருவனை ஈன்று களித்தாள். சுமித்திரையும் மாண்புடன் மைந்தர் இருவரைப் பெற்று மகிழ்ந்தாள். மூத்தவனும் கரிய செம்மலுமாய கோசலையின் மைந்தனுக்கு இராமன் எனவும், அவனுக் கிளையவனாகிய கைகேயி புதல்வனுக்குப் பரதன் எனவும், அப்பரதனுக்கு இளையவனும் சுமித்திரையின் மூத்த பிள்ளையுமாகிய் வீரனுக்கு இலக்குவன் எனவும், அவன்றன் தம்பிக்குச் சத்ருக்னன் எனவும் வசிட்ட முனிவர் பெயர்களை யிட்டு உள மிக மகிழ்ந்தார். தயரதனும், அவனுடைய மனைவியரும், அப்புதல்வரை உயிரினும் இனிதாய்ப் பாராட்டி, யாதினும் அரிதாகச் சீராட்டி வளர்த்து வந்தனர். திருப்பாற் கடலினிடம் அந்நாள் கடவுளர் முனிவர் எதிரில் திருவாய் மலர்ந்தருளிய வண்ணம் பாரிடந்து பாரை யுண்டு பாருமிழ்ந்த திருமாலே, பாராள வந்துதித்த இராம ராவார். தேவிற் சிறந்த அத்திருமாலுக்குப் பாயலாய் இருந்த ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடனே இலக்குவ னவான். அக்கடவுள் கைகளிற் கொண்டிருந்த சங்கமும் ஆழியுமே, பரத சத்ருக்ன ராவர்.

பெறுதற் கரிய மைந்தரைப் பெற்று இன்பக்கடலுள் மூழ்கித் திளைத்திருந்த தயரதன், ஒருநாள் சிறந்த அரச கோலத்துடன் அழகு அமைப்பு முதலியவற்றிற் சுதன்மையினும் முதன்மைத்தாய தன் அரசவைக்கண் எய்தி, அரியணை மீதேறி நிகரற்ற பொலிவுடன் வீற்றிருந்தான். அவ்வேளைத் தாடகையை வதைத்துத் தான் மேற்கொண்ட

வேள்வியை முடித்தற்கு வகையாராய்ந் திருந்த அரசமாதவன், தயரதனுடைய மணி மண்டபத்தை யடைந்தான். அம் முனிவன் வரவைக் கண்ட அரசன், நறுமணம் மிக்க தாமரை மலரில் தோன்றிய நான்முகன் வரவை நோக்கிய இமையவர் அரசனைப் போல் அரியணை நீத்துக் கடிதெழுந்து மார்பி லணிந்திருந்த அரதனமாலை இரவி யஞ்ச ஒளி விஞ்ச விரைந்து சென்று எதிர் கொண்டழைத்து, அம்முனிவனுடைய தாளிணையை வணங்கினன்; அம்மாதவனை யழைத்துச் சென்று உயர்ந்த மணிகளாலும் பசும் பொன்னாலும் செய்யப்பட்ட ஓர் அழகிய தவிசில் வீற்றிருக்கச் செய்து அருச்சித்து, 'என் ஊழ் வினையினுடைய தொடர்ச்சி இன்றே யற்றது,' என்று சொல்லிக் களித்தான்.

விசுவாமித்திர முனிவனை வலம்வந்து தொழுது கை கூப்பி, அவனை நோக்கித் தயரதன், "நெடியோய்! யான் வலம்வந்து வணங்க நீர் இன்று இந்நகரத்தினிடம் எளிதில் எழுந்தருளியதாய நன்மையை என்னென்று புகழ்வேன்? இந்நாடு செய்துள்ள தவப் பயனால் நீர் இப்பொழுது இவண் போந்தீர் என்று சொல்லின், அஃது அமைவுடைத் தாகாது. என் நல்வினைப் பயனால் நீர் இங்குற்றீர் என்றுரைப்பின், அதுவும் தக்க தாகாது. தொன்று தொட்டு என் குலத்து முன்னோர் யாவரும் செய்து தொகுத்து வைத்திருந்த நல் வினையே உம்மை ஈண்டடையச் செய்த தாகும்," என்று துதி மொழிந்தான்.

தயரதனைப் பார்த்துக் கௌசிக முனிவன், "பகைவரைப் போரில் வாட்டி வெற்றி பெறத் தக்க வேற்படையைக் கையிற் கொண்ட இறைவ! என்னைப் போன்ற முனிவர்க்கும் இமையோர்க்கும் இடையூறு ஒன்று உண்டாயின், எமக்குப் பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும், பாற்கட

லும், பதுமபீடத் தன்னகரும், கற்பகநாட்டு அணிநகரும், மணிமாட அயோத்தி என்னும் நின் பொன்னகரு மன்றிப் புகலிடம் வேறு முளதோ? வீரத்தில் மிக்க மன்ன! பொன் ஞட்டைக் கவர்ந்த குல மலைகளை யொத்த மணித் தோள் களைப் படைத்த சம்பரனைக் குலத்தோடும் தொலைத்து அந் நாளில் நீ மீட்டளித்த அரசன்றே புரந்தரன் இன்று ஆள் கின்றது," என்று புகழ்ந்துரைத்தான்.

அம்முனிவனை நோக்கித் தயரதன், "பெரியீர்! உம் முடைய அருளால் யான் பன்னெடும் நாளாய் அரசாண்டு இனிதாக வாழ்ந்திருந்தேன். இன்று நீர் ஈண்டு எழுந்தருளிய தால் அவ்வரசாட்சியை யடைந்திருந்ததனுலாய பயனைப் பெற்றேன். இனி, யான் செய்ய வேண்டியது யாதேனும் உளதோ? பணியாயின் உடனே செய்து முடிப்பேன்," என்று பேருவகையுடன் கூறக் கோமுனிவன், "மன்ன ரெலாம் தொழு தேத்தும் மாண்புடையாய்! மரங்கள் அடர்ந்த காட்டினிடம் சிறந்த வேள்வி ஒன்றை யான் செய் கின்றேன். முனிவர்கள் அஞ்சத் தக்க காமம் வெகுளி என் பனவற்றைப் போன்ற கொடிய அரக்கர் அந்த யாகத்திற்கு இடையூறு விளைவிக்கின்றனர். அக்கொடியவரைச் செரு முகத்து வென்று என் வேள்வியைக் காக்க நின் புதல்வர் நால்வருள்ளும் கரிய செம்மலாய ஒப்பற்ற இராமனை என்னு டன் அனுப்புவாயாக," என்று உயிர் இரக்குங் கொடிய யமனைப்போலத் தயரதன் மனம் நையச் சொன்னுன்.

அளவில்லாத அருமையான தவத்தை யுடைய அரச மாதவன் சொற்களைக் கேட்டதும் தயரதன், மார்பிற் பகை வரால் எறியப்பட்ட வேல் பாய்ந்ததனு லாகிய புண்ணி லுண்டான பெரும் புழையிற் கொள்ளிக் கட்டை நுழைந் தாற்போல் மிக வருந்தினுன். மனத்தி லுண்டான துன்பம்

பிடித்து வெளியே தள்ளியதால் அவனுடைய ஆருயிர், ஊஞ்ச லாடுவதைப்போல் உடம்பி னுள்ளே போவதும் வெளியே வருவது மாயிற்று. பிறவிக் குருட னொருவன் கண்களைப் பெற்று மீண்டும் அவற்றை இழந்தாற் போலக் கடுந் துயரத்துக் குள்ளானான் திருமகனார் தாதை. சற்று நேரத்தில் ஒரு வண்ணந் துயரத்தி லிருந்து ஆறுத லடைந்து அவ்வரசன், கோமுனிவனைப் பணிந்து, "உயிரினும் இனிய என் திருமகனாகிய இராமன் மிகச் சிறியவ னாவான். அவன் பிறந்து பன்னிரண்டு ஆண்டுகளே யாகின்றன. மேலும், அவனுக்குப் படைக்கலப் பயிற்சியு மிலது. கட்டளையானால் யானே உம்முடன் போந்து, நீர் செய்யும் வேள்விக்கு இடையூறு விளைக்கும் கொடியவரை அடர்த்து அழிக்கின் றேன்; குளிர்ந்த நீரையுடைய கங்கையை ஒரு பக்கத்தில் ஒழுக விட்ட சடைமுடியை யுடையவனான சிவனும், உலகத் தை யுண்டாக்கும் நான்முகனும், விண்ணவர் தலைவனான இந்திரனுமாகிய மூவரும், தனித் தனியேனும், ஒருங்கு சேர்ந்தேனும் வந்து உம்முடைய வேள்விக்குத் தடை யுண் டாக்குவா ராயினும், யான் அவர்க்கு இடையூறு உண் டாக்கி யாகத்தைக் காப்பேன்; பெரியோய்! செல்வோம், எழுந்திருப்பீராக," என்று கூறினான்.

தன் கருத்துக்கு மாறாகத் தயரதன் மொழிந்ததைக் கேட்டதும் விசுவாமித்திரன், எல்லா உலகத்தினரும் அச் சுறும் வண்ணம் மிக வெகுண்டு, தன் இருக்கையை விட் டெழுந்து நின்றான்; பெரு மூச்சு விட்டுக் கண்களை யுருட் டிப் பார்த்தான். அவனுடைய முகம் கறுத்தது; கண் கள் சிவந்தன; புருவங்கள் நெற்றியி லேறின. "ஏ அரச! என் சொல்லை மறுத்தனையா," என்று சொல்லி அவன், நகைத்தான். உடனே, அந்த அரசவைக்கண் அமர்ந்திருந்த

வசிட்டர் எழுந்து, கோமுனிவனை நோக்கிச் "சற்றுப் பொறுப்பாய்," என்று புகன்று, அரசனைப் பார்த்து, "நின் திருமகனுக்குப் பிறரால் அடைவித்தற்குக் கூடாத அரிய நன்மைகள், தாமாகவே வந்தடைகிற காலத்தை நீ தடுக்கக் கடவையோ? பெய்யும் மாரியால் பெருகுகின்ற வெள்ளங்கள் கடலிற் போய் விரைந்து சேருதல்போல் உன் குமாரனாகிய இராமனுக்கு அளவற்ற கலைகள் வந்து சேரும் படியான நற்காலம் இன்று நேர்ந்தது. ஆதலால், மன்ன! இராமனை இந்தக் கௌசிக முனிவருடன் அனுப்புவாயாக," என்று சொல்லி யருளினர்.

ஆசிரியருடைய மொழியை யமைவுடன் ஏற்றுத் தயரதன், அங்கிருந்த ஏவலரை நோக்கி, "என் கண்மணி யன்ன மைந்தனாகிய திருவின் கேள்வனை அரண்மனையிற் சென்று அழைமின்," என்று சொல்லிப் பணித்தான். ஏவலர் விரைந்து போய்த் திருமகனிடம் தந்தையினுடைய கட்டளையை யறிவித்தனர். யாவர் அறிவையும் கடந்து இருப்பவனான இராமன், அப்பொழுதே அரசவை யெய்தித் தந்தையை வணங்கி, அவ னருகு சார்ந்தான். என்றும் அண்ணலை விட்டுப் பிரிந்தறியாத இலக்குவனும், இராமனைத் தொடர்ந்து சென்று, பக்கலில் நின்றான். இராமனோடு இலக்குவனையும் கௌசிகனுக்குக் குறித்துக் காண்பித்துத் தயரதன், அம்முனிவனை நோக்கி, "மாதவத்திர்! இப்புதல்வர் இருவருக்கும் இனி நீரே நல்ல தந்தையு மாவீர்; ஒப்பற்ற தாயு மாவீர். உம்மிடம் இவரை ஒப்பித்தேன். இவர்க்கு வேண்டிய உதவிகளைப் புரிந்து காத்தருள்வீராக," என்று சொல்லித் தன் மைந்தர் இருவரையும் அந்த முனிவனிடம் அடைக்கலமாகக் கொடுத்தான்.

சினந்தணிந்து மிக்க மகிழ்ச்சியோடு கொற்றவனுக்கு ஆசி கூறி, "யாகத்தைச் செய்து முடிக்கக் கடவேன்," என்று கௌசிகன் இயம்பி, இராம லக்குவரைத் தன்னுடன் கொண்டு அந்த அரசவையை நீத்துச் செல்லத் தொடங்கினான். உலகங்களெல்லாவற்றையும் காத்தருளும் கடவுளான இராமபிரான், நீண்ட உடை வாளை இடைப் புறத்திற் பையோடு தொங்கக் கட்டி, மெய்ம்மையினுடைய பயன் எப்பொழுதும் குறைபடாததைப்போல் எப்போதும் அம்புகள் குறைபடுதலில்லாத இரண்டு அம்பறாத் தூணிகளை மலைகளைப் போல் உயர்ந்தனவாய தன் இருதோள்களிலும் தொடுத்து, வெற்றியைத் தருவதாய நெடிய வில்லொன்றை இடது கையிற் பிடித்து, எவ்வுலகத்தினும் நிகரற்ற ஆண்டகையே தான் என்பதைப் பார்த்தவர் பரிவுடன் அறிய வீரத்திற் சிறந்த பொலிவுடன் முனிவனைத் தொடர்ந்தான். இராமனைப் போலவே இலக்குவனும், வாளும் தூணிகளும் வில்லும் தரித்து எகினன். தான் அடைந்த புதல்வ ரிருவரையும் தன் இரு கண்களைப் போலக் கருத்துடன் அழைத்து அரசமாதவன் செல்ல, அயோத்தி இறைவனுடைய உயிரானது வெளியிற் புறப்பட்டதைப் போல் இராம லக்குவர் இருவரும், விசுவாமித்திர முனிவனை விடாமல் நிழல் போலத் தொடர்ந்து அம்மாநகரத்தைக் கடந்தனர். ✓

---

பிரிவு - ௰௪

## தாடகையின் வதம்

இராமன் முதலிய மூவரும் அயோத்தியை விட்டு மிக்க தூரம் நடந்து சென்று நீர் நிறைந்த சரயு நதியை யடைந்தனர்; அதன் கரையி லிருந்த பெருஞ் சோலையில் தங்கினர்.

பொழுது போயிற்று. அவர் மூவரும் அன்றிரவு அச் சோலையினிடம் படுத் துறங்கினர் ; விடியற் காலை யெழுந்து பகலவன் உதிப்பதற்கு முன் அவ்வாற்றைக் கடந்து மறு கரையைச் சேர்ந்தனர். அங்கு, வேள்விகளைச் செய்வதனால் உண்டாய புகை நிறைந்த சோலை ஒன்றை இராமன் கண்டு, அச்சோலை யாது என்று கோமுனிவனைக் கேட்டான். இராமபிரானை நோக்கி விசுவாமித்திரன், "அச்சோலை காம னாச்சிரமம் என்னும் காரணப் பெயரை யுடைய தாகும். ஒரு காலத்திற் சிவபெருமான் யோகு செய்திருந்த இடமும் அஃதாகும். அவ்விடத்தில் யோகு செய்திருந்த சிவபெருமா னுடைய நிலைமையைக் கலைக்க வானவர் கருத்துட் கொண்டு மன்மதனைத் தூண்டினர். பரமசிவன்மீது மன்மதன் மலர்க் கணைகளை யெய்தான். அதனால் சிவன் மிக்க சீற்றங் கொண்டு, தன் நெற்றிக் கண்ணைத் திறந்து மன்மதனை நோக்க, உடனே அவன் வெந்து சாம்பராய்க் கீழே விழுந் தான். அவனுடைய உடம்பு சாம்பராய்ச் சிந்திய இந்த இடமெல்லாம் அங்க நாடு என்னும் பெயரை யுடைய தாயது. தத்துவ ஞானத்தைத் தன்னுடைய நிலையாலும் கற்பிக்க வல்ல சிவபெருமான் தவஞ் செய்திருந்ததால் இந்த இடம் மிக்க தூய்மையான தாகும்," என்று பகர்ந்தான். அரசிளங் குமரர் அதைக் கேட்டு மிக்க வியப்படைந்தனர்.

அந்தச் சோலையை நாடி அம்மூவரும் சென்றனர். ஆண்டுத் தவஞ் செய்திருந்த முனிவர் பலரும், எதிர்நோக் கிப் போய்ப் பரிவுடன் அந்த மூவரையும் அழைத்துச் சோலைக்குட் சென்று அன்புடன் உபசரித்தனர். அந்நாள் முழுவதும் அவர், அவ்விடத்திலேயே தங்கி யிருந்தனர் ; மறுநாள் வைகறையில் எழுந்து அவ்விடத்தை விட்டு நீங்கி னர்; நடந்து சென்று நடுப் பகலில் வெப்பமான தன்மையை

யுடைய ஒரு பாலை வனத்தைக் குறுகினர். அனற்கடவுளும் அஞ்சக் கூடிய கனல் கொளுந்தும் அந்தப் பாலைவனத்தில் நடந்து செல்லப் பூவினும் மென்மைத்தாய திருவடிகளையுடைய இராம லக்குவர் மிக வருந்துவரே என்று விசுவாமித்திர முனிவன் எண்ணினன்; உடனே கலைமகட் கொழுநனால் உண்டாய பலை அதிபலை என்னும் இரண்டு விஞ்சைகளை அப்புதல்வர்க்குக் கற்பித்தான். அவ்விருவரும் அக்கலைகளை நன்கு ஓதி உள்ளத்திற் கொண்டனர். அதனால், ஊழித் தீயையும் இகழத் தக்க அச்சுடு சுரம், மா மைந்தருக்கு மிகக் குளிர்ந்த தாயது. தெளிவான குளிர்ந்த நீரிற் செல்லுதலைப் போல் அம் மன்னன் மக்கள், மன மகிழ்ச்சியோடு அந்தப் பாலை நிலத்தில் நடந்து போயினர். சிறிது தூரம் சென்றதும் இராமபிரான், "புனிதரே! காமனாச்சிரமம் என்று நீர் தெரிவித்த இவ்விடம், பழி படர் மன்னவன் படைத்த நாட்டினும் மிக அழிவுடைத்தாய் இருக்கின்றதே. சிவபெருமானுடைய விழித் தீப் பட்டதனால் இஃது இங்ஙன மாயிற்றா? அன்றி, வேறு எதனா லாயினும் இவ்வாறு பாழடைந்ததா," என்று கௌசிகனைப் பார்த்து வினவினன்.

உவகையுடன் இராமனை நோக்கி அம்முனிவன், "இனிய உயிர்களைக் கொன்று உண்டு உழல்கின்ற வாழ்க்கையையுடையவளும், யமனைப் போன்ற தோற்ற முடையவளும், ஆயிரம் மதயானைகளுக்குள்ள உடல் வன்மையைப் படைத்தவளுமாகிய அரக்கி ஒருத்தி யுளள். அவள், தாடகை என்னும் பெயரைப் பெற்றவ ளாவாள். பன்னாட்கு முன்னர், இயக்கர் குலத் துதித்த சுகேது என்பான் ஒருவ னிருந்தான். அவன், உலக மெங்கணும் வியக்கக் கூடிய மொய்ம்பினனும், நெருப்பை யொத்த சினத்தை யுடையவனும், மயக்க மற்ற

நல்லறிவு படைத்தவனும், அருள் நிறைந்த மிகத் தூயவனு மாவான். நெடு நாள் வரைப் புத்திரப் பேறின்மையால் அவன், உளம் வருந்தி, மலரவனைக் குறித்துப் பல பகல் நற்றவம் மேற் கொண்டிருந்தான். அவனுடைய தவத்திற்கு வியந்து காட்சி தந்த நான்முகன், பரிவுடன் அன்னேனை நோக்கி, "உண்மைத் தொண்டனே! நீ புரிந்த அருந் தவத்தை மிக மெச்சினேன். ஆண் பிள்ளைகளைப் பெறும் நல்வினைப் பயன் உனக்கிலது; ஆயினும், மிக்க வல்லமை யுடைய மகள் ஒருத்தி உனக் குண்டாவாள். நீ நற்கதிக்கு ஆளாவாய்," என்று சொல்லி மறைந்தான். சுகேதுவும், தன் இல்லாளிடம் போய் இனிதாக வாழ்ந்திருந்தான்.

பிரம னுரைக்கிணங்கச் சின்னாட்குப் பின்னர் சுகேது வினுடைய மனைவி, கருப்பவதியா யிருந்து ஒரு பெண்மக வைப் பெற்றாள். அந்தப் பெண்ணே தாடகை யென்பா ளாவாள். வனப்பிலும் வல்லமையிலும் மிக்கவளா யிருந்த அந்தப் பெண்ணை அன்புடன் வளர்த்து வந்தனர் பெற்றோர். தம்முடைய மகள் மணத்திற் குரிய பருவத்தின ளாயதும் அவர், அவளுக்குத் தக்க கணவன் யாவன் என்பதைப் பற்றி யாய்ந்து, சுந்தன் என்னும் இயக்கர் தலைவனுக்கு அவளை மன்றலில் உதவினர். சுந்தனோடு இன்பத்துடன் வாழ்ந் திருந்த தாடகை, மக்க ளிருவரைப் பெற்றாள். அவர், மாரீசன் சுபாகு என்பவ ராவர். கொலை, வஞ்சனை, மாயை முதலிய கொடுந் தொழில்களுடன் பழகி வளர்ந்து அவர், தவத் தொழிலில் ஈடுபட்டிருந்த முனிவர் பலரை வருத்தத் தொடங்கினர்; ஒருநாள், சுந்தனுடன் அம்மக்கள், தமிழ் என்னும் அளப்பருஞ் சலதியைத் தந்த மா முனிவனுடைய ஆச்சிரமத்தைச் சார்ந்து, அவணிருந்த மரம் செடிக ளெல்லா வற்றையும் செருக்குடன் பறித் தெறிந்தனர்; இனிதாக

அங்கு வாழ்ந்திருந்த மான்களையும் மயில்களையும் துரத்தி யடித்தனர். தீதுடை அரக்கரால் உண்டாய தீமையை யொழிக்கப் பேரலைகளை யுடைய கடல் முழுவதையும் ஒரு கையால் மொண்டு பருகிய அகத்தியனார், அவ்வியக்கருடைய பொல்லாங்கைக் கண்டு, முனிவு கொண்டு, தழ லெழ விழித் தார். நொடிப் பொழுதிற் சுந்தன் சாம்பராய்த் தரையில் விழுந்து அழிந்தான். தந்தை யழிந்ததைக் கண்டு மைந்தர், தாயிடம் ஓடி அச்செய்தியை யுரைத்து அழுதனர்.

கணவன் இறந்தமைக்கு மனம் பொருளாய்த் தாடகை, மிக வெகுண்டு, "அகத்தியனை இன்னே இடித் துண்பேன்" என்று கூறிப் புதல்வருடன் அந்த மாதவரிடம் சென்று, அண்டகோளமும் வெடிபடப் பெருங்குரலுடன் அதட்டிக் கூவிப் போருக் கழைத்தாள். தவ மியற்றி யிருந்த குறு முனிவர், சாலச் சினந்து, அந்தத் தாடகையும் அவளுடைய புதல்வரும் அரக்கராய்த் தாழ்ந்து அலைந்து திரிந்து அழியும் படி அசனி யஞ்ச மெவ்வுரை வழங்கினர். உடனே அம் மூவரும் அரக்கராயினர்; குடமுனிவரை வெல்லத் தம்மா லாகா தென்பதை யறிந்து வெட்கமும் துக்கமும் சுமந்து திரும்பிப் போயினர்.

சுகேசன் என்னும் அரக்கன் ஒருவ னிருந்தான். அவ னுக்குச் சுமாலி, மாலியவான், மாலி என்னும் புதல்வர் மூவர் இருந்தனர். அவர், எண்ணிலா அரக்கர் கூட்டங் களுடன் இலங்கையிற் குடிபுகுந்து வாழ்ந்து, உலக முழு வதும் திரிந்து கடவுளர் முனிவரோடு மற்றை மக்களையும் வெருட்டி வருத்தி வந்தனர். அந்த அரக்கரால் உண்டாய துன்பத்தை யாற்றாராய்க் கடவுளர், உலகெலாம் அளந்த உம்பர் நாயகரை வேண்டி முறையிட்டனர். அவருடைய வேண்டுகோளுக் கிணங்கத் திருமால், எதிர்த்துப் போர்

புரிந்து கணக்கற்ற அரக்கரை வதைத்தனர்; மாலியும் இறந்து பட்டான். சுமாலி மாலியவான் நெடுமாலுக் கஞ்சி யோடிக் கீழுலகத்தில் மறைந் திருந்தனர். இலங்கை வெற்றிடமாய்க் கிடந்தது. அது கண்டு புலத்திய முனிவன் மைந்தனை குபேரன், தன் இயக்கர் குலத்தினருடன் சென்று இலங்கையிற் குடி புகுந்து, கோனுகி வாழ்ந் திருந்தான். சுமாலிக்குக் கேகசி என்னும் மகள் ஒருத்தி யிருந்தாள். அவள், புத்திரப் பேற்றை விரும்பித் தன் தந்தை யினுடைய தூண்டுதலால் குபேரனைப் பயந்த புலத்தியனிடம் சென்றாள். அம்முனிவனுடைய அருளால் அவ்வரக்கி, இராவணன், கும்பகர்ணன், விபீடணன் ஆகிய ஆண்மக்கள் மூவரைப் பெற்றாள். அம் மூவரும் வளர்ந்து நான்முகனைக் குறித்துக் கடுந் தவ மியற்றிப் பல அரிய வரங்களைப் பெற்ற னர். இராவணன், தன் இனத்தினராய அரக்கர்களுக் கெல் லாம் தலைவனுகி, அரக்கர் பலரோடு இலங்கைக்குச் சென்று குபேரனை யெதிர்த்தான்; கொடுஞ் சமராட வெழுந்தான். குபேரன், தன் குலத்தினரோடு இலங்கையை விட்டு வட திசைக் கண்ணதாய அளகாபுரியை யடைந்து அரசாண்டி ருந்தான். இலங்கைக்கு இராவணன் அரச னானன்.

அகத்தியருடைய சூளுரையை யேற்று மாரீசன் சுவாகு நெடுநாள் அலைந்து திரிந்து வருந்தினர்; அச்சுதருக்கு அஞ்சிக் கீழுலகத்தில் ஒளித்திருந்த சுமாலியை யணுகி அந்த அரக் கர் இருவரும், அவனை நோக்கி, "உனக்கு யாம் நற்புதல்வ ராவோம்," என்று சொல்லினர். அவனும், அவரை அபி மான புத்திரராகக் கொண்டிருந்தான். அதனால் இராவண னும், அவரை மாதுலராகப் பாராட்டி, அவருடன் சேர்ந்து உலகத்தி லிருந்த அறிஞர் பலர்க்கும் இன்னல் புரிந்து வந்தான்; இன்றும் மிகக் கொடியவனாய்த் திகழ்கின்றான்.

மக்களைப் பிரிந்து தாடகை, இவ்விடத் திருந்த காட்டை யடைந்து, இதையும் இதற் கக்கம் பக்கங்களிலு மிருந்த மருத நிலங்களையும் தன் கொடிய செயலால் இவ்வாறு பாலை வன மாக்கினுள். நிலவுலகத்தைப் பெயர்த் தெடுத்தல், கடலை வாரிப் பருகுதல், நீள் விசும்பை இடித்துத் தள்ளுதல் முதலிய அரிய தொழில்களையும் அவள் எளிதாகச் செய்யக் கூடிய அரக்கி யாவாள். அவளாலே இந்த அங்க நாடு முழுவதும் மருத வைப் பழிந்து கொடிய பாலை நிலமாயிற்று. அவள் இந்நாட்டி லிருக்கும் உயிர்களை எல்லாம் வாட்டித் தின்கின்முள்; இலங்கையிலுள்ள அரக்கரோடும், தன் புதல் வருடனும் வந்து என் வேள்வி முற்ருரு வண்ணம் பாழாக்கி வருகின்ருள்," என்று கூறி முடித்தான்.

முனிவனைப் பார்த்து இராமன், "அந்தக் கொடிய அரக்கி இருக்கும் இடம் எது," என்று கேட்கக் கோமுனி வன், "இந்நாட்டு வரம்புக் குள்ளேயே அவள் தங்கி யிருக் கின்ருள்," என்று சொன்ன அளவில், மலைகளைத் தன் காற் சிலம்புகளிற் பருக்கைக் கற்களாகச் செறித்த் தாடகை, அச் சிலம்புகள் ஒலிக்கக் கால்களைத் தரையில் ஊன்றி வைத்து மிக விரைந்து விசுவாமித்திர முனிவனை நோக்கி வந்தாள். அவள் வந்த விரைவால் நிலையியற் பொருள்களாய மலைகள் குன்றுகள் மரங்கள் முதலியனவும் அவளைப் பின் தொடர்ந்து பெயர்ந் தோடின. அவளுடைய அடிகளைத் தாங்க மாட் டாமல் நிலம் நெளித்ததனுல் ஆழ்ந்த குழிக ளுண்டாயின. அக்குழிகளிற் கடல் நீர் பாய லாயிற்று.

யமன் அஞ்சிக் குகையில் ஒடி யொளிக்க, உலகத் துயிர்க லெல்லாமும் விநிர்த்து விழ அங்ஙனம் போந்த தாடகை, கௌசிக முனிவனைப் பார்த்துப் பெரு முழக்க மிட்டு ஆரவாரித்தாள்; நகைத்தாள்; வாயை யகல விரித்

தாள் ; இராம லக்குவரோடு கோமுனிவனை விழுங்குவதாய் உணர்த்திக் கூத்தாடினுள் ; அவரை நோக்கி, " இறத்தற்காக ஊழ்வினை கழுத்தைப் பிடித்து நெட்டித் தள்ளி உங்களை இங்குக் கொண்டு வந்ததா ? அன்றி, ஈண்டிருந்த உயிர்களை எல்லாம் கொன்று தின்று இரை கிடைக்காமற் பசியால் உழல்கின்ற எனக்கு உணவு தா வேண்டு மென்று நினைந்து நீங்களே இங்கு வந்தீர்களா ? உங்களை வாட்டி வாழைப் பழத்தைப் போல் எடுத்து வாயிற் போட்டுக் கொள்கிறேன்," என்று கூறிக் கால்களால் பூமியை யுதைத்துச் சீறிக் கையில் நீண்ட வேலை யெடுத்து உயர்த்தினுள். அவளுடைய பேராரவாரத்தையும் பெருஞ் சினத்தையும் பார்த்துப் பெருந்தகையாய இராமபிரான் நகைத்துப் பெண்ணைக் கொல்லல் இழிந்த தாகுமே என்று மனத்திற் கொண்டு, அவ்வரக்கியை யெதிர்க்காம லிருந்தான்.

இராகவனுடைய எண்ணத்தை யறிந்து, அவனைப் பார்த்து அரசமாதவன், " அறிவில் உயர்ந்த அழகனே ! உன் மனக் குறிப்பை யான் அறிந்தேன். எனக்கும், என்னைப் போன்ற முனிவர்க்கும் தீயன வென்று இருந்தவற்றை யெல்லாமும் செய்து விட்டாள் இந்த அரக்கி. எங்களுடைய உடம்புகள் தவத்தினுல் வாடி இறைச்சியற் றிருத்தலால், இவை பசையுள்ளன வன்று என் றெண்ணி எங்களை யுண்ணு மல் இவள் விட்டிருக்கின்றுள். இப்படிப்பட்ட கொடிய வளையும் பெண்ணென்று நீ நினைத் திருக்க லாமோ ? இராமா ! உன்னுடைய எண்ணம் உயர்ந்ததே யாகும். பெண்களைக் கொல்லுதலாகிய தொழில், பலரும் எள்ளனஞ் செய்யத் தக்கதே யாகும் என்பதும் உண்மையே. ஆயினும், இந்த அரக்கியினிடம் பெண்கட் குரிய நாணம் முதலிய குணங்கள், சிறிதேனு மில்லனவாம். இவளுடைய

பெயரைக் கேட்டாலே மாவீரரும் அஞ்சி யோடி மறைகின் றனர். இவளை யெதிர்த்து நின்று பொர வல்லவன் எவனு மிலன். நாணம் இல்லாமையால் இவள் பெண் ணல்லள். ஆதலால், இவளைக் கொல்லுதலாய தொழில் எப்படிப் பெண் கொலை யாகும்? இந்திரன் முதலிய கடவுளரையும் அரக்கர் களையும் பறக் கடிக்கின்ற இவட்கும் ஆடவர்க்கும் வேறுபாடு யாது உளது? பொல்லாங்குடைய மகளிரைக் கொல்லலா மென்று மறையும் முறை யிடுகின்றது.

மானவ! மற்றும் கேட்பாயாக. இக்கொடியவ ளிடம் ஆண்மை யில்லை யென்று நீ சற்றும் எண்ணற்க. அறத்தைக் கெடுத்துப் பெரியோர்க்கு இவள் தீங் கிழைக்கின்றனள். இவளுடைய செயலைக் கருதி இவளை நன்றாய் வாட்டி யழிக்க லாம். யமனைக் கொடியவன் என்று உலகத்தினர் கூறுகின் றனர். அவனோ, ஆயுட்காலம் முடிந்தவரையே பார்த்து, உலகத்தில் அறத்தை நிலை நிறுத்தற்காக அவருடைய உயிர் களைக் கவர்ந்து, அவர் வினைக்குத் தகத் துறக்கத்திற் கேனும், அன்றி நரகத்திற் கேனும் அனுப்புகின்றான். இவளோ, அங்ஙனம் செய்கின்றவ ளல்லள்; தன் எதிரிற் பட்ட எத் தகைய உயிர்களையும் அறத்துக்கு மாறாக வதைத்து வாயிற் போட்டுக் கொள்கின்றாள். ஆதலால் இவள், யமனினும் மிகக் கொடியவ ளல்லளோ? அறத்தை யாய்ந்து சொல்லு கின்றேன்; இன்னமும் கேள். முன்னொரு காலத்திற் கடவுளர்க்கும் அரக்கர்க்கும் பெரும் போர் ஒன்று விளைந் தது. அந்தச் சண்டையிற் கடவுளர்க்குத் துன்ப முண் டாகுமாறு தோன்றவே திருநெடுமால், விரைந்து சென்று அரக்கரைத் துரத்தி யடித்தார். அவருட் பலர் அங்கனே மடிந்தனர்; சிலர் ஓடிப் போய்ப் பிருகு முனிவனுடைய ஆச்சிரமத்திற் புகுந்து, அவன் பன்னியாகிய கியாதி என்பா

ளிடம் அடைக்கலமாகச் சேர்ந்தனர். கியாதி, அந்த அரைக் கரை மறைத்துக் காத்தாள். அந்தக் கியாதியினிடம் சென்று திருமால், ஒளித்திருந்த அரக்கரைக் காண்பிக்குமாறு பன் முறை அவளைக் கேட்டார். அவருடைய மொழிக் கிணங்கக் கியாதி நடந்திலன். அதனல் அப்பெருமானர், சாலச் சினந்து முன்னர் கியாதியின் தலையை வெட்டித் தள்ளிப் பின்னர் அரக்கரை வாட்டிச் சென்றார். விரோசனன் என்பா னுடைய மகளாகிய மந்தரை என்னும் ஒருத்தி யிருந்தாள். அவள், தன்னுடைய கொடிய செயலால் குமதி என்னும் பெயரைப் பெற்றாள். அக்கொடியவள், விண்ண வரையும், மண்ணுலகத் துயிர்களையும் கொன்று உணவாக்கித் திரியலானுள், தன் வச்சிரப் படையால் உம்பர் கோன், அத்தீயவளைத் துணித் தழித்தான். அங்ஙனம் புரிந்த பெண் கொலையால் செங்கண்மாலுக்கும் இமையவர் அரசனுக்கும் மிக்க புகழ் உண்டாயதே யன்றிப் பழி ஒரு சிறிதேனும் நேர்ந்திலது. ஏனெனில், அச்செயல்கள் அறத்தைக் கருதி மறைக் கிணங்க நிகழ்ந்தனவே யாம். ஆதலால், நீயும் இந் தத் தாடகையை வதைப்பா யாயின், உனக்கு வரம்பற்ற புகழும் புனிதமும் உண்டாகுமே யன்றி இழிவு உண்டா காது. என் மொழியை யேற்றுத் தடையின்றி உடனே இவளைக் கொன்றழிப்பாயாக," என்று மொழிந்தான்.

பணிவுடன் இராமன் முனிவனைப் பார்த்து, "மாதவக் குரவரே! உம்முடைய உரையை மறை யெனக் கொண்டு நடப்பேன். அங்ஙனம் செய்த லன்றோ எனக்கு அறமாகும்," என்று சொல்லி, வரிசிலையைக் கையில் வாங்கி அம்பு பூட்டித் தாடகையை யெதிர்த்தான். பெரு முழக்க மிட்டுத் தாடகை, தன் கையி லிருந்த சூலப் படையைச் சுழற்றி இராமபிரானு டைய மார்புக்கு நேராகக் குறி யிட்டு எறிந்தாள். பகழி ஒன்

றேவி இராமன், எளிதில் அந்தச் சூலத்தைத் துகளாகத் துணித்து வீழ்த்தினான். எளிதிற் போர் புரிந்து பகைவரை யழிக்கக் கூடிய திறமையை யுடைய இராமபிரான் பகழி தொட்டதை ஒருவரும் அறிந்திலர். தாடகையின் சூலம் இற்றுத் துண்டங்களாய் விழுந்ததைப் பலரும் கண்டு உவகை கொண்டனர். மிக்க சீற்றங் கொண்டு தாடகை, தான் கற்ற மாயையால் இராமன் மீது கன்மாரி பொழிந்தாள். அந்தக் கல்மழையை அம்புகளால் தடுத்து ஆணழகன், சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம் ஒன்றை இருளைப் போன்ற கரு நிறத்தையுடைய அந்த அரக்கியின்மீது விட்டான். ஒப்பற்ற அந்த அம்பு, கல்வி யறிவு இல்லாத மூடர்களுக்கு நல்லறிவுடையோர் கற்பித்த பொருளைப் போலக் கல்லை யொத்த நெஞ்சத்தை யுடைய தாடகையின் மார்பில் தைத்து, அங்கு நிற்றலின்றி அவள் பின்புறத்தே யூடுருவி வெளிப் போந்தது.

ஊழிக் காலத்துக் காற்று வீசிய மாத்திரத்திலே அதன் விசையைத் தாங்கமாட்டாமல் மின்னல் இடிகளுடன் மேகம் கீழே விழுதலைப் போலத் தாடகை, கல்லை யொத்த தன் நெஞ்சிற் பாய்ந்த இராமபிரமன் விட்ட அம்பினுடைய விசையைத் தாங்கமாட்டாமல் அலறித், திக்குக ளெல்லாம் அதிர மண்மீது விழுந்தாள்; வாயினால் செந்நீரைக் கக்கினாள்; விக்கி உயிரை விட்டாள். அவளுடைய மார்பில் அம்பு பாய்ந்த இடத்தினின்று பேராற்றை யொப்பக் குருதிநீர், பெருக் கெடுத்து வடிந்தது; அந்தப் பாலை நிலம் முற்றிலும் பாய்ந்து, அதன் வெண்ணிறத்தைச் செந்நிறத்திற்கு மாற்றியது. அதனால் அந்தப் பாலைக் காடு, அந்திப் பொழுதில் தோன்றும் செவ்வானம் விண்ணிற் பிடிப் பின்மையாற் கீழே விழுந்ததைப் போலத் தோன்றியது. அங்ஙனம் தாடகை மாண்டதை அரக்கர் தலைவனான இராவணனுடைய அழிவைக்

குறிக்க உண்டாகிய ஓர் உற்பாதமாகச் சொல்லலா மன்றோ? அரக்க ருயிரைக் கவர எண்ணி இராவணனுக்கு அஞ்சி அங்ஙனம் செய்தற் கின்றித் திகைத் திருந்த யமன், காகுத்த னுடைய கன்னிப் போரால் அரக்கர் குலத் துயிரைக் குடிக் கச் சிறிது சுவை யறிந்தான். தாடகை மண்ணிற் சாய்ந்த தும் இமையவர் முனிவர் முதலியோர் அக மகிழ்ச்சியோடு பெருங் கூட்டமாகச் சென்று இராமபிரானுடைய திருவடி களை வணங்கினர்; அப்பெருமான்மீது மலர் தூவி வாழ்த்தினர். விசுவாமித்திர முனிவரை நோக்கிக் கடவுளர், "அரக்கரால் எங்களுக் குண்டா யிருந்த அச்சம் இனி யொழிந்தது. வேள்வி முதலிய நல்ல வேலைகளைச் செய்தற்கு இனிமேல் உமக்கு இடையூறு உண்டாவ தில்லை. நம்மை யாள வந்துதித்த இராமபிரானுக்குக் கடவுட் தன்மை பொருந்திய படைக்கலங்களை யருள்வீராக," என்று சொல்லி யகன்றனர். இராம லக்குவரை வாழ்த்தி வணங்கி முனிவர் முதலிய அறிஞர் அவ்விடத்தை விட்டு நீங்கினர்.

---

பிரிவு - ௰௫

# வேள்வியை முடித்தல்

எவராலும் எதிர்க்கக் கூடாத பொல்லாத தாடகையை யெளிதில் வீழ்த்திய இராமபிரானுடைய திறமையைக் கண்ட கோமுனிவன், வியப் பென்னுங் கடலுள் மூழ்கியவ னானான்; சிறிது நேரம் மெய்ம்மறந் திருந்தான்; உலகத் துயிர்க ளெல்லாமும் இனி உய்ந்தன என உட்கொண்டு, இராம லக்குவருக்குக் கடவுட் படைக ளெல்லாவற்றையும் அருளி னான். அப்படைக் கலங்க ளெல்லாமும், கல்வி யறிவால்

தெளிந்த மனத்தை யுடைய அறிஞர் புரிந்த நல்வினைப் பயன்கள் யாவும், மறுபிறப்பில் அவரைத் தேடி வந்து அடைதலைப் போல் இராமனிடம் அடைக்கலமாகத் தேடி வந்தடைந்தன; இராமனுக் குரிய குற்றேவல்களைச் செய்ய விழைந்தன. விசுவாமித்திரன் அவ்விடத்தினின்று அன்புடன் இளவரசரை அப்புறம் அழைத்துப் போனான். காத மிரண்டு கடந்ததும் பேரரவம் ஒன்று அவருடைய காதுகளுக் கெட்டியது. எதனால் அந்த ஓசை யுண்டாகின்ற தென்று முனிவனை நோக்கி முன்னவன் கேட்டான். அமரராலும் போற்றப்படும் விழுமிய நதியாகிய சரயுவிற் கோமதியாறு விழுதலால் அவ்வொலி யுண்டாகின்றது என்பதை அப்புதல்வரிடம் தெரிவித்து, அவரை அப்பாற் சிறிது தூரம் அழைத்துச் சென்றான் அரசமாதவன். மகிழ்ச்சியோடு நடந்து அம்மூவரும் தன்னில் நீராடுகின்றவருடைய தீவினையை யொழிக்கின்ற தாய தூய தோர் ஆற்றை யடைந்தனர். சுரர் தொழுதிறைஞ்சற் கொத்த புனிதமான அந்த ஆறு எத்தன்மையது என்று வாமுனிவனை இராமபிரான் கேட்க, அந்நதி கௌசிகி என்னும் பெயரை யுடைய தென்பதையும், கௌசிகி என்பாள் தன்னுடன் பிறந்தவ ளென்பதையும், அவள் ஆறாகிப் பூமியிற் பாய்ந்த வரலாறு இன்ன தென்பதையும் மன்னன் மைந்தருக்குக் கோசிக முனிவன் எடுத்தோதினான்.

அந்த வரலாற்றினைக் கேட்டுச் செம்மலும் இளைய கோவும் மிக்க வியப்படைந்தனர். அவ்விடத்தைக் கடந்து மூவரும் சிறிது தூரம் சென்றனர்; மிகச் செழுத்தோங்கியிருந்த தொரு பெரிய சோலையைக் குறுகினர். மைம்மலி அப்பொழில யாது என்று மானவன் கேட்க, அதற்கு மாதவன், "நான்மறையாலும், கடவுளராலும், முனிவர் மற்றையோராலும் காண்டற் கரிய செங்கண்மால் முன்னொரு

காலத்தில் ஈண்டிருந்து தவஞ் செய்ததால் இச்சோலை, தாம் கொண்ட நாயகரையே கண்கண்ட கடவு ளெனவும், தவ மெனவும் கொண்டு வழிபட்டு வாழ்கின்ற மங்கையர் மனங்களைப் போல் மிகத் தூய தாகும். எங்கும் யாவராலும் எப்பொழுதும் துதிக்கப்படும் முழுமுதற் கடவுளாகிய திருமால், யாது பயனைக் கருதி இங்கு நெடும்பொழுது தவ மியற்றினரோ? அந்த அமல மூர்த்தியினுடைய திருவுள்ளத் தை யாவர் அறிவர்? ஒருகால், தவம் இயற்றும் தன்மை இத்தகையது என்பதையும், ஆசிரியனிடம் மாணுக்கன் நடந்துகொள்ள வேண்டிய முறை இத்தன்மைத்து என்பதை யும் உலகத்தினர்க்கு உணர்த்த அங்ஙனம் செய்தனரோ, யான் அறியேன்.

திருமால் தவஞ் செய்திருந்த அந்நாளில், வாமன மூர்த்தியை யொப்ப திறல் விஞ்சிய மாவலி என்னும் மன் னன் ஒருவ னிருந்தான். அவன், தன்னுடைய நிகரற்ற ஆற்றலால் மண்ணுலகத்தோடு விண்ணகத்தையும் பாதாளத் தையும் கவர்ந்து தன்னுடையன வாக்கினன். அவ்வுலகங் களினுடைய அரசியலைத் தன் அமைச்சரிடம் ஒப்புவித்து அவன், யாவராலும் செய்தற் கரிய திருமாலுடைய ஆராதனை வடிவமாகிய ஒரு வேள்வியைச் செய்யத் தொடங்கினன்; வேண்டுவார்க்கு வேண்டியவாறு பூமி முதலிய எல்லாப் பொருள்களையும் வழங்க, அந்தணர்களிடம் அப்பொருள்களை யளித்தான். அதை யறிந்த வானவர், அனற் கடவுளை முன்னிட்டுச் சித்தாச்சிரமத்தி லிருந்த திருமாலிடம் சென்று, அவருடைய திருவடிகளைப் பணிந்து மாவலியால் தமக் குற்ற பொல்லாங்கை மொழிந்து, அவன் மேற்கொண்ட வேள்வி முடிவடைதற்கு முன்பே சென்று, வேண்டிய வற்றை யெல்லாம் தரக்கூடிய அவனிடம் கேட்டுத் தம் முடைய நாட்டைப் பெற்றுக்கொடுத் தருள அவரை வேண் டித் துதித்தனர். பொன்னாட்டைத் தந்து காத்தருள்வதாய் நேமியான் தெரிவித்ததும் இமையவர், அக்கடவுளை வணங்கி வாழ்த்தித் திரும்பினர்.

காசிப முனிவன், தன் இல்லாளாகிய அதிதியுடன் பல்லாண்டுகள் வரை நெடுமாலைக் குறித்து ஒரு நோன்பை மேற்கொண்டிருந்து முடித்தான். அந்நோன்பிற்கு மகிழ்ந்த திருமால், அம்முனிவன் முன் தோன்றிக் காட்சி தந்து, அவனுக்கு வேண்டிய வரத்தைக் கொடுத்தருள்வதாய்த் திருவாய் மலர்ந்தருளினர். அக்கடவுளைப் பணிந்து காசிபன், "என்னை யாளுடையீர்! என் மனைவி அதிதியினிடம் நீர் மைந்தராய்ப் பிறந்து உபேந்திரராகி அரக்கரை யழித்து இமையவருடைய இடரைப் போக்கி அனைத் துயிரையும் காத்தருளல் வேண்டும்," என்று இறைஞ்சினன். அவ்வேண்டுகோளுக்குத் திருமால் இசைந்து, அதிதியின் புதல்வராய்த் தோன்றி வாமனரானர். அங்ஙனம் காசிப முனிவன் அரிய நோன்பை முடித்துச் சித்தி பெற்ற இந்த இடத்திற்குச் சித்தாச்சிரமம் என்னும் பெயர் வழங்கலாயிற்று. எவராலும் அறிதற்கு அரியராகிய அக்கடவுள், பெரிய ஆலமரம் முழுவதும் உள்ளே யடங்கி யிருக்கப் பெற்ற சிறிய வித்தைப்போல் மிக்க குறுகிய வடிவத்துடன் தோன்றிச், சின்னாள் தவமியற்றி, முப்புரி நூலணிந்து, முஞ்சிப் புல்லாலாகிய அரைநாண் கயிற்றைக் கட்டி, மறைபயிலும் நாக்குடையராய், நெருப்புப் பொருந்திய திருக்கைகளுடன் மாவலியிடம் சென்றார். அவ்வாறு அழகிய பிரமசரிய கோலத்துடன் சென்ற குட்டைக் குமாரரைப் பார்த்து மாவலி, அக மகிழ்ந்து அவரை அன்புடன் வரவேற்று முகமன் கூறினன்; அவருடைய முகப் பொலிவை யுற்று நோக்கி, "நின்றனின் சிறந்த அந்தணர் யாருளர்," என்று அவரிடம் சொல்லிக் கொண்டாடினன்.

மாவலியைப் பார்த்து வாமனர், "வேண்டினர் வேட்கைக்கு மேற்பட வீசி யளிக்கும் நீண்ட கைகளை யுடைய மன்ன! உன்னிடம் யாசிக்க வந்தவர் மாட்சிமைப் பட்டவராவர். அங்ஙனம் வாராதவர் மாண்பில ராவர்," என்று அவன் கொடையை யுயர்த்திக் கூறினர். அதற்குச் சிந்தை யுவந்து மாவலி, "உமக்கு என்ன வேண்டும்," என்று கேட்க, மாய அந்தணர், "வெந்திறலாய்! எனக்கு வழங்க

உன்னிடம் அருளுளதாயின், மூன்றடி மண் கொடுப்பாய், எனக்கு வேண்டியது அஃதே யாகும்,'' என்று கேட்க. மாவலி, "அங்ஙனமே தந்தேன்,'' என்றான். அவ்வேளை மாவலியினுடைய அமைச்சனாகிய வெள்ளி, அவ்வரசனைத் தடுத்து, அவனை நோக்கி, "நம்மெதிரில் வந்துள்ள இந்த வாமனனை அந்தணன் என்று கொள்ளற்க. இவன் நம்மை வஞ்சிக்க வந்துள்ளவனாவான். கொண்டல் நிறத்தை யுடைய இந்தக் குறளன் மேனாள் எல்லா உலகங்களையும், அவ்வுலகங்களி லிருந்த பொருள்களெல்லாவற்றையும் ஒருங்கே உண்ட ஒரு தனி முதல்வனாவான். இவனுக்கு எதையும் கொடுக்க உடன் படாதே; கேடு நேரும்,'' என்றுரைத்தான்.

வெள்ளியை மறுத்து மாவலி, யாவரினுஞ் சிறந்த திருமாலே தம் பெருமை யிழந்து சிறிய யாசகனாய் என்னிடம் வந்து ஒரு பொருளை யிரக்க, அவருடைய திருக்கைகள் என் கைக்குக் கீழிருக்க அவர் விரும்பிய பொருளைக் கொடுத்துப் பெருமை பெறுதலினும் மிக்க சிறப்புடையது எனக்கு வேறு யாதுளது? சற்றும் இதைக் குறித்து நீ ஆராய்ந்து பார்க்காமல் என்னைத் தடுக்கின்றனையே? தன்னினர் தன்னலர் என்பதைக் கருதாமல் இட மறிந்து கொடுக்க வேண்டுமென்பதே அற நூல்களினுடைய துணிபாகும். ஆதலால், உன் கூற்று நீதியான தன்று; நீ வெள்ளியை யாதலால் இவ்வாறு விளம்பினை போலும். இன்னவர்க்குக் கொடுக்கலாம் இன்னவர்க்குக் கொடுக்க லாகா தென்றும், இன்னதுதான் தரலாம் இன்னது தரலாகா தென்றும், இந்நேரத்தில் வழங்கலாம் இந்நேரத்தில் வழங்க லாகா தென்றும் ஒரு வரையறை யின்றித், தமக் கென்று ஒரு பொருளையும் வைத்துக் கொள்ளாமல், யாசகர் எவரா யிருப்பினும், அவர் விரும்பிய பொருள்கள் எவையா யிருந்தாலும் தடையின்றி வழங்குதலே சிறந்த வள்ளியோருடைய கொடை யாகும். இனிய உயிரையே யானாலும் யாசித்துப் பெறுதல் தீதாகும். இனிய உயிரை யேனும் இரப்பவர்க்குக் கொடுத்தல் நல்லதாகும்.

இறந்தவர் என்று சொல்லப்படுகின்றவர் உண்மையில் இறந்தவர் அல்லர். உயிரை விடாமல் கைகளை யேந்தி இரப்பவரே இறந்தவ ராவர். இரத்தல் மரண வேதனையினும் மிகக் கொடிய தாகும். ஈந்து வாழ்ந்தவர் இறப்பினும் உயிரோ டிருப்பவரே யாவர். இரப்பவர்க்கு ஈதலைத் தடுக்கின்றவர் யாதினும் கொடிதாய நரக வேதனைக் குட்பட்டு அழிவர். அற நூற்களிற் காணும் உறுதியான உரைகளைக் கடைப்பிடித்துத் தாம் செல்வராயுள்ள போதே இரப்போர்க்குக் கொடுத்து, அதனால் இம்மையில் நல்லிசையையும், மறுமையில் அழிதலற்ற இன்பத்தையும் பெறுதலே அறிஞர், இப்பிறவியை யடைந்ததனாலாய பயனைப் பெற்றவ ராவர். கொடுத்தலைத் தடுக்கின்றவர் மிகக் கொடிய பகைவ ராவர். இந்த வாமனனுக்கு வழங்கு முன்னமே என்னைத் தடுக்கின்றனையே நீ. இஃது உனக்கு அழகாகாது; அறமுமாகாது. இக்கொடிய செயலால் நீ சுற்றமும் உணவும் உடையும் இழந்தவ னானாய்," என்று அந்த வெள்ளியை நோக்கிச் சினந்து கூறி, மா மாயனைப் பார்த்து, "அடியொரு மூன்று அளந்து நீர் கொள்வீராக; தந்தேன்," என்று சொல்லி, அந்நெடியவனுடைய குறிய கையில் நீருடன் வழங்கினான்.

மூவடி மண் கொள்ள மாவலி வழங்கிய நறும்புனலைக் கையிற் பெற்றதும், பயந்தவரும் இகழத் தக்க கள்ள வேடம் புனைந்து குள்ளனாரா யிருந்த அல்மணி நிகர்க்கும் வண்ணர், உயர்ந்தவருக் குதவிய உதவியை யொப்ப ஓங்கி வளர்ந்து, யாவரும் அஞ்சி வியக்கக் கூடிய அளவிடற் கரிய பேருருக் கொண்டு திருவிக்கிரமனாராக விளங்கினார்; தம்முடைய ஓரடியால் நிலவுலக முழுவதையும், மற்றோர் அடியால் மேலுலக முற்றிலும் அளந்தார்; மாவலியை நோக்கி, "மூன்றடி மண் தந்தேன் என்று நீ செப்பினை யன்றோ? இரண்டடிகளுக்கே எல்லா உலகங்களும் நேராயின. இப்பொழுது மற்றை யோர் அடிக்கு இடம் காண்பிப்பாய்," என்று வினவ, உடனே மாவலி, "இல் குலாம் துழாய் முடி ஏக நாயகரே! தம்முடைய மூன்றும் அடிக்கு அடியேனுடைய முடியே யுளது," என்று விடையளித்து வணங்கி நிற்க, தம்

திருவடி ஒன்றை அவனுடைய தலைமேல் வைத்தழுத்தித் திருமால், அவனைப் பாதளத்திற் சேர்த்தார்; எல்லா உயிர் களையும் உய்யக் கொண்டு வானுலகத்தை வலாரிக்குத் தந்து விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினார். வாமனராகிய திரு மால் தவஞ் செய்திருந்ததால் இவ்விடத்திற்கு வாமனாச்சிர மம் என்னும் ஒரு பெயரும் உண்டாயிற்று," என்று அச் சோலையினுடைய பெருமையைக் கூறி முடித்தான்.

"குரிசில்காள்! கையிலாழி யெடுத்தருள் காகுத்தனும் காசிபனும் தவஞ் செய்திருந்ததால் இவ்விடம் சாலப் புனித மான தாகும். இச்சோலையை அன்புடன் கண்டவர் மீண்டும் பிறப்பை யடைய மாட்டார். ஆதலால், வேத நூல் முறைப்படி வேள்வி யியற்றி முடிக்க எனக்கு இவ் வாச்சிரமமே தக்க இடமாகும்," என்று தயாதன் புதல் வரைப் பார்த்து மொழிந்து, அவரை ஓர் இடத்தி லிருத்தி அரசமாதவன், தன் யாகத்திற்கு வேண்டிய பொருள்களை அச்சோலையி லிருந்த ஒரு நெடு நெறியே சென்று விரைவிற் கொணர்ந்து சேர்த்தான்; ஓர் ஆச்சிரமம் அமைத்தான்; அரக்கரால் தன் வேள்விக்குத் தீங்கு நேராம லிருக்க யாவ ராலும் கண்டு மகிழத் தக்க இள மன்னரை அங்குக் காவலாக வைத்து, யாகத்தை முறையே யியற்றி முடிக்க உட்கார்ந் தான். பிறரால் நினைத்தற்கும், சொல்லுதற்கும், செய்தற் கும் முடியாத தாகிய அருமையான அந்த வேள்வியை அரசமாதவன், விண்ணவர்க்காக ஆறு நாட்கள்வரை யியற்றி முடித்தான். அந்த யாகத்தைக் கண்ணைப் காப்பாற்று கின்ற இமைகளைப் போலத் தயாதன் மைந்தர் காத்தனர். கண்ணிமை இரண்டனுள் மேலிமை, பெரியதும் இயங்குந் தன்மை யுடையது மாகும்; கீழிமை, சிறியதும் அசைவின்றி யிருப்பது மாகும். மேலிமையைப் போலப் பெரியோனாகிய இராமன், நிலை பெயர்ந்து அரக்கர் நெருங்காம லிருக்கக் கோமுனிவனுடைய ஆச்சிரமத்தைச் சகடக்கால் போல் நாற்றிசையினும் சுற்றித் திரிந்து, இமைக்குந்தோறும் கீழிமையை மேலிமை தொடுதல் போல் ஒவ்வொரு சுற்றிலும் இலக்குவனைக் கையினால் தட்டி எச்சரித்து வந்தான்; ஆச்

சிரமத்தினுள் ஒருவரும் நுழையாம லிருக்க, அதன் வாயிலில் நிலைத்து நின்று சிறியவனாகிய இலக்குவன் காவல் புரிந்தான்.

வேள்வியைத் தொடங்கிச் சற்று நேர மாயதும் முனிவனை நோக்கி மூத்தவன், "தீத்தொழில் இயற்றுவர் என்று நீர் உரைத்த அரக்கர் இங்கு எப்பொழுது வருவர்" என்று வினவினான். அதற்கு முனிவன் மறுமொழி பகர்த லின்றி மௌனமா யிருந்தான். முனிவனைப் பணிந்து இராமன் விசும்பை நோக்கினான்; வானகத்து வழியே அரக்கர், அம்புகளை யெய்தியும், வேல், வாள், மழு, குந்தம் முதலிய படைக்கலங்களை வீசியும், நெருப்பைக் கக்கியும், நீரைப் பெய்தும், மலைகளையும், மாங்களையும் பறித் தெறிந்தும், விசுவாமித்திர முனிவனைப் பலவாறு இழித்துரைத்தும், பல மாயைகளைச் செய்தும் வரக் கண்டான்; தன் வில்லம்புகளை யுறுதியாகக் கொண்டான். அரக்கர் எல்லாரும் பெருங் கூச்சலிட்டுக் கோமுனிவனுக்கு நேராக விண்ணிற் போந்து பெருங் கூட்டமாகக் குழுமினர்; பலவகை வாத்தியங்களைக் குறுந் தடிகளால் இடிபோல் அடித்து முழக்கினர். அவரைத் தன் தம்பிக்குக் காண்பித்தான் இராமன். அரக்கரை நோக்கித் தன் வில்லையும் நோக்கினான் இலக்குவன். "அக் கொடியவரைத் துண்டங்களாக வெட்டி வீழ்த்துவேன்," என்று சொல்லி அவன் துடித்து நின்றான். அரக்கரால் உண்டான பேரரவத்தைக் கேட்டு அந்தச் சோலையினிடம் தவமியற்றி யிருந்த முனிவ ரனைவரும், வெருக் கொண்டனர்; விசும்பிற் போந்த அரக்கரைக் கண்டு அஞ்சி விதிர்த்தனர்; ஓடி இராமனிடம் அடைக்கலமாகப் புகுந்தனர். அச்சத்தை யொழித்து அமைதியுட னிருக்குமாறு இராமன், அவரிடம் தெரிவித்தான்.

வானி லிருந்து ஆர்த்து அரக்கர், பல படைகளை விட்டு இராம லக்குவரை யெதிர்த்துப் பெரும் போர் புரியத் தொடங்கினர். அஞ்சன வண்ணனும் இளைய கோவும், அவ்வரக்கரை யெதிர்த்துப் பலவாறு தாக்கி வாட்டினர். அரக்கருடைய செந்நீர் அம்புகள் முதலியவை அரசமாதவன் மீதும், அவன்றன் வேள்வித் தீயினிடமும் விழாமல் தடுக்க

இராமபிரான், சரக்கூடம் ஒன்றை அக்கோமுனிவனுடைய இருக்கைக்கு மேலே கட்டினான். இராமலக்குவ ரிருவரும், பல்வகைப் படைக்கலங்களைத் தொடுத்து, அரக்கர் பதை பதைத்து விழ வாட்டினர்; கணக்கற்ற அரக்கருடைய தலைகளைக் கொய்து குவித்தனர்; பல அரக்கருடைய கை கால்களைச் சிதைத்துத் தள்ளினர்; எண்ணற் கரிய இராக்கத ருடைய உடம்புகளைத் துண்டித்து வீழ்த்தினர். சிறிது நேரம் கொடுமையாகச் சண்டை செய்த பின் இராமபிரான், வலிய வாளிகளைத் தொட்டுத் தாடகை பெற்ற வீரருள் ஒருவனாகிய சுபாகுவைக் கொன்று யமபுரத்திற் சேர்த்து, மற்றொருவனாகிய மாரீசனைக் கடலில் தள்ளினான். ஏனைய அரக்கர் எல்லாரும் இராமனுடைய படைக்கலங்களுக்கு அஞ்சியோடினர். சண்டையும் ஒழிந்தது. புனித மாதவர் அனைவரும் ஆசி கூறி இராம லக்குவரை வாழ்த்தினர். புது மலர் சொரிந்து புத்தேளிர் பலரும், அயோத்தி அரசரை வாழ்த்தினர்.

முதுமறை மொழிப்படி முனிவன் வேள்வியை முடித் தெழுந்தான்; பேருவகையுடன் கோசலைப் புதல்வனைப் பார்த்து, "உலகங்க ளெல்லாவற்றையும் படைத்து மணி வயிற் றடக்கிக் காக்கின்ற நீ, பொருளல்லாத என்னை ஒரு பொருளாக மதித்து வந்து என் வேள்வியைக் காத்தனை என்று சொல்லுதல் உனக்குச் சிறப்புடைத் தாகுமோ? யான் இயற்றிய நல்வினைப் பயனே இவ்வாறு என் யாகத்தைக் காக்க உன்னை யழைத்து வந்தது என்று கொள்ளுதலே பொருத்த முடைய தாகும்," என்று சொல்லி வியந்தான்; அந்நாள் முழுவதும் அந்தச் சோலையில் இராம லக்குவருடன் இனிதாகத் தங்கி யிருந்தான். அரிய தொரு வேலையை முடித்த அம்மூவரும், மிக்க களிப்புடன் அன்றிரவு ஆண்டிருந்த ஓர் ஆச்சிரமத்திற் படுத்துக் கண் வளர்ந் தனர்.

---

## பிரிவு - ௰சு

# சீதையின் திருமணம்

சிறந்த வேள்வி முடிந்த மற்றைநாட்காலை அம்மூவரும் கண் விழித்தெழுந்து காலக் கடன்களை முடித்து ஓர் இடத்தில் உட்கார்ந்தனர்; சற்று நேரம் மகிழ்ச்சியுடன் பேசியிருந்தனர். அரசமாதவனை நோக்கி இராமன், "இன்று யான் செய்யும் பணி யாது," என்று கேட்க, அச்செம்மலைப் பார்த்துக் கௌசிகன், "ஐய! உன்னால் முடித்தற் கரிய பணியு மொன்று உளதோ? மிதிலையர் கோமானாகிய சனகன் அரிய தொரு யாகத்தைச் செய்கின்றான். நாம் சென்று அதைச் காண்போம்," என்று சொன்னான். உடனே அம் மூவரும் எழுந்து மிதிலையை நோக்கிச் சென்றனர்; நெடுந் தூரம் நடந்து சோணை யாற்றை யண்மினர். கதிரவன் மறைந்தான். பேரிருள் மூடியது. அந்நதிக் கரையி லிருந்த நறு மலர்ச் சோலையில் அம்மூவரும், அவ்விராப் பொழுதைக் கழிக்கத் தங்கினர். சொல்லுதற் கரிய தன்மைத்தாய சிறந்த அழகுடன் விளங்கிய அச்சோலையைப் பார்த்து வியந்த இராகவன், அதைக் குறித்து விசுவாமித்திரனிடம் வினவினான்.

வினையெலாம் அறநோற்ற கோமுனிவன், காகுத்தனைப் பார்த்துச் "செந்தாமரைக் கண்ண! காசிப முனிவனுடைய மனைவியருள் ஒருத்தியாகிய திதி, தன் மைந்தராய அரக்கர் விண்ணவரால் அடியுண்டு மாண்டமைக்கு மிக்க துயரத்தை யடைந்து இந்திரனைக் கொன்று மூவுலகங்களையும் ஆள வல்ல புதல்வன் ஒருவனைப் பெற விரும்பித் தன் கணவனுடைய கட்டளையைப் பெற்று, இவ்விடத்தை யடைந்து பன்னாள் தவம் புரிந்தாள். ஆதலால், இச்சோலை மிக்க பெருமையுடைய தாகும். இவ்வுலகத்திற் கப்பாலுள்ள என்னையாளுடைய கொண்டல்வண்ணான் வீற்றிருக்கும் பரம பதத்தை யடைந்து விஞ்சையர் கோதை ஒருத்தி, செந்தாமரை மலரைத் தனக்கு மென்மையான இருப்பிடமாகக் கொண்ட திருமகளைப் புகழ்ந்து துதி பாடினாள். செந்

தாமரைச் செல்வி உள மகிழ்ந்து வண்டறு மதுமலர் மாலையை அவ்வித்தியாதரப் பெண்ணினிடம் கொடுக்க, அதை அன்புடன் ஏற்றுத் தன் யாழிடைப் பிணித்து அக்கன்னி, அயனுலகத்தை நாடிச் சென்றாள். அம்மாதைக் கண்டு துருவாச முனிவன், "என்னை யாளுடைய நாயகிக்கு இசையெடுப்பவள் இவ ளாவாள்," என்று சொல்லி, அக்கன்னியின் தாளிணையை வணங்கி நின்றான். அவ்விஞ்சையர் மாது, தன்னிட மிருந்த மாலையை அந்தத் துருவாச முனிவனுக்கு அன்புடன் அளித்தாள். அதைப் பெற்று அம்முனிவன், "உலகம் யாவையும் படைத் தளித்து உண்டு உமிழ் ஒப்பற்ற கடவுளுடைய இலகு மார்பாகத் திருந்து உயிர் யாவையும் ஈன்ற திலக வாணுதலையுடைய என் அன்னை சென்னியிற் சூடிய தெரியலை யான் இன்று பெற எத்தகைய தவத்தைச் செய்தேனோ," என்று சொல்லி மகிழ்ந்து, அம்மாலையைத் தலையிற் சூடி இந்திரனுலகம் சென்றான்.

உம்பர் நாட்டை யடைந்த துருவாசன், ஐராவதக் களிற்றின்மீது அமர்ந்து செப்பருஞ் செல்வியுடன் புரந்தரன் பவனி வரக் கண்டான்; மகிழ்ச்சி மிகக் கொண்டான்; தான் கொணர்ந்த மாலையை அவனுக்குச் சூட்டி அழகு பார்க்கக் கருத்துட் கொண்டான்; அம்மாலையை யெடுத்து இந்திரனிடம் நீட்டினன். அதைப் புருகூதன், தன் கையிலிருந்த தோட்டியால் வாங்கி ஐராவதத்தினுடைய எருத்திடை யிட்டான். உடனே அந்தக் களிறு அம்மாலையைத் தன் துதிக்கையால் எடுத்து மண்ணில் மோதிக் காலால் மிதித்துப் பாழ்ப் படுத்தியது, அச்செயலைக் கண்டு துருவாசன் மிக வெகுண்டான்; இந்திரனுடைய செல்வங்களெல்லாம் கடலில் விழுந்து அழியச் சூளுரை யிட்டான். வெய்ய மாமுனிவனுடைய வெவ்வுரைக் கிணங்க அப்பொழுதே வானுலகத்துச் செல்வங்க ளெல்லாமும் உவரி புக் கொளிக்கத் தொடங்கின. பிணி பசி மூப்புத் துன்பங்கள் விண்ணவரை நெருங்கி வருத்தலாயின.

தனக்கு நேர்ந்த துன்பத்தை நீக்கிக் கொள்ள இந்திரன், நான்முகனையும் சிவபெருமானையும் அழைத்துச் சென்று

பாற்கடலை யடைந்து, திருமகட் டலைவனுடைய திருவடிகளைத் தொழுது குறை கூறி முறையிட்டான். அப்பெருமானுர் பாற்கடலைக் கடையுமாறு கட்டளையிட, அங்ஙனமே செய்வதாய்ச் சொல்லி அமரேசன் திரும்பினுன். மந்தரமலையை மத்தாகவும், வாசுகியைக் கடை கயிருகவும் கொண்டு கடவுளர் ஒரு புறமும், அரக்கர் மற்ருெரு புறமுமாக நின்று, வாசுகியை வலித்துப் பாற்கடலைக் கடைந்தனர். மந்தரமலை ஒரு புறமாகச் சாயத் தொடங்கியது. அதைக் கண்ணுற்றுத் திருமால், ஆமையாக உருக்கொண்டு பாற்கடலினுட் சென்று, மந்தர மலையைத் தம் முதுகின்மீது ஏந்திச் சாயாமல் நிமிர்ந்து நிற்கச் செய்துதவினுர். அங்ஙனம் கடைந்ததால் மறைந்துபோன இந்திரனுடைய செல்வங்களெல்லாமும் உண்டாயின. அவற்றுடன் அமுதமும் எழுந்தது. அதைப் பெறக் கடவுளருடன் அரக்கர் பிணங்கினர். நெடுமால், சிறந்த மோகினி வடிவங்கொண்டு பாற்கடலில் தோன்றிய பொருள்களை உரியவர்க்குப் பங்கிட்டுக் கொடுத்து அமுதத்தைக் கடவுளர்க்கே தந்தனர். அதனுல் இமையவருக்கும் இராக்கதருக்கும் கொடிய சண்டை யுண்டாயிற்று. அந்தப் போரில் அரக்கரைக் கொன்று வானவரே வெற்றி பெற்றனர். அரக்காய தன் மைந்தர் இறந்தமைக்குத் துக்கித்துத் திதி, இமையவரைக் கொல்லத் தக்க ஒரு மைந்தனைப் பெற இங்குத் தங்கி நெடுங்காலம் தவஞ் செய்தாள்.

கணவனுடைய கட்டளையை யேற்று அங்ஙனம் தவமியற்றி யிருந்த திதி கருப்பவதி யானுள். அச்செய்தியை யறிந்த இந்திரன், மாறு வேடம் பூண்டு சென்று அந்தத் திதியினிடம் அடிமையாளாக அமைந்தான். தன் தவம் முற்றுப் பெறப் பத்தாண்டுகள் எதிர் பொழுதாக விருந்த காலத்து ஒரு நாள் அவள், அயர்ந்து தூங்கினுள். அந்நேரத்து மேலுலகத் தரசன், தன் வச்சிரப் படையால் அவளுடைய கருப்பத்தை எழு துண்டங்களாகச் சிதைத்தான்; திதியினுடைய வேண்டு கோளுக் கிணங்கி அத்துண்டங்களேழும் மருத்துக்கள் எழுவரா யிருக்க அருள் புரிந்து களிப்புடன் வானுலக மேவினுன். தன் எண்ணம் முற்றுப் பெருமைக்கு.

மன முளைந்து நிதி, தன் இருப்பிடத்தைச் சேர்ந்தாள்,'' என்று நிதியின் தவத்தையும், அச்சோலையினுடைய பெருமையையும் தெரிவித்தான்; அவ்விடத்திற் கருகி லிருந்த சரவணப் பொய்கையினுடைய தன்மையையும் உரைத்தான். நிதி தவ மியற்றிய சோலைக்குள் தக்கதோர் இடத்திற் படுத்துறங்கி அம்மூவரும், அவ்விரவைக் கழித்தனர்.

மற்றைநாட் காலையம் பொழுதிற் கண் விழித் தெழுந்து காலக் கடன்களை முடித்து மூவரும், அச்சோலையை விட்டு நீங்கினர்; சிறிது தூரத்திருந்த கங்கை யாற்றங் கரையைக் குறுகினர். இராமபிரான் கேட்க அரசமாதவன், பகலவன் மாபினுதித்த சகரன் என்னும் மன்னன் அயமகம் புரிந்து முடிக்கக் குதிரையை விட்டதும், அதைக் கொண்டுபோய் அமராவதிக் கரசன், பாதளத்தில் தவம் புரிந்திருந்த கபில முனிவனுக் கருகிற் பிணித்து ஒளித்ததும், சகரனுடைய மக்கள் அறுபதினுயிரவர் உலக முற்றிலும் தேடி அந்தக் குதிரையைக் காணுமையின் கீழுலகத்தில் தேடிப்பார்க்கப் பூமியைத் தோண்டிக் கபில முனிவனிடம் தங்கள் குதிரை யிருக்கக் கண்டு வெகுண்டு அம்முனிவனை யெதிர்க்க, அவன் கண் விழித்து அந்த அறுபதினுயிரவரையும் எரித்துச் சாம்பராக்கி யொழித்ததையும், அவர் குலத் துதித்த பகீரதன் அரிய மாதவ மியற்றி ஆகாய கங்கையைப் பூமியிற் கொணர்ந்து தன் முன்னோர் மடிந்த இடத்திற் பாயச் செய்து, அவரை நற்கதியில் உய்த்தது மாகிய செய்தியை யெடுத் தியம்பினன்.

கங்கையைக் கடந்து முனிவனேடு இள மன்னர், விசாலை என்னும் நகரத்தைச் சேர்ந்தனர். அந்நகரத்து அரசன் எதிர் நோக்கிச் சென்று பணிந்து அம்மூவரையும் முகமன் கூறி வரவேற்றுச் சிறப்பித்தான். நல்லுரை யாடி மகிழ்ந்து அவ்விடத்தினின்று நீங்கி அவர், பல் வளங்களையும் நிரம்பப் பெற்றிருந்த விதேக நாட்டை யடைந்தனர்; அந் நாட்டுக்குத் தலை நகர மாகிய மிதிலையை நோக்கிச் சென்றனர்; வானகத்தை யளாவிய அந்நகரத்து மதிற் புறத்தை யணுகித் தங்கினர்; அகலிகை கல்லாய்க் கிடந்த இடத்தைக் கண்ட

னர். இராமபிரான் அதனருகிற் செல்ல, அவனுடைய திருவடித் துகள் அதன்மீது பட்டவுடனே கல்லாய்க் கிடந்த அகலிகை, தன் சூளுரை வடிவம் நீங்க முன்னைய நல்லுருவம் பெற்றெழுந்தாள். அவ்வாறு எழுந்து நின்ற நங்கையைப் பார்த்து இளவரசர் இருவரும் வியப்பெய்தினர். விசுவாமித்திரன், அம்மாது கௌதம முனிவனுடைய இல்லக் கிழத்தி என்பதும், இந்திரன் கௌதம முனிவனை யெய்த்து அவளிடம் சென்றான் என்பதும், தன்னிடம் வந்தவன் இந்திரன் என்பதை யுணர்ந்தும் அவள், அவனோடு இன்புற்று இருந்தனள் என்பதும், சற்று நேரத்திற்குள் புரந்தரனுடைய வஞ்சனையை யறிந்த கௌதமன், நனி முனிந்து புருகூதனுக்கு உடம்பு முழுவதும் காண்பவர் அனைவரும் அருவருப்படையத் தக்க ஆயிரம் கண்கள் உண்டாகக் கடவன வென்றும், அகலிகை கல்லாய் வீழ்ந்திருக்கக் கடவள் என்றும் வெவ்வுரை பகர்ந்தான் என்பது மாகிய செய்தியை இராமனிடம் தெரிவித்தும், மற்றும் அவனைப் பார்த்து, "என்னை யாண்ட ஐயா! மழை வண்ணத் தண்ணலே! நீ தோன்றிய பின்னரும் இவ்வுலகத்தில் துன்பம் தலைகாட்டுமோ? அங்கு, மை வண்ணத் தாக்கிப் போரில் உன் கை வண்ணம் கண்டேன்; உன் கால் வண்ணம் இங்குக் கண்டேன். யான் எதைக் கூறி உன்னைப் புகழ்வேன், வாழ்த்துவேன்," என்று மொழிந்தான்.

அகலிகையை இராமன் வணங்க, அவளும் கீழே விழுந்து அவனுடைய திருவடிகளைப் பணிந் தெழுந்தாள். இராம லட்சுமணரோடு அகலிகையையும் அழைத்துக் கோமுனிவன், கௌதமனுடைய ஆச்சிரமம் சென்றான். அந்நால்வரையும் கௌதமன் மிக்க சிறப்புடன் வரவேற்று மகிழ்ந்தான். அகலிகையை யேற்றுக் கொள்ளுமாறு கௌதமனிடம் விட்டுக் கோசிகன், இராம லக்குவருடன் சென்று மிதிலை நகரத்துட் புகுந்தான். அந்நகரத்துக் காட்சியைக் கண்டு அயோத்தி யரசர் களித்தனர். பெரியார் பலர், அம்மூவரையும் ஆங்காங்கு வரவேற்று நல்லுரை மொழிந்து கொண்டாடினர். அம்மூவரும், சனகனுடைய கோயிலுக்கு

அணித் தாயினர். அவ்விடத்துக் கன்னி மாடத்தையும், அதனுள் ளிருந்த சீதையையும் இராமன் கண்ணுற்றுக் கழிபேருவகை கொண்டான். சீதையும் இராமனைப் பார்த்துக் களித்தாள். அந்நாள் முடிய இர வெழுந்தது. முனிவர் முதலிய அம்மூவரும் ஓர் அரண்மனையில் தங்கினர். மறுநாட் காலைச் சதாநந்த முனிவன், அவரைக் கண்டு அளவளாவி மகிழ்ந்தான். கோசிகன், அந்நாள் முழுவதையும் இனிதாகப் பலருடன் பேசிக் கழித்தான்; பிற்றை ஞான்று காலையில் எழுந்து கடன்களை முடித்து இராம லக்குவருடன் சனகனுடைய வேள்விச் சாலையைச் சார்ந்தான்.

அக மகிழ்ச்சியுடன் அம் மூவரையும் வரவேற்று முகமன் கூறி மிகப் பாராட்டினான் சனகன். கோமுனிவன், தன்னுட னிருந்த மைந்தர் இன்னவர் என்பதையும், அவருடைய குல முறைப் பெருமை இன்ன தென்பதையும், சனகனிடம் தெரிவித்து, மற்றும் அவனைப் பார்த்து, "இப்புதல்வர் உன்னிட முள்ள வில்லையும் காண்பர்," என்று சொன்ஞன். தயரதன் புதல்வரை நன்கு யுற்றுப் பார்த்து மிதிலையர்கோன் உளம் பூரித்துத் தன் செல்வச் சிறுமியாகிய சீதைக்கு அந்த இராமனே தக்க நாயகனுவான் என்று உட்கொண்டான். அரசமாதவனை நோக்கி அந்தச் சனகன், "மாதவத்தில் முதிர்ந்த முநியோய்! உம்முடைய மொழிகளைக் கேட்டு என் மனம் மிக மகிழ்ந்தது; இவ்விராமனுடைய குலச் சிறப்பை யான் அறிவேன். என் அருமைச் சீதையை இக்கொற்றவனுக்கு மணம் முடித்துத் தர யான் விரும்புகின்றேன். பார்ப்பவர் கண்களைக் கவரும் வனப்பிற் சிறந்தவனும், உயர் குலத் துதித்தவனும் கற்று முதிர்ந்த அறிவை யுடையவனும், நல் லொழுக்கமும் நிகரிலா ஆற்றலுமுடையவனும், எல்லாச் செல்வங்களையும் குறைவறப் பெற்றிருப்பவனு மாகிய இந்த இராமனை விட என் செல்விக்கு எற்ற மணமகன் வேறு யாவ னுளன்? ஆயினும், என் விருப்பத்திற் கேற்க நடக்க முடியாமைக்கு யான் வருந்துகின்றேன். சிறிதும் ஆய்ந்தோய்ந்து பாராமல் சிவபிரானுடைய வில்லை வளைப்பவருக்கே சீதையை மணஞ் செய்து

கொடுப்பதாய் முன்பு யான் செய்த உறுதியை நினைக்க, என் மனம் நைந் துருகுகின்றது. அந்த வில்லை இராமன் நாணேற்றுவானாயின், என் மன வருத்தம் நீங்கும்; இன்றேல் வரம்பற்ற துயரத்திற் குள்ளாவேன்,'' என்று சொல்லி, அந்த வரிசிலையைக் கொண்டுவர ஏவலாளர்க்குக் கட்டளை யிட்டான்.

சனகனுடைய ஆணையை யேற்றுத் தோள்வன்மையில் மிக்க ஏவலாளர் பலர், அந்தச் சிலையைத் தூக்கி வரச் சென்றனர். சிவபிரானுடைய வில்லை இராமன் பார்க்கப் போகின்றான் என்னும் செய்தி அந்நகர முழுவதும் எட்டியது. பல திறத்து மக்களும் உள்ளக் களிவோடு சனகனுடைய வேள்விச் சாலையை யடைந்து, விசுவாமித்திர முனிவனோடிருந்த மைந்தரைக் கண்டு களித்தனர்; "இந்த இராமன் நேமியானே யாவான். பரமசிவனுடைய வில்லை நாணேற்றல் இவனுக்கு ஒரு பொருளோ? இவன் அச்சிலையை வளைத்து நாணேற்றினால், அதற்கு இலக்காக யாதுளது? நம்முடைய சீதைக்கு இவனே பொருத்தமான மணாளனாவான். இவன் வில்லை வளைத்துச் சீதையை மணப்பான் என்பதிற் சற்றும் ஐய மிலது. சீதை நோற்ற நோன்பினுடைய பயன் இன்றே கைக் கெட்டியது,'' என்று பலவாறு கூறிக் கூட்டங் களாக நின்றனர்.

எண்ணிறந்த ஏவலாளர் அரிதின் முயன்று வில்லை யெடுத்துச் சுமந்து வந்தனர்; இராமபிரானுக் கெதிரிற் சிறிது தூரத்தில் வைத்து அவனை வணங்கி யொதுங்கினர். அந்தக் கார்முகத்தைப் பார்த்து அங்குக் குழுமி யிருந்த அரசர் குலத்தினர் வீரர் முதலிய ஆடவர் நடுக்க மெய்தினர். அந்நகரத்து மாந்தருட் சிலர், "நம்முடைய மன்னன் என்ன, இவ்வாறு செய்தானே? தேர்ந்த அழகையுடைய இராமனைக் கண்டதும் சானகியை அவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தலை யொழித்து, இக்கொடிய வில்லை அவன் முன்னர் கொண்டு போய் வைக்கச் சொன்னானே! இளம்பிராயத்தினனான இராமனிடம் நம் அரசன் நடந்து கொள்ளும் முறை தக்க தன்று,'' என்று சொல்லினர். வேறு சிலர், "இராமன்

இந்தச் சிலையை எளிதில் எடுத்து வளைப்பான். இப்பொழுது தான் மலர்ந்த செந்தாமரையைப் போன்ற அவனுடைய முகப் பொலிவைப் பார்த்த மாத்திரத்தானே அவனுடைய ஆண்தன்மை நமக்கு விளங்க வில்லையா? வலிய இந்த வில்லை நாணேற்றப் போகும் இராமனுக்குச் சனகன் சீதையைக் கொடுத்த லின்றி, வேறு என்ன உதவி செய்யப் போகின்றான்", என்று மெச்சிக் கூறினர்.

அங்கிருந்த அறிஞருள் ஒருவராய சதாநந்த முனிவர், அந்தச் சிலையினுடைய பெருமையையும், சீதையினுடைய வரலாற்றினையு முரைத்து, இராமபிரான் ஒருவனே அந்த வில்லை நாணேற்ற வல்லவன் என்பதையும் தெரிவித்தார். உடனே அரசமாதவன் மாதவனை நோக்க, அவனும் அம் முனிவனுடைய குறிப்பை யுணர்ந்து நெடுஞ் சிலையை நிமிர்ந்து நோக்கினன்; தன் இருக்கையை விட்டெழுந்தான். "வில் முறிந்தது" என்று எவ்வுலகத்தினரும் ஆர்த்தனர். யானைகளும் அன்னப் பறவைகளும் நாண, மங்கையர் மனங் கள் தன்னைப் பின் தொடர்ந்து வர பெருமிதத்தோடு இராமன் கார்முகத்தினிடம் சென்றான்; அதை மிக எளிதில் எடுத்து விரைவில் நாணேற்றினன். உலக நாயகனுகிய இராமபிரானுடைய வன்மையைத் தாங்க முடியாமல் அவ்வில் இற்று விழுந்தது. அதனல் எழுந்த ஓசை எல்லா உலகங் களிலும் கேட்டது. அவ்விடத்தில் இமை கொட்டாமல் பார்த்திருந்த மக்கள் எல்லாரும், இராமன் வில்லை யெடுத்த தையும், உடனே அது முறிந்த ஓசையையும் உணர்ந்தனரே யன்றி, அவ்வில்லை நாணேற்றியதை ஒருவரும் கண்டிலர்.

சீதையுடன் உலக மக்கள் எல்லாரும் களிப்பென்னுங் கட லுள் மூழ்கிபவ ராயினர். இராமன் வில்லிறுத்த செய்தியை அயோத்திக்கு ஆள் விடுத்துத் தயாதனுக்குத் தெரிவித்தான் சனகன். அதைக் கேட்டுப் பெற்ற அன்றினும் பெரி துவந்து அம் மன்னன், தன் பன்னியர், அமைச்சர், வசிட்டர், நால் வகைச் சேனையர் முதலியோருடன் புறப்பட்டுச் சில நாளில் மிதிலையை யடைந்தான். சனகன் அவரை நன்கு வரவேற் றுக் கொண்டாடினன்; முனிவர் அறிஞர் முதலியோருடன்

ஆராய்ந்து நல்லோரையிற் சீதையை இராமனுக்குத் திருமணஞ்செய் துதவினன். அத்திருமணத்துச் சடங்குகளெல்லாவற்றையும் வசிட்ட முனிவரே மறையோதி முறைப்படி செய்து முடித்தார். அரசமாதவன், இராமபிரானுடைய திருமணத்தைக் கண்டு எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டு, இராமனையும் சீதையையும் வாழ்த்தி மெய்ம்மறந்து நின்றான். சனகன், இராமபிரானுடைய தம்பியர் மூவர்க்கும் அப்பொழுதே தன்னுடைய மற்றைப் புதல்விகளைக் கொடுத்துத் திருமணம் செய்து முடித்தான்.

உலகத்தினர் எல்லாரும், "சீதையின் திருமணக் காட்சியைக் கண்டதனால் கண் பெற்ற பயனைப் பெற்றோம்," என்று வியக்கத் தக்க மிக்க காட்சியுடன் திருமணம் நடந்தேறிய பின்னர் சில மாதங்கள் வரை மண மக்களும், அவருடைய சுற்றத்தினர் நண்பர் முதலியோரும் இணையற்ற இன்பத்துடன் மிதிலையில் தங்கி யிருந்தனர். அப்பால் ஒருநாள் தயாதன், தன் மக்களையும், மருமக்களையும், மற்றையோரையும் உடன் கொண்டு, சனகனிடம் விடை பெற்றுத், தன் நகரத்தை யடையப் புறப்பட்டான். அவ ரனைவரையும் வாழ்த்தி அரசமாதவன், இராமனை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்து சென்று தவ மேற்கொண்டான். தயரதன் முதலியோரை வழியிற் பரசுராமன் எதிர்க்கத் தயரதராமன் அவனுடைய செருக்கை யொழித்தான். அதைக் கண்டு தயரதன் அக மிக மகிழ்ந்து, தன் மக்கள் முதலியோருடன் சென்று அயோத்தியை யடைந்தான். அங்கு இராமனும் சீதையும் இனிதாக வாழ்ந்திருந்தனர். அரசமாதவன் நெடுநாட்காறும் தவம் புரிந்து, துறக்கத்தைச் சேர்ந்து இன்புற்றிருக்கத் தக்க பேற்றைப் பெற்றான். தவ மியற்றிக் கொண்டிருந்த போதும் அவன், அடிக்கடி இராமனைக் கண்டு, அளவளாவிப் பேசி மகிழ்தலை வழக்கமாகக் கொண்டிருந்தான். பன்னாள் இவ்வுலகத் திருந்து, பலர்க்கும் அரிய உதவிகள் பலவற்றைப் புரிந்து, முடிவில், அந்தமில் இன்பத்து அறிவன் திரு நாட்டை யலங்கரிக்கச் சென்று, என்றும் அழியா இன்பத்தை யடைந்தான்.

---